# தமிழ் இடப் பெயராய்வு

டாக்டர் கி. நாச்சிமுத்து,
எம்.ஏ., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
கேரளப் பல்கலைக்கழகம்,
காரியவட்டம்-695 581.
திருவனந்தபுரம், கேரளம்.

பி 31, 3122: எஃப்
எம் 3

விலை ரூ. 24/-

முதற்பதிப்பு 1983

சோபிதம்-8

வெளியீடு :
டாக்டர். கே. கே. சுந்தர சோபிதராஜ்
சோபிதம் பதிப்பகம்,
ராஜமோஹன் சதனம்,
மேற்கு லூத்தரன் தெரு,
நாகர்கோவில் - 629 001.

அட்டை அமைப்பு:
திரு. பி. பி. தம்பி
எம்.ஏ.,எம்ஃபில்.,
தக்கலை.

அச்சிட்டோர்;
எஸ்.ஆர். பிரிண்டர்ஸ்,
18, பூக்காரச்சந்து,
தெற்குவெளிவீதி,
மதுரை-625 001.

# Tamil Itappeyarayvu

(Tamil Toponymy)

Dr. K. Nachimuthu
M.A., Ph.D.,
Reader,
Department of Tamil,
Kerala University,
Kariavattom-695 581,
Trivandrum, Kerala.

P 31, 3122 : f
M 3

Price : Rs. 24/-

First Edition 1983

Sobitham - 8

Publisher :
Dr. K.K. Sundara Sobitha Raj,
Sobitham Pathippagam,
Rajamohan Sadan,
West Lutheran Street,
Nagercoil - 629 001

Cover Design ;
Mr. P. P. Thampi,
M.A., M. Phil.,
Thuckalay

Printed at :
S. R. Printers, Madurai-1.

## படையல்

நினைவில் வாழும்

என்

தந்தைக்கு.

பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், எம்.ஏ., பிஎச்.டி.
இயக்குநர்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி. டி. டி. ஐ. அஞ்சல், சென்னை – 600 113.

# அணிந்துரை

'இடப்பெயராய்வுத் துறை' வளர்ந்துகொண்டு வருகின்ற தொன்று அதைப்பற்றிப் பல நூல்களும் இன்னும் வரவேண்டும். இதுவரை தெளிவான தமிழ் நூல்கள் வந்ததாக எனக்குத் தெரியவில்லை'

டாக்டர் கி. நாச்சிமுத்து அவர்கள் தமிழ் இடப்பெயராய்வு என்ற இந்நூலில் அந்த ஆய்வு முறைகளைப்பற்றி ஆழ்ந்த சிந்தனையுடனும் நுணுகிய ஆற்றலுடனும் பல செய்திகளைத் தொகுத்தும், வகுத்தும் எழுதியுள்ளார். அவர் கேரளப்பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டத்திற்குக் 'கோவை மாவட்ட ஊர்ப்பெயர்களை' எடுத்துக்கொண்டார். அதற்கு முன்பு முதுகலை வகுப்புக்குச் சோழன் பூர்வபட்டயம்கூறும் கொங்கு நாட்டு ஊர்கள் பற்றி ஆய்வு செய்தார். ஏறத்தாழ 15 ஆண்டுகளாக இடப்பெயர் ஆய்வு பற்றிய கொள்கைகளை வரன்முறைப்படுத்தி வருகின்றார்.

இந்தத்துறையில் பல நிலைகளில் பல புதிய எண்ணங்களையும் செய்திகளையும் தம் நூலில் தந்துள்ளார். இடப்பெயர் ஆய்வுக்கு இந்த நூல் ஒரு முன்னோடியாக அமையும் என்பதில் எனக்கு ஐயமில்லை. இதனை அடிப்படையாகக் கொண்டு பலநூல்கள் இன்னும் வெளிவர வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

டாக்டர். கி. நாச்சிமுத்து அவர்கள் எடுத்துக்கொண்ட காரியங்களைச் சிறப்பாகச் செய்கின்ற திறனுடையவர். அத்திறனை இந்நூல் முழுவதும் பார்க்கலாம். அவருடைய முயற்சியைப் போற்றுகிறேன்; பாராட்டுகிறேன்.

இதனைப் போன்ற பல தமிழ் நூல்களைத் தமிழ் உலகிற்குத் தரவேண்டும் என்று நான் அவரை விரும்பிக் கேட்கிறேன்.

வாழ்க! வளர்க! என்று வாழ்த்துகிறேன்.

சென்னை,
3-5-83

அன்புள்ள,
ச. வே. சுப்பிரமணியன்.

பேராசிரியர் டாக்டர் மா. இளையபெருமாள்,

எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,

தமிழ்த்துறைத் தலைவர்,

கேரளப்பல்கலைக் கழகம்,

காரியவட்டம், திருவனந்தபுரம்.

## வாழ்த்துரை

தமிழாராய்ச்சி உலகில் பண்டைக்காலம் தொட்டு வழங்கி வருகின்ற இடப்பெயர்களைக் குறித்து நுண்ணிய ஆய்வு செய்வார் ஒருசிலர். அவர்களுள் எனது நண்பர் டாக்டர். கி. நாச்சிமுத்து அவர்களும் ஒருவர்; இரா. பி. சேதுப்பிள்ளைக்குப் பின் இடப்பெயர் ஆராய்ச்சியில் முனைந்து நிற்பவர்.

'தமிழ் இடப்பெயராய்வு' என்னும் இந்நூல் ஆசிரியரின் இரண்டாவது படைப்பாகும். கொங்கு நாட்டு ஊர்ப் பெயர்களைப் பற்றிய ஆய்வாக இவரது முதனூல் வெளிவந்தது. அதன் வளர்ச்சி யாக இவ்விரண்டாவது படைப்பு விளங்குகின்றது.

இந்நூல் பதினான்கு கட்டுரைகளின் தொகுப்பு எனினும் அவையனைத்தும் ஒரே பொருள் பற்றியன என்பது இதற்குரிய சிறப் பாகும். இந்நூலின் கட்டுரைகள் ஒரு முறையான பொருள் தொடர் புடன் அமைந்துள்ளன. ஊர்கள் உருவெடுத்த முறை, அவற்றின் பெயர்களில் காணப்படும் பொதுவான அமைப்பு, இலக்கண விதிகள் முதலிய செய்திகளை ஆசிரியர் கூறியுள்ளார். ஊர்ப்பெயர்கள் மட்டு மின்றி, தமிழக ஆற்றுப் பெயர்கள் பற்றியும் கூறுகின்றார். மேலும் சங்க இலக்கியங்கள் முதலாக உள்ள தமிழ் இலக்கியங்களில் வரும் ஊர்ப்பெயர்கள் பற்றியும் ஆராய்ந்துள்ளார். இத்தகைய ஆய்வு கால ஆராய்ச்சிக்கும் துணை நிற்கின்றது.

இந்நூலில் மேற்கொண்டுள்ள ஊர்ப் பெயராய்வு ஒரு இடத்தின் வரலாற்றுப் போக்கு, நாகரீகப் போக்கு முதலியவற்றை அறிய உதவு கின்றது. மேலும் நூலின் இறுதிப் பகுதியில் இணைக்கப்பட்டுள்ள நூலடைவு, பொருளடைவு முதலியன நூலைப் படிப்பவர்களுக்குப் பயனுள்ளதாக அமைந்துள்ளன. நூலின் அமைப்பும், ஆய்வு முறை யும் ஆய்வாளர்களுக்கு முன் மாதிரியாக உள்ளன.

ஆசிரியரின் இலக்கணப்புலமை, கல்வெட்டுப் பயிற்சி, சங்க இலக்கியம், பெருங்கதை, கம்ப இராமாயணம் போன்ற இலக்கியப் பயிற்சி, மொழியியல் பயிற்சி, தமிழ், தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம் போன்ற பன்மொழிப் பயிற்சி ஆகியவை கட்டுரைகளின் இயல்பான போக்கோடு ஒட்டிச்சான்றுகளைத் தருவதற்குப் பயன்படுகின்றன.

இத்தகைய சிறந்த நூற்கள் பலவற்றை ஆசிரியர் தனது முனைப்பு உள்ளத்தால் வெளியிடுவார் என்பது உறுதி. வாழ்க அவருடைய தமிழாய்வு! வளர்க அவருடைய தமிழ்த்தொண்டு!

திருவனந்தபுரம்,
25–7–83.

மா. இளையபெருமாள்

**பேராசிரியர் கலாநிதி ஆ. வேலுப்பிள்ளை,**

பிஎச்.டி., (இலங்கை) டி. ஃபில். (ஆக்ஸ்போர்டு)

தமிழ்த்துறைத் தலைவர்,

பேராதனைப் பல்கலைக்கழகம்,

பேராதனை, இலங்கை.

## முன்னுரை

தமிழாராய்ச்சி ஆழமாகவும் அகலமாகவும் வளர்ச்சியடைய வேண்டுமென்ற கருத்து இன்று பரவலாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. தமிழ் மக்கள் பெருந்தொகையினர் வாழும் நாடுகளில் மட்டுமின்றி, அமெரிக்கா' ஐரோப்பா, ஜப்பான் முதலிய பகுதிகளிலும் அறிஞர்கள் தமிழாராய்ச்சியில் ஈடுபட்டு வருகின்றனர். இதுவரையில் ஐந்து உலகத் தமிழ் மகாநாடுகள் நடைபெற்றுள்ளன. சென்னையில் நடந்த இரண்டாவது உலகத்தமிழ் மகாநாடு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தோன்ற வழிவகுத்தது. மதுரையில் நடந்த ஐந்தாவது உலகத் தமிழாராய்ச்சி மகாநாடு தமிழ்ப் பல்கலைக்கழகம் தோன்ற வழிவகுத்தது. திருவனந்தபுரத்திலே திராவிட மொழியியற் கழகம் தீவிரமாகச் செயற்பட்டு வருகிறது. இத்தகைய முயற்சிகளின் பயனாக ஏற்பட்டுள்ள விழிப்புணர்ச்சியின் பெறுபேறுகளில் ஒன்றாகத் தமிழ் இடப் பெயராய்வு என்ற இந்த நூலைக் கூறலாம்.

இடப்பெயராய்வு தமிழறிஞர்களுக்குப் புதிய துறையல்ல என்று சிலர் வாதிக்கலாம். தமிழ் இலக்கண ஆசிரியர்கள், உரையாசிரியர்கள் தலபுராண ஆசிரியர்கள் முதலியோர் இடப்பெயராய்வு செய்துள்ளனரென்பதில் ஓரளவு உண்மையுண்டு. சுமார் முப்பத்தைந்து ஆண்களுக்கு முன்பே, **தமிழகம்-ஊரும் பேரும்** என்ற நூலும் வெளிவந்து விட்டது தான். இத்தகைய தொன்மைவாதம் தமிழாராய்ச்சியின் பல்வேறு துறைகளிலும் முன்வைக்கப்படுவதுதான். ஆனல், இக்காலத்துக்கேற்ற அறிவியல் ரீதியான ஆராய்ச்சி முறைகள் மேனுடுகளிலேயே சிறப்பாக வளர்ந்து காணப்படுகின்றன. மேனுட்டு அறிவியல் ரீதியான இடப்பெயராய்வு ஆராய்ச்சிமுறைகளை அறிமுகம் செய்து எழுந்த இந்த நூல் தமிழ் மொழியில் இந்தத் துறையில் முதல் நூல் என்று கொள்ளத் தக்கதே.

கடந்த முப்பதாண்டு காலவரலாற்றிலே கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை சாதனைகள் பலவற்றை நிகழ்த்தியுள்ளது. பேராசிரியர் வி.ஐ. சுப்பிரமணியம் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த போது இக்கால ஆராய்ச்சி முறைகளைத் துணிவுடன் கையாண்டு தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைகளுக்கு வழிகாட்டியாக அந்தத் தமிழ்த்துறை விளங்கியது. அந்தத் தமிழ்த்துறையின் பெருமையை இன்றும் எடுத்துக்காட்டும் வகையில் டாக்டர். கி. நாச்சிமுத்துவின் 'தமிழ் இடப்பெயராய்வு' என்ற இந்த நூல் அமைகிறது.

இந்த நூலை எழுதுவதற்கு டாக்டர். நாச்சிமுத்து மிகவும் தகுதியானவர்; சுமார் பத்தாண்டுகளுக்கு முன்பே கோயம்புத்தூர் மாவட்ட இடப்பெயர்களைப் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி டாக்டர் பட்டம் பெற்றவர்; இளம்வயதிலேயே ஆராய்ச்சிப்பட்டம் பெற்று விட்ட இவர் இரண்டாண்டுகாலம் ஜெர்மனியிலும் பணியாற்றியவர்; மேற்கு ஐரோப்பாவிலுள்ள இடப்பெயராய்வு நிலையங்களுக்குச் சென்று அங்கு கையாளப்படும் ஆராய்ச்சி முறைகளை நேரிலே கண்டறிந்தவர்; எழுபதுகளில் இந்தியாவிலே இடப்பெயராய்வை ஊக்குவதற்கு நடந்த முயற்சிகள் விரைவில் வேரூன்றுமையை நோக்கி வருந்துபவர். தமிழறிஞர்களுக்கு இடப்பெயராய்வின் முக்கியத்துவத்தினை எடுத்துக் காட்டி, தமிழ்நாட்டிலாவது விரிவான இடப்பெயராராய்ச்சிக்கு அத்தி வாரமிடப்பட வேண்டுமென்பதே ஆசிரியரின் அவா.

நூலின் மூன்றிலொரு பகுதி இடப்பெயராய்வு நெறிமுறைகளை எடுத்துக் கூறுகிறது. இடப்பெயராய்வியலை முழுமையாக நோக்கி அதை அறிமுகப் படுத்தும் பகுதியாக, இது அமைகிறது. மேனாடுகளில் அறிவியல் ரீதியாக இடப்பெயராய்வு வளர்ந்து வந்தவாற்றை விளக்கி, இடப்பெயராய்வின் பயனை விபரமாக நூலாசிரியர் விளக்கியுள்ளார். தொல்பொருளாய்வாளர் ஒருவர் கூற்றினைச் சான்று காட்டி, தொல் பொருளிலும் இடப்பெயர் சிறந்த மூலாதாரமென்று ஆசிரியர் வாதித்தல் முழுவதாக ஏற்றுக்கொள்ள முடியாவிடினும் இடப்பெயராய் வின் முக்கியத்துவத்தினைத் தூக்கிக்காட்ட உதவுகிறதென்ற முறையில், இந்தவாதம் ஏற்கத் தக்கதே. இடப்பெயராய்வு எவ்வெவ் ஆராய்ச்சித் துறைகளை எவ்வெவ்வாறு ஒளிபெறவைக்கிறதென்பதைத் தமிழ் எடுத்துக்காட்டுக்கள் மூலம் ஆசிரியர் விளக்குவது ஆசிரியருக்கு இத்துறையிலுள்ள புலமைக்குச் சான்று. தமிழ் நாட்டில் இடப்

பெயராய்வு எவ்வாறு நடைபெற வேண்டுமென்று ஆசிரியர் கூறும் கருத்துக்கள் அறிஞர்களின் கவனத்திற்குரியன.

நூலின் முதல் அத்தியாயம் தூய இடப்பெயராய்வியலாக அமைய, ஏனைய அத்தியாயங்கள் பிரயோக இடப்பெயராய்வியலாக அமைகின்றன. நூலாசிரியர் கோயம்புத்தூர் மாவட்டத்தைச் சேர்ந்தவராகவும் கோயம்புத்தூர் மாவட்ட இடப்பெயர்களை விரிவாக ஆராய்ந்தவராகவும் உள்ளமையால், எடுத்துக்காட்டுகள் பல இடங்களிலே கோவை மாவட்டத்தைப் பற்றியனவாகவும் கொங்கு நாட்டைப் பற்றியனவாகவும் காணப்படுகின்றன. தமிழ் நாட்டின் பிறபகுதிகளில் இடப்பெயராய்வுகள் நடந்தால் இத்தகைய கண்டுபிடிப்புகளும் இவற்றையொத்த கண்டுபிடிப்புக்களும் வெளிவரக்கூடுமென்று காட்டுவதே நூலாசிரியர் நோக்கமெனக் கொள்ள வேண்டும்.

சங்ககால ஊர்ப்பெயர்களைப் பற்றிய நூலாசிரியர் ஆராய்ச்சி சிறப்பாக எடுத்துக் கூறத்தக்கது. வரலாற்றுப் பூகோளவியல் ரீதியிலே பல்லவர்காலச் சாசனங்களிலும் சோழப்பெரு மன்னர் காலச் சாசனங்களிலும் இடம்பெற்ற ஊர்ப் பெயர்களைப் பற்றியும் வேறு சில ஆராய்ந்துள்ளமையைக் குறிப்பிட்டுள்ள நூலாசிரியர் சங்க இலக்கியங்கள் தரும் ஊர்ப்பெயர்களை ஆராய முன்வந்துள்ளார். இம் முயற்சி நூலாசிரியர் தொடர்ந்து இடப்பெயராய்வில் ஈடுபட்டு வருவதனை உணர்த்துவதோடு, அறிஞர்களுக்கு இடப்பெயராய்விலே ஆர்வத்தைத் தூண்டக் கூடிய முறையிலேயும் அமைந்துள்ளது.

தமிழக ஆற்றுப் பெயர்கள், நகர் என்ற சொல்லின் வரலாறு, தமிழ் இடப்பெயர் விகுதி ஒன்றின் புணரியல் மாற்றங்களும் அவற்றின் காலவரிசையும் என்ற அத்தியாயங்கள் முதலியன இடப்பெயராய்வு பிற ஆராய்ச்சித் துறைகளுக்கு எவ்வாறு வெளிச்சமிட்டு உதவுகிற தென்பதைப் புலப்படுத்துகின்றன.

நூலிலுள்ள பிற அத்தியாயங்களும் ஒவ்வொரு நோக்கிலேயே அமைக்கப்பட்டுள்ளன. ஆங்கிலத்திலேகூட இடப்பெயராய்வைத் தனியாக எடுத்துக்கூறும் தரமான நூல் எதுவுமில்லை என்று நூலாசிரியரே குறிப்பிட்டுள்ளார். எனவே தமிழில் இந்த நூல் எழுந்தமை வரவேற்கத் தக்கது. இடப்பெயராய்வு தமிழ் அறிஞர்களின் பொது அங்கீகாரத்தைப் பெற்றுத் தமிழ் நாட்டிலே தழைத்தோங்க வேண்டும். தமிழ் நாட்டின் வழிகாட்டலில் பிற இந்திய மாநிலங்களிலும் இடப்பெயராய்வு வளரவேண்டும்.

இலங்கையராகிய யாமும் இத்தகைய வளர்ச்சியை ஆவலுடன் எதிர்பார்க்கிறேம். இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும் இடப் பெயராய்வு நிகழ்ந்தால், இலங்கை இடப்பெயர்கள் சிலவற்றின் மர்மம் துலங்கக் கூடும். இலங்கை இடப்பெயர்களைச் சிங்களப்பெயர்கள் தமிழ்ப்பெயர்கள் எனப்பகுப்பது மேலோட்டமான பகுப்பென்றும் அவ்விடப் பெயர்களுட் சில இந்தியாவின் வெவ்வேறு பாகங்களிற், குடிபெயர்ந்தவர்களாற் கொண்டுவரப்பட்டிருக்க வேண்டுமென்றும் சிலர் கருதுவர். இந்திய இடப்பெயராய்வு இலங்கையின் வரலாறு துலங்கவும் உதவக்கூடும்.

பேராதனை, இலங்கை — ஆ. வேலுப்பிள்ளை
10-5-83

டாக்டர் இலா. குளோறியா சுந்தரமதி, எம். ஏ., பி. எச். டி.,

இணைப் பேராசிரியர்,
தமிழ்த் துறை,
கேரளப் பல்கலைக்கழகம்,
காரியவட்டம் 695 581,
திருவனந்தபுரம்.

## அறிமுக உரை

இடப்பெயராய்வு (Place name study) மொழியியலையும் வரலாறு பண்பாட்டியலையும் ஊன்றுகோலாகக் கொண்டு அறிவியலின் திட்பத்துடன் வளர்ந்துவரும் ஒரு துறை. இத்துறையில் தமிழில் நிகழ்ந்துள்ள ஆய்வுகள் ஒரு சிலவே. இந்நிலையில் தமது முதுகலை, டாக்டர் பட்ட ஆய்வுகளை இத்துறையில் செய்து பட்டம் பெற்றுத் தொடர்ந்து பத்து ஆண்டு காலமாக இத்துறையில் ஆர்வம் மீதூரப்பெற்ற டாக்டர் கி. நாச்சிமுத்து, தமிழ்ப்புலமை உலகிற்கு வழங்கியுள்ள இந்நூல் நமது வரவேற்பிற்கும் பாராட்டிற்கும் உரியது.

முதிர்ந்த ஆய்வு நுட்பமும் அதே வேளையில் கருத்துக்களை விளக்குவதில் தெளிவும் எளிமையும் ஒருங்கு அமைந்த இந்நூலைத் தமிழ்ப்புலமை உலகிற்கு அறிமுகம் செய்வதில் நான் பெருமகிழ்ச்சி கொள்கின்றேன். 186 பக்க அளவில் 14 கட்டுரைகள் பெற்ற இந்நூல், தெரிவு நூலடைவு, பொருளடைவு, முதலியவற்றால் நன்கு பயன் கொள்ளுமாறு அரண் செய்யப் பெற்றுள்ளது; இடப்பெயராய்வின் நெறி முறைகளைத் தெளிவாக விளக்கி இத்துறையின் ஆய்வுப்பரப்பை நம் முன் விரித்துள்ளது.

நூலில் அமையும் 14 கட்டுரைகளையும் வகுத்துப் பார்க்கும்போது நூலின் அமைப்புக் கீழ்க்கண்டவாறு பாகுபட அமைந்துள்ளது புலனாகின்றது: ஒரு சில கட்டுரைகள் (4) இடப்பெயராய்வின் நெறிமுறைகளை விளக்கும் இயல்புடையன. "இடப்பெயராய்வு நெறிமுறைகள்" என்ற முதற்கட்டுரையில் ஆசிரியர் இத்துறையின் ஆய்வு நெறி முறைகளையும் அதன் படிகளையும் தெளிவான சான்றுகளுடன் அறிமுகம் செய்துள்ளார். இடப்பெயராய்வு என்றால் என்ன என்பதை வரையறுத்து விளக்கி, இவ்வாய்வினால் விளையும் பயன்களைச் சுட்டிக்

காட்டி, மேலைநாட்டிலும் நம்நாட்டிலும் இத்துறையின் வரலாறு குறித்துப் பேசும் இக்கட்டுரை இடப்பெயராய்வின் தெளிவான அறிமுக மாகவும் அதன் ஆய்வு நெறிமுறைகளின் விளக்கமான வரைபடமாகவும் அமைகின்றது. 65 பக்க அளவில் நூலின் மூன்றிலொரு பகுதியை உள்ளடக்கிய இக்கட்டுரை, தனி ஒரு நூலாக விரிவு பெறுமளவு செறி வுடையது. இத்துறை ஆய்வாளர்களுக்கு வழிகாட்டியாக அமையும் இக்கட்டுரையை யாவரும் படித்துப் புரிந்து கொள்ளுமாறு எளிமையும் சுவையும் பொருந்த அமைத்துள்ள ஆசிரியர் நமது பாராட்டிற்குரியவர்.

இடப்பெயராய்வில் பொருந்தும் பகுப்பாய்வு, வகைமுறை என்ற படிநிலைகளின் பாற்பட்டனவாக மேலும் மூன்று கட்டுரைகளை ஆசிரியர் வழங்கியுள்ளார். இவற்றில் "ஊர்ப்பெயர் அமைப்பு முறைகள்" (7) என்ற கட்டுரையில் ஆசிரியர் ஒரு ஊர்ப்பெயர் எத்தனை கூறுகள் பெற்று அமையும் என்பதைச்சுட்டி, இச்சிறப்பு – பொதுக்கூறுகளின் அமைப்பை விளக்கியுள்ளார். இக்கட்டுரையில் விளக்கப்பெற்ற அமைப் பைப் பழந்தமிழ் இலக்கிய ஆதாரங்கள் வழி அணுகிப் பார்க்கும் நிலை "சங்ககால ஊர்ப்பெயர்கள்–ஒரு பகுப்பாய்வு " (9) என்ற கட்டுரை யிலும் பெரிதும் கள ஆய்வின் வழி அமைந்த தற்கால நூல்களின் துணையுடன் அணுகும் நிலை "தமிழக ஆற்றுப் பெயர்கள்" (4) என்ற கட்டுரையிலும் பொருந்தியுள்ளது.

இந்நூலில் அமையும் பெரும்பாலான கட்டுரைகள் (பதினான்கில் எட்டு) இலக்கணம், மொழியியல், இலக்கியம், வரலாறு என்ற துறை கள் இடப்பெயராய்வோடு கொண்டுள்ள பிரிக்க இயலாத பிணைப்பை எடுத்துக்காட்டும் நிலையில் அமைந்துள்ளன. இத்துறைகளின் அறிவு இடப்பெயராய்விற்குப் பயன்படும் நிலையும் இடப்பெயராய்வின் முடிவுகள் இத்துறைகளை விளக்குவதுமாகிய ஒன்றை ஒன்று தழுவிய ஆய்வுப்பாங்கு கட்டுரைகளில் நன்கு பொருந்தியுள்ளது.




* கட்டுரை எண்

"தமிழ் இடப்பெயர் விகுதி ஒன்றின் புணரியல் மாற்றங்களும் அவற்றின் காலவரிசையும்' (10) என்ற கட்டுரையில் வரலாற்று இலக்கணப் பார்வையில் இடப்பெயர் விகுதி ஒன்றை நிறுத்தி, ஒத்த மொழிக் கூறுகளின் (புது + ஊர்) வேறுபட்ட புணர்ச்சி வடிவங்கள் (பூதூர், புத்தூர், புதுவூர், புதூர்) எப்படி மொழிவரலாற்றின் முத்திரைகளாக இடப்பெயரில் புதைந்து கிடக்கின்றன என்ற உண்மையை ஆசிரியர் சிறப்பாக எடுத்துக் காட்டியுள்ளார். இதை ஒத்தே "மரூஉ ஊர்பெயர்கள் "(3) என்ற கட்டுரையில் சங்க இலக்கியத்தும் தேவார காலத்தும் பொருந்தும் சில ஊர்ப்பெயர்களின் மரூஉ வடிவத்தையும் முழுவடிவத்தையும் ஒத்துநோக்கி உருவாக்கிய மரூஉ விதிகளைப் பயன்படுத்தி, முழுவடிவங்கள் அறியப்படாத மரூஉ வடிவங்களின் மூலவடிவங்களை உருவாக்க இயலும் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். "நகர் என்ற சொல்லின் வரலாறு" (5) என்ற கட்டுரை இடப்பெயராய்வில் சொற்பொருள் வரலாறு ஆற்றும் பங்கைத் தெளிவாக்குகிறது,

"கோவை மாவட்ட இடப்பெயர்களும் கொங்கு வேளாளர்களும்" (6) என்ற கட்டுரையில் கோவை மாவட்டத்தில் கொங்கு வேளாளர் மிகுதியாக வாழும் இடங்களில் உள்ள இடப்பெயர்களின் பங்கீட்டைக் [distribution] கணக்கிட்டு, இவர்தம் குடிப்பெயர்ச்சி வரலாற்றைக் குறிப்பதுடன் இவ்விடப் பெயர்களின் முன்னொட்டுக்களில் அமையும் கொங்கு வேளாளரின் குலப்பெயர்களை எடுத்துச் சுட்டி, கோவை மாவட்ட இடப்பெயர்களில் கொங்கு வேளாளர் செல்வாக்கைப் புலப்படுத்தியுள்ளார். கொங்குநாட்டு இடப்பெயர்களினின்று கொங்கு வேளாளர் வாழ்வையும் வரலாற்றையும் சிறப்பாக அறிய முடியும்; இதற்கு மேலும் ஆழமான ஆராய்ச்சிகள் தேவை என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார். ஊர்ப்பெயர்களின் அடிப்படையில் ஊர்கள் உருவெடுத்த முறைகளை ஆய்கிறது "ஊர்கள் உருவெடுத்த முறைகள்' (12) என்ற கட்டுரை. ஆசிரியர் இருகட்டுரைகளில் (8,14) இலக்கியங்களினின்று அறியலாகும் இடப்பெயராய்வு குறித்த செய்திகளைத் தெளிவாகத் தொகை, வகை செய்தளித்துள்ளார்.

மேற்சுட்டிய பிரிவுகளில் அடங்காது எஞ்சும் இருகட்டுரைகளில் ஒன்று (13), ஜினேந்திரர் என்ற கார்மேகக் கவிஞர் ('8நூற்.) எழுதிய **கொங்கு மண்டல சதகம்** என்ற நூலின் பிற்சேர்க்கையாகத் தி. அ. முத்துசாமிக்கோனரின் பதிப்பில் (1923) இணைவு பெற்றுள்ள

**கொங்குமண்டல ஊர்த்தொகை** என்ற நூலை அறிமுகம் செய்துள்ளது. ஏனைய கட்டுரை இரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் **தமிழகம் ஊரும் பேரும்** என்ற நூலின் மதிப்பீடாக அமைந்துள்ளது.

டாக்டர் கி. நாச்சிமுத்துவின் இந்நூலில் என்னைக் கவர்ந்த சில அம்சங்களை ஆய்வாளர்க்குச் சுட்டிக்காட்டும் நிலையில் எடுத்துரைக்க விரும்புகிறேன்.

1. ஒவ்வொரு கட்டுரையும் தெளிவான அடிக்குறிப்புக்களுடன் தேவையான இடங்களில் பட்டியல்களுடனும் அமைந்துள்ளமை.

2. நூலைக் கற்போர் இத்துறையில் மேலும் அறிவு பெறவும், நூல் நுவன்ற பொருளைத் தேவையான போது அதிக சிரமமின்றிப் பார்க்கவும் வசதியாக இணைவு பெற்றுள்ள தெரிவு நூலடைவு, பொருளடைவு முதலிய பகுதிகள்.

3. ஆசிரியரது ஆய்வுக் கண்ணோட்டத்தில் பொருந்தியுள்ள பல்துறை அளாவிய நெறி.

4. நூலில் பல கட்டுரைகளில், இத்துறையில் இன்னும் நிகழவேண்டிய ஆய்வுப் பரப்பு சுட்டிக்காட்டப் பெற்றபாங்கு. காட்டு: கட்டுரை 6, 13 முதலியவை.

5. ஆய்வின் செறிவும் கருத்துக்களை வழங்கியுள்ள நிலையில் பொருந்திய தெளிவும் எளிமையும்.

இத்துறையில் இன்னும் பல நூல்களைத் தமிழ்ப்புலமை உலகிற்கு ஆசிரியர் வழங்கவேண்டும் என்ற ஆர்வத்துடன் வாழ்த்துகிறேன்.

காரியவட்டம்
**19–5–83**

**இலா. குனோறியா சுந்தரமதி**

# ஆசிரியர் உரை

தமிழ் இடப் பெயர்களைப் பற்றிய ஆய்வில் பதினைந்து ஆண்டு காலமாக ஆர்வம் செலுத்திவந்ததன் விளைவுகளில் ஒன்றே தமிழ் இடப்பெயராய்வு என்ற இந்நூல்.

கொங்கு நாட்டு இடப்பெயர்களை ஆராயத் தொடங்கியபோது' இடப்பெயராய்வின் கொள்கைகள், பயன்முறை, நடைமுறை முதலிய அடிப்படைகளை விளக்கும் நூல் ஒன்று இல்லாத குறையை உணர நேர்ந்தது. இதுபற்றி மேலை நாட்டில் வெளியாயிருந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள், நூல்கள் சிலவற்றைத் தருவித்துப் படித்த போது மேனாட்டினர் கையாளும் ஆய்வு முறைகளை ஓரளவு அறியும் வாய்ப்புக் கிடைத்தது. பின்னர் நம் நாட்டுச் சூழலில் சொந்த அனுபவம் மூலமும் வல்லார் வாய்க் கேட்டும் பல ஆய்வியல் அடிப்படைகளைக் கற்றுக் கொள்ள முடிந்தது. அவ்வாறு கற்றுக்கொண்ட செய்திகளைப் பிறரும் அறியும் பொருட்டு இடப்பெயராய்வை விளக்கும் ஒரு நூல் வெளியிட ஆர்வம் ஏற்பட்டது.

மாணவர்க்குக் கற்பிக்கவும், பணிக்காகவும் வெவ்வேறு துறைகளில் கவனம் செலுத்த வேண்டிவந்ததாலும், பயன்முறை அனுபவம் மூலம் மேலும் எண்ணங்கள் செப்பமுறட்டும் என்ற எண்ணத்தாலும் நூல்வடிவாக்க முயற்சி செயல்படாமலேயே நின்றிருந்தது இனியும் சுணக்குவது நன்றன்று என்று பலரும் வற்புறுத்தியதால் இடப் பெயராய்வு பற்றி நான் அவ்வப்பொழுது கருத்தரங்கு, ஆய்விதழ் போன்றவற்றிற்கு எழுதிய கட்டுரைகளில் சிலவற்றைப் பொருள் தொடர்பு நோக்கித் தொகுத்து இந்நூலாக வெளியிடத் துணிந்தேன்.

இந்நூலில் கட்டுரைகள் அச்சிடப்பட்ட வரிசை முறையிலன்றி 1, 2, 10, 3, 12, 7, 14, 8, 9, 4, 5, 13, 6, 11 என்ற முறையில் வாசித்தால் தமிழ் இடப்பெயராய்வு பற்றிய அறிமுகம், வரலாறு, இடப்பெயர்களின் இலக்கணம், இடப்பெயர்களின் தோற்றம், அமைப்பு, இலக்கியமும் இடப்பெயர்களும், இடப்பெயர்களும் பிற துறைகளும், இடப்பெயர் ஆய்வு நூல்கள் ஆகியன பற்றி முறையாக அறிந்து கொள்ளலாம்; கட்டுரைகளுக்கிடையே உள்ள பொருள் தொடர்பும் இதனால் ஒருவாறு தெளிவாகும்.

ஒரு பொருள் பற்றிய கட்டுரைத் தொகுப்பு நூலாக அமைந்து விட்டதால், கூறியது கூறல், முரண்படக் கூறல், கலைச்சொல் (எ-டு. ஊர்ப் பெயராய்வு, இடப் பெயராய்வு), எழுத்து (எ-டு.லை,லை) போன்றவற்றில் சீரின்மை, தெளிவின்மை முதலிய குறைகள் நேர்ந்து விட்டன. மேலும் சில கட்டுரைகள் பொருளளவில் முற்றுப் பெருதவை யாகவும் (எ-டு. 13, 14) அமைந்து விட்டன.

அதோடு தட்டச்சுப் படிவங்களும், அச்சுப் படிவங்களும் சரி யாகத் திருத்தப் படாததால் பல புதிய பிழைகள் (எ-டு. சந்திப்-பிழைகள்) வேறு நுழைந்து விட்டன. ஓர் ஆய்வு நூலில் இவை தவிர்க்கப் பட்டிருக்க வேண்டியனவே. இவற்றில் பெரும் பிழைகளை மட்டுமே பிழைதிருத்தத்தில் கொடுத்துள்ளேன். ஏனையவற்றையும் திருத்தி வாசித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

நூலின் இறுதியில் பொருளடைவும், பெயரடைவும் (நூல், ஆசிரியர் பெயர்கள் மட்டும்) கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றுடன் சேர்க்க எண்ணியிருந்த இடப்பெயரடைவு பக்க மிகுதி கருதி இறுதியில் விடப்பட்டது. அது போன்றே தமிழ் இடப்பெயராய்வு பற்றி ஒரு நூலடைவு தயாரித்ததும் அளவு மிகுதி கருதிக் கொடுக்கப்படவில்லை. அதற்குப் பதில் தெரிவு நூலடைவு மட்டும் தரப்பட்டுள்ளது. 'தமிழ் இடப்பெயராய்வு நூலடைவு' தனி நூலாக வெளியிடப்பெறும்.

'இடப்பெயராய்வு' என்ற துறையை எனக்கு முதலில் சுட்டிக் காட்டியவர் திரு. டாக்டர். இர. பன்னீர் செல்வம் (தார்வாட்) ஆவார். இத்துறையில் புதிய செய்திகளைக் கற்கவும், ஆய்வு செய்யவும் காரண மாயிருந்தவர்கள் பேராசிரியர் டாக்டர் வி.ஐ. சுப்பிரமணியம் அவர் களும், பேராசிரியர் டாக்டர். ச.வே. சுப்பிரமணியன் அவர்களும் ஆவர். திரு. டாக்டர். அ.தாமோதரன்(ஹைடல்பர்க்) அவர்களும் திரு. டாக்டர். பா.ரா. சுப்பிரமணியன் (கொலோன்) அவர்களும் இத்துறை பற்றிய வெளிநாட்டுக் கட்டுரைகள், நூல்கள் முதலியவற்றை எனக்கு அவ்வப்போது அனுப்பி ஊக்குவித்தனர். திரு. டாக்டர். சி. சுந்திய மூர்த்தி (இலங்கை) உற்ற நண்பராய் உடன் இருந்து பல கருத் துக்களை எடுத்துக் கூறி விவாதித்து என் அறிவு வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தவர். திரு. டாக்டர். தா.வே. வீராசாமி (சென்னை) என் ஆய்வு முயற்சிகளில் பல நிலைகளில் உதவியுள்ளார். நான் ஜெர்மனி சென்று ஜெர்மானிய ஆய்வு முறைகளை அறியும் வாய்ப்பைத் தந்த வர் பேராசிரியர் டாக்டர் யானர்ட் (கொலோன் பல்கலைக்கழகம்)

நான் சென்ற பொழுதெல்லாம் இன்முகத்துடன் வரவேற்று அறிவு விருந்து நல்கினர், இடப்பெயராய்வு மூதறிஞரும் அனைத்துலக இடப்பெயராய்வு மையத் (லூவெய்ன், பெல்ஜியம்) தலைவருமான பேரா. டாக்டர். எச். ட்ரையே. இவர்களை எல்லாம் இப்போது நன்றி உணர்வோடு நினைத்துக் கொள்கிறேன்.

இந்நூலிலுள்ள கட்டுரைகளைப் படி எடுப்பது, சரி பார்ப்பது ஆகியவற்றிற்கு உதவிய ஆய்வாள நண்பர்கள் பலர்; அவர்களில் திருமதி ஷீலா ஜெயசீலன், திருவாளர்கள் மா. நயினர், வெ. கேசவ ராஜ், சு. நடராசன், சு. தங்கதுரை, ஜேம்ஸ் தேவ கமல அருமைராஜ், செல்விகள், பிரபாவதி, அம்பிகா, சுஜாதா முதலியோர் செய்த உதவிகள் குறிப்பிடத்தக்கன. அவர்களுக்கு நன்றி தெரிவிக்கும் கடப்பாடுடையேன்.

இந்நூலுக்கு அணிந்துரை, வாழ்த்துரை, முன்னுரை அறிமுக உரை ஆகியவற்றை அளித்த பேராசிரியர் டாக்டர் திரு. ச. வே. சுப்பிரமணியன், பேராசிரியர் டாக்டர் மா. இளையபெருமாள், பேராசிரியர் டாக்டர் ஆ. வேலுப்பிள்ளை, டாக்டர். திருமதி. குளோறியா சுந்தரமதி ஆகிய அறிஞர் பெருமக்களுக்கு என் நன்றி.

நூலுக்கு அழகான அட்டைப்படம் வரைந்து தந்த திரு. பத்மரூபன் தம்பி அவர்களுக்கு என் நன்றி உரியது.

இந்நூலை எப்படியும் வெளிக்கொணர்ந்து விடுவது என்று தீர்மானித்து என்னுடன் போராடிக் கட்டுரைகளைத் திருத்தி எழுதச் செய்து, அவற்றைப் படி எடுத்தும் சரிபார்த்தும், அகாலங்களில் திருவனந்தபுரம், மதுரை, நாகர்கோவில் முதலிய இடங்களுக்குப் பயணம் மேற்கொண்டும், அச்சகத்தில் இரவு பகலாக இருந்து ஆர்வத்துடன் அயராது அச்சுப்படிகளைத் திருத்தியும் இந்நூலை வெளிவரச் செய்த திரு. டாக்டர். கே. கே. சுந்தரசோபிதராஜின் உதவி என்றும் மறக்கற்பாலதன்று. அவருக்கு என் பாராட்டுதல் களையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இறுதியாகக் குடும்பப் பொறுப்புக்களுடன் அமையாது, நூல் உருவாகும் போது படி எடுத்தல், சரிபார்த்தல் முதலியவற்றில் ஆர்வத்துடன் முன் வந்து கை கொடுத்து உதவிய என் துணைவி வேணிக்கு என் அன்பும் வாழ்த்துக்களும்.

கி. நாச்சிமுத்து

## பதிப்பகத்திலிருந்து ...

நண்பர்களின் நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டு வந்த சோபிதம் பதிப்பகம் இப்போது கேரளப்பல்கலைக் கழகத் தமிழ்த்துறை இணைப் பேராசிரியரான டாக்டர். கி. நாச்சிமுத்து அவர்களின் "தமிழ் இடப்பெயராய்வு" என்னும் நூலை வெளியிடுகிறது. இடப்பெயராய்வின் நெறிமுறைகளை விளக்கும் இந்நூல் ஆய்வாளர்களுக்கு இடப்பெயர் பற்றிய ஆய்வு செய்யத் துணை நிற்கும் என்பதில் ஐயமில்லை.

நூலைப் படிக்கும் ஆய்வாளர்களும், ஆய்வு வழிகாட்டிகளும், பேராசிரியர்களும், தமிழ் ஆய்வில் ஆர்வமுடையோரும் தமிழறிந்தோரும் நண்பர்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதுடன், தங்கள் கல்லூரி நூலகங்களுக்கும் பல்கலைக் கழக நூலகங்களுக்கும் இந்நூலைச் சிபாரிசு செய்வதன் மூலம் இது போன்ற பயனுடைய ஆய்வுக் கட்டுரைத் தொகுதிகள் பல வெளிவர ஊக்கமளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந் நூலை அச்சேற்றித் தர இரவு பகலாக உழைத்த மதுரை எஸ். ஆர். பிரிண்டர்ஸ், அச்சக உரிமையாளர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் சோபிதம் பதிப்பகத்தின் உளம் நிறைந்த நன்றி

இந் நூல் வெளிவரத் துணை நின்ற அனைவருக்கும் சோபிதம் பதிப்பகத்தின் நன்றி!

*சோபிதம் பதிப்பகம் சார்பில்,*

**Dr. K. K. சுந்தர சோபிதராஜ்.**

## உள்ளுறை

# 1. இடப்பெயராய்வு - நெறிமுறைகள்

0.1. இடங்கள், ஆட்கள் போன்றவற்றின் பெயர்கள், பொது நிலையில் பெயர்ச் சொற்களாக இருப்பினும் அவைகள் மொழியின் மற்ற சொற்களிலிருந்து பல நிலைகளில் மாறுபட்டுச் சிறப்புப் பெயர்கள் என்ற நிலையில் சில சிறப்பியல்புகளோடு விளங்குகின்றன. இப் பெயர்கள் மொழியில் ஏற்படும் பொது மாற்றங்கட்கு உட்பட்டும் உட்படாமலும் நிற்கும் வல்லமை உடையன. மொழியிலுள்ள மற்ற சொற்களைவிட நிலைபேறுடைய இச் சொற்கள் வரலாற்றோடு நேரடித் தொடர்பு கொண்டு, பழமை எச்சங்களாக (fossil remains of the past) நின்று மனித வரலாற்றையும் பண்பாட்டையும் விளக்கும் ஆற்றலுடையன; மனிதக் கற்பனைக்கு இடம் தந்து கொண்டே இருந்து, புராணம் நாட்டுக் கதைகள் ஆகியவனவற்றைப் படைக்கும் சக்தி வாய்ந்தன; எல்லாவற்றிற்கும் மேலாக, எல்லா மொழிகளிலும் எளிதில் ஊடுருவிச் செல்லும் பொதுத் தன்மை உடையன.[1] சுருங்கச் சொன்னால் இடப்பெயர்களை இடவரலாற்றின் காலப் பெட்டகம் (Time capsule of local History) என அழைக்கலாம். இவ்வாறு மொழியியல், வரலாறு, பண்பாட்டியல், நாட்டிலக்கியம் ஆகிய பல துறைகளோடு உறவுடைய பெயர்கள், மொழியில் ஒரு கூறாக இருப்பதால் மொழியியலில் உள்ளடங்கும் இயல்பினதாக இருந்தும், சில சிறப்பியல்புகளால் பெயராய்வு (Onomastics) என்ற தனித்துறையாக வளர்ந்திருக்கிறது. ஆங்கிலத்தில் (Onomastic Sciences) என்றழைக்கப்படும் பெயராய்வு ஆட் பெயராய்வு (Anthroponymy), இடப் பெயராய்வு (Toponomy) என்ற இரண்டாகப் பிரிகிறது. இங்கு இடப் பெயராய்வினைப் பற்றி விளக்குவோம்.

0.2 ஆங்கிலத்தில் Place name Studies என்றும், Toponomy என்றும் அழைக்கப்படுவதைச் சிலர் தமிழில் "ஊர்ப் பெயராய்வு"

---

1. **Encyclopaedia Britanica,** Vol. 15 (1967) See:**Names**

என்பர். ''ஊர்ப்பெயராய்வு'' என்பது சிற்றூர், பேரூர், மலை, குன்று தெரு, வீடு, வெளி, பொதுவிடம், வயல், மேய்ச்சல் நிலம் முதலிய பலவற்றில் சிற்றூர், பேரூர் முதலிய குடியிருப்புகளின் பெயர்களைப் பற்றிய ஆய்வை மட்டும் குறிக்கிறது. மேற்கண்ட எல்லா இடங்களின் பெயர்களையும் தழுவுவதற்கு ''இடப்பெயராய்வு'' என்று பொதுநிலையில் பெயர் கொடுப்பது நல்லது. பெரும்பான்மை நோக்கி ''ஊர்ப் பெயராய்வு'' என்பது ஒரு வகையில் பொதுப் பெயராக அமைதல் பொருந்துமாயினும் தெளிவும் நுணுக்கமும் கருதி ''இடப்பெயராய்வு'' அல்லது ''இடப்பெயரியல்'' என்பதே விரும்பத்தக்கது.

0.3 கற்றவரிடமும், கல்லாதவரிடமும், இடப்பெயராய்வினைப் பற்றித் தவறான கருத்துக்கள் சில உள்ளன. இடப் பெயராய்வு என்பது ஒரு பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே அதனை விளக்க - சொற் பொருள் விரிப்பதோ, கதை சொல்வதோ செய்யும் சாதாரண வேலை என்று நினைக்கிறார்கள். இரண்டாவதாக, இப்பெயராய்வு, பெரும் பயனற்ற பொழுது போக்கும் சொல்விளையாட்டு என்றும் நினைக்கிறார்கள். இத் தப்பெண்ணங்களுக்குக் காரணம், இவ்வாய்வில் இதுவரை ஈடுபட்டிருந்த பொழுதுபோக்கு ஆய்வாளர்களின் செயல் களால் இவ்வாய்வு தந்த எளிமைத் தோற்றமும், இவ்வாய்வின் முறைகளைப் பற்றிய அறிவின்மையுமே ஆகும். இங்கு இடப்பெயராய்வு வரலாறு, அதன் நெறிமுறைகள், பயன்கள், இனி நடக்க வேண்டியவை ஆகியன பற்றி முறையாகக் கூறுவோம்.

0.4 இடப்பெயராய்வின் நோக்கம், இடப்பெயர்கள் தோன்றியதன் காரணத்தையும், அதன் உண்மைப் பொருளையும் விரிப்பது தான். ஆனால் அது எல்லோரும் நினைப்பதைப்போல அவ்வளவு எளிதானதல்ல. சில இடப்பெயர்களின் பொருளைச் சாதாரண மக்களிடமும், படித்தவரிடமும் கேட்டால் உடனே அவர்கள் அவற்றைப் பிரித்துப் பொருள் சொல்வதைப் பார்க்கிறோம். ஆனால் கூர்ந்து நோக்கினால், விளக்கத்திற்குள்ளாகும் பெயரின் தற்கால வடிவம், மூலப்பெயரின் திரிந்த வடிவமாயிருக்கும். எனவே தற்காலப் பெயர் வடிவத்திற்குக் கொடுக்கப்படும் பொருள் விளக்கம் உண்மையான மூலப் பெயரின் விளக்கமாகாது. அடுத்ததாகக் கொடுக்கப்படும் பொருள் - அப் பெயரின் பல பொருளில் ஒன்றாக இருக்கலாம். இது தான் இதன் பொருள் என்று துணிந்து கூறத் துணைச் சான்றுகள் தேவை. எனவே பெயர்களின் உண்மைப் பொருளை அறிய, மூல வடிவத்தையும் உரிய துணைச் சான்றுகளையும் தேடவேண்டும். இவ்வாறு

செய்யும் 'பொழுதுதான் அது பொழுது போக்கு அல்லது கதை சொல்லல் என்ற நிலை மாறி அறிவியலோடுபட்ட 'பெயராய்' வாக மாறுகிறது. இனி இங்கு அறிவியல் ரீதியான அப்பெயராய்வு முறைகளைச் சுருக்கமாக விளக்குவோம்.

## இடப்பெயராய்வின் வரலாறு

1.1 மேல் நாடுகளிலும் இடப்பெயர் ஆய்வுகள் தோன்றிச் சில காலமே ஆகிறது. கோட்பிரைடு வில் ஹெல்ம்லெய்ப்னிஷ் (1768) தான் இடப்பெயர் ஆய்வுகளின் முக்கியத்துவத்தை முதலில் எடுத்துரைத்தவர். 1840 வரை ஐரோப்பிய நாடுகளில் நடந்த தொடக்க முயற்சிகளைப் பார்க்கிறோம். 1841 லிருந்து முறையான இடப்பெயர் ஆய்வுக்காலகட்டம் தொடங்குகின்றது. மொழிநூல் (Philology) வளர்ச்சி - ஊர்ப் பெயர் ஆய்வுகளுக்கு ஒரு உந்து சக்தியாக அமைந்தது. Foestermann இன் Alt-deutsches Hamenbuch, Issac Taylor இன் Words and Places முதலியவை இக்காலத்திய முக்கிய முயற்சிகளாம். 1871–1885 காலத்தில் ஊர்ப் பெயராய்வு செழித்து வளர்ந்தது. J. J. Egli – இக்காலத்தில் ஊர்ப்பெயர் ஆய்வு செய்தவர்களில் முக்கியமானவர். 2

1.2 இதற்குப் பிறகு, பழம் வரலாற்றுப் பாரம்பரியமிக்க ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும் ஊர்ப்பெயர்கள் மிக கவனத்தோடு ஆராயப்பட்டன. தனிப்பட்ட அறிஞர்களும் அரசுகளும் இவற்றை ஆராயவும் பெயர்களைத் திட்டப்படுத்தவும் தனிப்பட்ட அமைப்புக்களை நிறுவினர்; விரிவான அளவாய்வுகள் (Survey) செய்து அவற்றைத் தொகுத்து ஆவணக்காப்பகங்களை ஏற்படுத்தினர். அடிக்கடி அனைத்துலகப் பெயராய்வு - மாநாடுகளும் கருத்தரங்குகளும் நடக்கின்றன. இடப்பெயர்களில் பி. எச். டி., முதலிய ஆய்வுகளை மேற்கொள்ளுமாறு மாணவர்களையும் ஊக்குவிக்கின்றனர். அடால்ப்பாக் (German), Dauzat (French), A. H. Smith, Sir. F. Stenton Allen Mawer, Eilert Ekwal (England), G. R. Stewart, E. Pulgram, Gardiner, F. L. Utley (U. S. A.), H. Draye (Belgium) முதலியோர் இவ்வாய்வு நெறிமுறையோடு வளரச் செய்துள்ள பணிகள் குறிப்பிடத்தக்கவை.

---

2. Severine Silva, **Toponomy of Canara**, 1963, Bombay, PP. 1–5.

1.3 சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு நிறுவப்பட்ட ஆங்கில இடப்பெயராய்வுக் கழகம் உலக இடப் பெயராய்வு முயற்சிகளில் ஒரு முன்னோடியாகும். இக்கழகம் இப்போது நாட்டிங்காம் பல்கலைக்கழக ஆங்கில மொழித்துறையில் இருந்து செயல்பட்டு வருகிறது. இக்கழகம் ஆண்டுதோறும் கருத்தரங்குகள் நடத்துகிறது. ஆய்விதழ் ஒன்றையும் வெளியிடுகிறது. அதோடு, தனிப்பட்ட அறிஞர்களும், மொழித் துறைகளும் இடப்பெயராய்வு நடத்தத் தூண்டி அதற்குரிய ஆலோசனைகள் அளிக்கிறது. அவ்வாறு திரட்டப் பட்ட செய்திகளை - இதுவரை 50க்கு மேற்பட்ட நூல்களாக வெளியிட்டிருக்கிறார்கள். சரியாகத் திட்டமிட்டு உழைத்தால் எத்தகைய வெற்றி கிடைக்கும் என்பதற்கு இது உதாரணம். ஸ்காட்லாந்திலும் இத்தகைய கழகங்களும், ஆய்வுகளும் நடக்கின்றன. அமெரிக்காவிலுள்ள அமெரிக்கப் பெயராய்வுக் கழகம் Names என்ற இதழை 1952லிருந்து நடத்தி வருகிறது.

1.4 1923-இல் பெல்ஜியத்திலுள்ள லூவெய்ன் நகரிலுள்ள கத்தோலிக்கப் பல்கலைக் கழகத்தில் 'Prof. Von de Weyar' ஆல் பெயராய்வு நிறுவனம் ஒன்று (Institute of Onomastic Sciences) நிறுவப்பட்டது. 1949-ல் ஐரோப்பிய அறிஞர்களின் முயற்சியால் Unesco சார்பில் அனைத்துலகப் பெயராய்வுக் குழு (International Committee of Onomastics Sciences) ஒன்று உருவாக்கப்பட்டது. இதனுடைய அனைத்துலகப் பெராய்வு மையம் (International Onomastics Centre) மேலே குறிக்கப்பட்ட லூவெய்ன் நகரில் அமைக்கப்பட்டது.* இவ்வமைப்பில் ஐம்பதுக்கும் மேற்பட்ட உலக நாடுகள் பங்கெடுக்கின்றன. இந்த மையத்தின் நோக்கம் உலக இடப்பெயராய்வுகள் பற்றிய செய்திகளையும் நூலடைவுச் செய்திகளையும் திரட்டித்தருவதும், இடப்பெயராய்வு அறிஞர்களிடையே கருத்துப் பரிமாற்றத்திற்கு உதவுவதுமாகும். அதுமட்டுமின்றி, மூன்றாண்டுக்கு ஒருமுறை அனைத்துலகப் பெயராய்வுக் கருத்தரங்குகளும் நடத்தி வருகின்றது. இதுவரை 14 கருத்தரங்குகள் நடந்துள்ளன. போன மாநாடு 1981- ஆகஸ்டு மாதத்தில், அமெரிக்காவிலுள்ள அன் ஆர்பரில் நடந்தது.

1. 4. 1 1925லிருந்து அப்பல்கலைக்கழக ஆய்வு மாணவர்கள் மூலம் சுமார் 200 பிளமிஷ் ஊர்களிலுள்ள இடப் பெயர்களைப்

---

* *மேற்கண்ட நிலையத்திற்கு 7-12-80லும் பின் 8-3-81லும் நான் நேரில் சென்று அதன் தலைவரான பேரா. Dr. H. Draye உடன் தங்கியிருந்து அவர்களின் ஆய்வுகளை நேரில் கண்டேன்.*

பற்றித் திரட்டப்பட்ட பதினையாயிரம் துண்டுத் தாள்களையும் அவற்றின் மைகிரோபிஷ் படிகளையும் அவர்கள் ஆவணக் காப்பகத்தில் காணலாம். இவை பற்றி அவ்வப்போது பல தனி ஆய்வுரைகளும் (monographs) தயாரிக்கப்பட்டுள்ளன. தங்களிடமுள்ள 15000 துண்டுகளையும் அடிப்படையாகக் கொண்டு கம்பியூட்டர் மூலம் அகரவரிசையில் மொத்த அடைவும், பின் முன்னான அடைவும் முக்கிய இடப் பெயர்க்கூறுகளின பட்டியலும் தயாரித்து வைத்திருக்கின்றனர்.3

---

3. Molemans 'Thiry, Handleiding Bij Het Corpus, Naamkundig Repertorium, Machinale Bewerking Van de Onuitgegeven Toponymische Dokumentatie vit Nederlands' Talig Belgie (1925-1975), 1978 Instituut Voor Naankunde Leuven.

இந்த இடத்தில் ஒரு முக்கியமான கருத்தைக் குறிப்பிடவேண்டியுள்ளது:

மேல் நாடுகளில் ஆராய்ச்சிக்காகத் திரட்டும் பணியில் பயன் படுத்திய துண்டுத்தாள்கள் வரைவுத் தாள்கள் முதலியவற்றை ஆராய்ச்சி முடிந்த பின்னும் காத்துப் பேணி வைக்கிறார்கள்; இவைகளே காலப் போக்கில் 'ஆவணக்காப்பகங்களாக (Archives) உருவாகியுள்ளன. நம் தமிழகத்தில் சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து வெளியான தமிழ்ப் பேரகராதிக்குத் தயாரிக்கப்பட்ட துண்டுத் தாள்கள் வரைவுகள் என்ன ஆயின? தமிழ்க்கலைக் களஞ்சியத்திற்கு இது போல தயாரிக்கப்பட்டவைகள் என்ன ஆயின? என்பது தெரியவில்லை.

கேரளப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியன் முதலியோர் காலத்தில் சங்க இலக்கியம், காப்பியங்கள் மற்றும் பல தமிழிலக்கியங்களை சொல்லடைவு செய்யத் தயாரித்த துண்டுத் தாள்கள் போற்றி வைக்கப் படாமல் அழிந்துவிட்டன. அவைகளைப் போற்றி வைத்திருந்தால் அவற்றிலிருந்து தமிழிலக்கியம் முழுமைக்கும் மொத்த அடைவுகள் தயாரிக்கவும், தமிழுக்கு வரலாற்று முறை அகராதிகள் தயாரிக்கவும் ஆவணக்காப்பகம் உருவாக்கவும் உதவியாக இருந்திருக்கும். ஆனால் இனி அத்தகைய மொத்த அடைவுகள், வரலாற்று அகராதிகள்

1.4.1.1 இவர்கள் 1950லிருந்து வெளியிடும் ஒனோமா என்ற ஆய்விதழ் பெயராய்வு பற்றிய நூலடைவுக்குறிப்புகளையும் செய்திகளையும் தாங்கி வருகிறது.

1.5 ஜெர்மனியில் முன்பே பல ஆய்வுகள் நடந்துள்ளன. தற்போது மைன்ஸ், பான், கீசன், சார்புருய்க்கன் முதலிய பல்கலைக்கழகங்களில் இடப்பெயராய்வுகள் தீவிரமாகச் செய்யப்பட்டு வருகின்றன. *

1.5.1. சார்புருய்க்கனில், கீசனில் செய்ததைப் போன்று தற்போது "வயல், தோட்டப் பெயர்களைத்" திரட்டும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள். பழைய எழுத்துச் சான்றுகளிலுள்ள வரலாற்றுப் பெயர்களையும் வழக்கிலுள்ள பெயர்களையும் இரண்டு விதமான முறையில் திரட்டிக் கொண்டிருக்கிறார்கள்; அவற்றை கம்பியூட்டர் வழி பகுப்பாய்வு செய்கிற விதத்தில் திரட்டி வருகிறார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.4

---

செய்யப் புகுவார் மீண்டும் புதுத் துண்டுத் தாள்களைத் தயாரித்தாக வேண்டும். இதற்கு எத்தகைய பொருட்செலவு, உழைப்பு, நேரம் ஆகியன வேண்டும் என்பதைக் கூறத் தேவையில்லை. மீண்டும் செய்வது வீண் வேலையே; ஆனால் செய்து தான் தீர வேண்டும். நம்மைப் போன்ற ஏழை நாடுகளுக்கு இது ஒரு பெரிய வீண் ஆடம்பரச் செலவு. இவற்றை முன் கூட்டியே தீர்க்கதரிசனத்துடன் திட்ட மிட்டிருந்தால் இது நிகழ்ந்திருக்காது. கேரளத்தில் மட்டுமின்றி சென்னை, மதுரை, அண்ணாமலை முதலிய இடங்களிலும் இது போலவே நிகழ்ந்திருக்கிறது. எனவே இனியாவது தமிழ்த்துறைகளும் பல்கலைக் கழகங்களும் விழிப்படைந்து தங்கள் ஆய்வுக்கு சேகரிக்கப்பட்ட அடிப்படைச் செய்திகளைப் பாதுகாத்து வைத்து தங்கள் துறைகளில் ஆவணக் காப்பகங்கள் அமைப்பார்களாக.

* *என்னுடைய இரண்டாண்டு (1979–81) ஜெர்மன் வாழ்க்கையின் போது சார்புருய்க்கன் பல்கலைக் கழகம் சென்று அவர்கள் பணியினைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது.*

4. Haubrichs, W., Untersuchung der Flurnamen der Saarlandischen Gemeinden, Fachrichtung 8.1 Germanistik, Universitat des saarlandes.
Hans Ramge, Wege und Aufgaben der Flurnamen forchung in Hessen, Mitteilungen des Hessischen Flurnamenarchivs GieBen, GieBen, 1980.

1.6 ஆஸ்ட்டிரியாவில் பேரா. கிரான்ஸ்மேயர் போன்ருேர் தலைமையில் மிகப்பல ஆய்வுகள் நடந்துள்ளன. பிரான்சில் மிகச்சிறந்த ஆய்வுகள் நடந்துள்ளதாகப் பேரா. எச். ட்ரையே குறிப்பிடுகிருர். அது போலவே கிழக்கு ஐரோப்பாவிலுள்ள பொதுவுடைமை நாடுகளிலும், ருஷியாவிலும் சிறந்த இடப் பெயராய்வுகள் நடந்துள்ளதை ஒனோமா இதழில் பார்த்தால் அறியலாம்.

## இந்தியாவில் இடப்பெயராய்வு

1.7.0. இந்தியாவில் இடப்பெயர்களைப் பற்றிய ஆய்வுகளை ஸ்தலபுராணங்கள் போன்ற நூல்களிலே பார்க்கலாம். ஆனல் முறை யான ஆய்வுகள் மேல் நாட்டு மாதிரியைப் பின்பற்றியே தொடங் கப்பட்டன.

தமிழ் நாட்டின் வள்ளலார் இராமலிங்கரும் (1828 – 1874) கேரளத்தில் சட்டம்பிசுவாமிகளும் (1853-1925) ஊர்ப்பெயர் ஆராய்ச்சி யில் அக்கறை காட்டியிருந்தனர். இந்தியப்பெயராய்வு பற்றி வந்த கட்டுரைகள், நூல்களின் எண்ணிக்கை சுமார் 200 இருக்கும். இதிலிருந்தே இந்தியாவில் பேசப்படும் பல மொழிகளில் பெயர்கள் இன்னும் சரியாக ஆராயப்படவில்லை என்பதை அறியலாம்.

இடப்பெயர்களைப் பற்றிய கட்டுரைகள் Journals of Asiatic Society of Bengal, Mythic Society of India, Indian Antiquary, Journal of Geographical Society of Madras, Annals of Oriental Research. ஆகிய பழைய ஆய்விதழ்களில் வந்துள்ளன. 1873–1950 காலகட்டத்திலிருந்து மேற்கண்ட இதழ்களில் புளொக்மன், பிரான்பில், ஃப்ளீட், ஹயவதனராவ் (கன்னடம்), சி. எம். இராமச் சந்திரன் செட்டியார் (தமிழ்), நாராயணராவ் (தெலுங்கு), அச்சுத மேனேன் (மலையாளம்), பேரா. ரா. பி. சேதுப்பிள்ளை (தமிழ்), தியாகராஜு 5 (தெலுங்கு) முதலிய பலர் கட்டுரைகளும் நூல்களும் வெளியிட்டனர். அவற்றில் பலவும் சிறந்த ஆய்வியல் நெறிமுறை யிலன்றி எளிய ரசனை முறையில் இடப்பெயர் ஆய்வுகளின்

---

5. Nampoothiri, N. M., Indian Toponmy, Onoma 23 (1979), p. 114–148.

சிறப்பையும், அமைப்பையும் விளக்க முயன்றன[6]. சில இலக்கியம், வரலாறு, தொல்பொருளியல், பூகோளவியல் ஆகியவற்றிற்கு இடப் பெயராய்வைப்பயன்படுத்துகின்றன. சங்காலியா போன்ரேர் வரலாற்றுப் பூகோளவியல் முறையில் இடப் பெயர்களை ஆய்ந்துள்ளனர்.[7]

---

6. Allchins, F. R., **Neolithic cattle - keepers of South India - A study of Deccan Ash mounds**, 1963, pp. 88 – 99. Srinivasan, K.R., "Megalithic Monuments of South India-Literature and tradition", **Transactions of the Archaeological Society of South India**, 1958–59, pp. 1 - 14. Lahovary, N., **Dravidian origins and the West.** Ramaswamy Iyer, L. V., 'Dravidic Place names in the Plateaux of Persia', **QJMS** Vol. XX pt. 1, 1929–30, pp. 49–53.
7. B C. Law, **Historical Geography of Ancient India**, published by Societe Antique de Paris, 1954, supplement in **JIH** Vol. XLI pt. 1, 1963, pp. 15—53. Lele, Kasinath Lakshman, **Studies in the Historical and Cultural Geography and Ethnography of Rajaputana** (Ph.D. dissertation unpublished), University of Poona, 1962. Mathur Madhur Mohini, **Studies in the Historical and Cultural Geography and Ethnography of Uttara Pradesh** (Ph. D. dissertation unpublished), University of Poona, 1962. Mithila Sharan Pandey, **Historical Geography and Topography of Bihar**, Mothilal Banarsidass, Delhi, (1963), contains discussions on place names, p. 118–188. Mulay, Sumati, **Studies in the Historical and Cultural Geography and Ethnography of the Deccan** (Ph. D. dissertation unpublished), University of Poona 1954. Sankalia, H.D., **Studies in the Historical and Cultural Geography and Ethnography of Gujarat**, Deccan College Postgraduate and Research Institute, Poona, 1949. Seshadri, T.K., **Historical and Cultural Geography and Ethnography of South India from the Pallava Inscriptions** (Ph.D dissertation unpublished), University of Poona, 1954

(Foot note No: 7 Continued on page 9)

சரியான ஆராய்ச்சி முறையோடு அண்மையிலேயே சில நூல்கள் வெளிவந்துள்ளன.[8]

1.7.1 Journal of Madras Geographical Association இல் இந்நூற்றாண்டுத் தொடக்கத்தில் வந்த கட்டுரைகள் குறிப்பிடத் தக்கன. கன்னடத்தில் செவரின் சில்வாவின் Toponymy of Canara குறிப்பிடத் தக்கது; அண்மையில் ஹிரேமட், ஜவரே கௌடா போன்றோர் கட்டுரைகளும் சில உண்டு. தியாகராஜு, நாராயணராவ் போன்றோர் 1940க்களில் செய்த ஆய்வுக்களுக்குப் பின் ஆந்திர மாநிலத்திலுள்ள பல்கலைக்கழகத் தெலுங்குத் துறைகளில் பிஎச்.டி. ஆய்வுக் கட்டுரைகளில் இடப் பெயர்கள் ஆயப்பட்டு வருகின்றன; ஒன்று நூலாகவும் வெளிவந்துள்ளது.[9] தமிழ் மலையாளத்தில்

---

7. (contd.,)

Subbarayalu, Y., **Political Geography of the Chola Country**, Tamil Nadu State Department of Archaeology, 1973. Suresh, B., **Historical and Cultural Geography and Ethnography of South India with special reference to Chola Inscriptions** (Ph.D. dissertation unpublished), University of Poona, 1961. Vasudev, S. Agarwala, Place names in the inscriptions of Darius, **JUPHS**, July, 1940. Vol. XIII Part I, pp. 8 – 19. For a complete survey please see the following: Vasudev, S. Agarwala 'Ancient Indian Geography', **Review of Indological Studies in the last seventyfive years**, Ed, P.J.Chinmulgund and V.V.Mirashi, Poona, 1967, pp. 235-247. Sankalia, H.D., 'Historical Geography from Inscriptions **Ibid.** pp.249-288. Joshi, P.M, 'Further India' **Ibid.**, pp. 289-350. Pusalkar, A. D., 'Puranic Studies' **Ibid.**, pp.689 – 773.

8. Kurl, Shree Prakash, **A Socio-economic Study of Place Names of Shaharanpur District**, Ph. D. dissertation, Agra University, 1965. Gnanamuthu, S. **Place names of Kerala – Trivandrum District**, M. Litt., dissertation, Kerala University, 1965.—: **Place names of Kanyakumari District**, Ph D. dissertation, Kerala University, 1973.

9. Viswanatha Reddy, Village **names** of Cuddapah (Telugu) (year not known)

இரா.பி.சேதுப்பிள்ளை, டாக்டர்சி. அச்சுதமேனேன் ஆகியோர் 10 முயற்சிக்குப்பின் கேரளப் பல்கலைக்கழகத்தில் திரு. ஞானமுத்து, நாச்சிமுத்து ஆகியோர் ஆய்வுகள் குறிப்பிடத்தக்கன. இலங்கை – மலேசியாவிலும் சில ஆய்வுகள் காணப்படுகின்றன.

1972–ல் திருப்பதியில் நடந்த அனைத்திந்தியத் திராவிட மொழியியல் கழகத்தின் இரண்டாம் மாநாட்டில் ஒரு தனி அமர்வில் இடப் பெயராய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றன 11. அதோடு அன்று நிறுவப்பட்ட திராவிட இடப் பெயராய்வுக் கழகம் இயங்கவே இல்லை என்பது வருந்தத்தக்கது. அதன் பின் 1976 - ஜூனில் வால்டேரில் நடைபெற்ற திராவிட மொழியியல் கழகத்தின் ஆறும் ஆண்டுக் கருத்தரங்கில் நடந்த கிடுகு இராமமூர்த்தி நினைவு இடப் பெயராய்வுச் சொற்பொழிவுகளில் பல இடப் பெயராய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றன. அதன் பின் நவம்பர் 1979–ல் தொடங்கப்பட்ட இந்திய இடப்பெயராய்வுக் கழகம்12 1979இல் உடுப்பியிலும் 1981இல் பெங்களூரிலும் இரண்டு மாநாடுகளை நடத்தியதோடு **Studies in Indian Place names** என்ற ஒரு ஆய்விதழையும் நடத்தி வருகிறது. 1982இல் மூன்றும் மாநாடு-போபாலில் பிப்ரவரி 13, 14, 15ல் நடந்தது.
2.0 ஆங்கிலத்தில் A. H. Smith எழுதிய **The Preparations of County Place name Surveys** (1954), இன்னும் சில குறிப்பிட்ட பிரதேசங்களைப் பற்றிய கட்டுரைகளைத் தவிர, இடப்பெயராய்வு முறையை விளக்கும் தனி நூலொன்றும் ஆங்கிலத்தில் இல்லை 13. இனிமேல் நாம்தான் இதைச் செய்ய வேண்டியுள்ளது. இந்திய

---

10. See Viswanatha Reddy, R 'Bibliography of Indian Toponmy, **Onoma** Vol. XV.. 1970, pp 107–111.
Nachimuthu K , 'Onomastic Bibliography of India and Ceylon', **Onoma**, Vol. XVII (1972/73), pp. 366 368; Nampoothiri N.M , op. cit.

11. Meenakshisundaram, T.P., 'Practical Problems in Linguistics' IJDL Vol. 2, No. 1, 1973, p 3

12. Nampoothiri, N.M.. op.cit.

13. For papers see Nicolaisen and others, Nicolaisen, W.F.H., 'Field work in Place name Research', **Studia Hibernica** Vol. 1., 1961 pp. 77 – 88.

இடப் பெயரியலார் இந்தியச் சூழலுக்கேற்ற கோட்பாடுகளையும் நெறிமுறைகளையும், செய்முறைகளையும் உருவாக்க வேண்டியுள்ளது.

2.0.1 இடப்பெயர்களை நாம் பல நோக்கத்திற்காக ஆய்வு செய்து பயன்படுத்தினலும் அது-ஒரு மொழி சார்ந்த பொருள் என்ற நிலையிலேயே ஆயவேண்டியுள்ளது. வரலாற்று ஆய்வியல் முறை (Historical method) அளவாய்வு முறை (Survey method) ஆகியவற்றைப் பின்பற்றி இவ்வாராய்ச்சிகளை நாம் அமைத்துக் கொள்ளலாம்.

2.0.2 கிளை மொழியியல் - ஆய்வுமுறைகளை - ஏற்ற முறையில் மாற்றியமைத்து - இடப் பெயராய்வு மேற்கொள்ளலாம். இடப் பெயராய்வு கிளை மொழியியல் ஆய்வின் பகுதியாக இருந்தாலும், இரண்டும் சற்று வேறுபட்டன. கிளைமொழியியலாய்வில் பொறுக்கு முறையில் குறிப்பிட்ட இடங்களிலிருந்து குறிப்பிட்ட மொழிச் செய்திகளை சேகரிக்கலாம். ஆனல் ஒட்டு மொத்தமான இடப்பெயராய்வில், குடியிருப்புப் பெயர்கள், இயற்கைப் பெயர்கள்–என வரையறுத்துக் கொண்டாலும், எல்லா இடங்களிலும் வழங்கும் பெயர்களையும், அதன் மாற்று வடிவங்களையும் சேகரிப்பது- மிக அவசியம்.

2.0.3 இடப்பெயராய்வுகளை, அளவு கருதி (1) முழுநிலை அளவாய்வு (Comprehensive Survey) (2) சிறியநிலையிலான அளவாய்வு (Small scale survey) எனப் பாகுபடுத்தலாம். ஆங்கிலப்பெயர் அளவாய்வு, ஸ்காட்டிஷ் பெயர் அளவாய்வு ஆகியன முன் வகைக்கு உதாரணம். இந்தியாவில் இவ்வகை ஆய்வு இனி மேல்தான் மேற்கொள்ளப்படவேண்டும். குறிப்பிட்ட காலம், இடப் பகுதி என வரையறுத்துக் கொண்டு மாணவர்கள் முதலானோர் செய்வது பின் வகையைச் சேர்ந்தது. (கோவை மாவட்ட இடப் பெயர்கள், கடப்பை மாவட்ட இடப்பெயர்கள், Historical and cultural Geography and Ethnography of South India from the Pallava inscriptions)

2.1.0. எவ்வகை ஆய்வாக இருப்பினும், சிறந்த இடப்பெயராய்வின் முறைகளைக் கீழ்க்கண்ட ஐந்து நிலைகளாக வகுத்துக் கொண்டு விளக்கலாம். 14

---

14. Ibid

1. இடப்பெயர்களைத்திரட்டல் (Registration Or Collection of the place names)
2. சான்றுச் செய்திகளைத் திரட்டல் (documentation)
3. அடையாளம் காணுதல் (Identification)
4. விளக்கம் செய்தல் (Interpretation)
5. வெளியிடுதல் (Publication)

## 2.1.1.0 இடப்பெயர்களைத் திரட்டல் (Collection)

பெயராய்வின் முதல் நிலை, நாம் விரும்பும் இடப் பகுதியிலோ, காலப் பகுதியிலோ உள்ள இடப்பெயர்களைத் திரட்டுதலாகும், இடப் பெயர்கள் என்னும் பொழுது சிற்றூர், பேரூர் நகரங்கள் உள்ளிட்ட ஊர்களின் பெயர்கள், மலை, ஆறு, குளம் ஆகியவற்றின் பெயர்கள் போன்ற பெரும் பெயர்களும் (Major names) தெரு, வீடு, வெளி, பொதுவிடம், வயல், மேய்ச்சல்நிலம், ஏரி, கால்வாய் ஆகியவற்றின் பெயர்கள் போன்ற சில பெயர்களும் (Minor names) அடங்கும்.

1. வழக்கிலும், எழுத்துச் சான்றுகளிலும் உள்ள பெயர்கள்.
2. வழக்கில் மட்டும் உள்ள - எழுத்துச் சான்றுகளில் இல்லாத பெயர்கள்.
3. வழக்கில்லாமல் மறைந்து போன எழுத்துச் சான்றுகளில் மட்டும் உள்ள பெயர்கள்.

என மூன்று வகையாய் அமையும் முதல், மூன்றும் வகைப் பெயர்களை தற்போதைய அரசுப்பதிவேடுகள் வரைபடங்கள் (Maps) பிற அரசு வெளியீடுகள் மற்றும் கல்வெட்டு, பட்டயம், இலக்கியம் ஆகிய பழமைச் சான்றுகளிலிருந்து திரட்டலாம். இரண்டாம் வகைப் பெயர்களை, நேரடியாகச் சென்றோ, உரிய ஆட்களை அமர்த்தியோ கள ஆய்வு மூலம் திரட்டல் வேண்டும்.

2.1.1.1. எவ்வகைப் பெயர்களைத் திரட்டுதலிலும் முதல்படி, ஒரு **இடப்பெயர்ப்பட்டியல்** (Gazettee of names) தயாரிப்பதாகும். முதலில் ஒவ்வொரு மாவட்ட வாரியாக இடப் பெயர்களைத் திரட்டத் தொடங்கலாம். நம் இந்தியாவில் மாவட்டங்கள் ஒரே சீரான அளவில் இல்லை எனினும், மாவட்டத்தை ஒரு அடிப்படையாக வைத்துத் திரட்டுவது, அரசு நிர்வாக அமைப்பைப் பயன்படுத்திக் கொள்ள வசதியாக இருக்கும். மாவட்டம் பெரிதாயின், சில வட்டங்களை எடுத்துக் கொள்ளலாம்,

*மூலங்கள்*

2.1.1.2. முதல்வகைப் பெயர்ப்பட்டியலை உருவாக்கக் கீழ்க்கண்ட சான்றுகள் முக்கியமானவை.15

**(1) Distance Register**

இது ஆங்கிலஆட்சிக் காலத்தில், மாவட்ட, வட்டத் தலைநகருக்கும் அவற்றிலுள்ள கிராமங்கள், குக்கிராமங்கள் ஆகியவற்றிற்கும் உள்ள தூரம் முதலியவற்றைக்காட்டத் தயாரிக்கப்பட்டது. உரோமன் எழுத்தில் உள்ளது. இதன் பிறபதிப்புகள் வந்துள்ளாதாகத் தெரியவில்லை. இவை மாவட்ட, வட்ட அலுவலகங்களில் கிடைக்கும். தமிழ்நாடு அரசு 1972-ல் தமிழில் வெளியிட்ட **கிராமங்களின் அகரவரிசைப் பட்டியலில்** முக்கிய கிராமங்களே குறிக்கப்பட்டுள்ளன.

**2. Handbook of Electoral Areas**

மாவட்ட, வட்ட அலுவலகங்களில் கிடைக்கும் இந்நூலில், உரோமன் எழுத்தில் நிலவருவாய்க் கிராமங்கள், ஊராட்சிகள், நகராட்சிகள் ஆகியவற்றிலுள்ள ஊர்களின் பெயர்களையும் அவற்றிலுள்ள வாக்காளர் எண்ணிக்கையும் கூறுகிறது.

**3. A-Register**

இது வட்ட அலுவலகங்களில் காணப்படுகிறது. இதில் வட்டத்திலுள்ள அவ்வப்பொழுது புதிதாகத் தோன்றிய, அல்லது அழிந்த கிராமங்களின் பெயர்கள் உள்பட எல்லா கிராமப்பெயர்களும் அடங்கியிருக்கும்.

**4. Election Housing Key List**

இது, கிராமக் கர்ணத்தால், கிராமங்களிலுள்ள வீடுகள், குடியிருப்புப் பகுதிகள் பற்றித் தயாரிக்கப்பட்ட சிறிய வரைபடங்களின் தொகுதி. இது பைண்ட் செய்யப்பட்டு வட்ட அலுவலகங்களில் காணப்படுகிறது.

மேற்கண்ட **நான்கிலிருந்தும்**, நிலவருவாய்க் கூறுகளாக ஏற்றுக் கொள்ளப்பட்ட குடியிருப்புப் பெயர்கள் மட்டுமே கிடைக்கும்.

**5. Resettlement Register—கிராம அடங்கல்(RSR)**

நிலத்தரம், பிரிவு, உரிமையாளர்—ஆகிய பல விவரம் தரும் அடிப்படையான அச்சிட்ட பதிவேடு. இதில் நிலங்கள் (தோட்டம்,

15. Nachimuthu, K., place names of Coimbatore District (ph.D., dissertation), Kerala University, 1973

தோப்பு, காடு) அதன் உடமையாளர் ஆகியவர்கள் பெயர்கள் காணப்படும். அதோடு காலி இடம், புறம்போக்கு நிலம், மலை குன்று ஆறு, ஓடை முதலிய இயற்கைப் பெயர்களையும் குறிப்பிடும். தோட்ட வயல் பெயர்கள், ஆட்பெயர்கள் ஆகியனவற்றைச் சேகரிக்கவும் இது ஒரு அரியமூலம். இதில் பெயர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப் பட்டிருப்பது இதன் சிறப்பு. வட்டார மொழியிலுள்ள பெயர்களின் தற்கால எழுத்து வடிவங்களைச் சேகரிக்க இது ஒரு நம்பத்தக்க சான்று. அவ்வக்கிராமத்திற்குரிய அவ்வப்பதிவேடுகளை, அவ்வக் கணக்குப் பிள்ளைகளிடமும், வட்டம், மாவட்டம், முழுமைக்கும் உரியவற்றை மொத்தமாக அவ்வத்நிலைமையிடங்களிலும் பார்க்கலாம்.

6. **நிலப் படங்கள் (Maps)**

பலவகை நிலப்படங்களிலிருந்தும் குறிப்பாக 1"—1 மைல் வட்ட வரைபடத்திலிருந்தும் குடியிருப்புப் பெயர்கள், இயற்கை அமைப்புப் பெயர்கள் முதலியவற்றைச் சேகரிக்கலாம். கிராமநிலப்படங் களும், மாவட்ட நிலப்படங்களும் ஓரளவு பயனுடையன. நிலவருவாய்த் துறையில் நில அளவைப் பிரிவினரால் பதிப்பிக்கப்பட்ட இவை-உரோ மன் எழுத்தில் உள்ளன. இது இவற்றின் பயனைச் சிறிது குறைவுப் படுத்தும்.

மேலே குறிப்பிட்ட சான்றுகள் ஆங்கிலேய ஆட்சிக்காலத்தில் பதிப்பிக்கப்பட்டவை; சற்றுப் பழமையானவை. சமஸ்தானங்களில் பதிப் பிக்கப்பட்ட இதை ஒத்த பதிவேடுகளும், இன்றைய மைய மாநில அரசு களால்-பதிப்பிக்கப்பட்ட இதை ஒத்த பதிவேடுகளும்-கிடைத்தால் பயன் படுத்தலாம்.

7. **பிற சான்றுகள் :**

**District Census Handbook**

இதில் பெருங்கிராமத்தின் பெயரும். ஊராட்சியின் பெயருமே உண்டு. ஆனால் இது தரும் வேறுபல புள்ளிவிவரக் குறிப்புகள் பயனு டையன. இவை போக-

1. பஞ்சாயத்துக்களின் பட்டியல்
2. அஞ்சல் நிலையங்களின் பட்டியல்
3. மாவட்ட வரலாற்று நூல் தொகுதி (District Gazetteers) முதலியனவும், மைய அரசின் Millitary gazetteer உம் முக்கிய மானவை. 16 அமெரிக்க அரசின் பூகோளப் பெயர் வாரியம்

---

16. Director of Military Survey (India). **Gazetteer of India and Pakistan**, 2 vols., vol.1 1950), vol.2 (not yet available)

'Board on Geographic names' இராவணுப் பயனுக்காக வெளியிட்டுள்ள சுமார் 30 லட்சம் உலகப் பெயர்களடங்கிய 150 பெயர் தொகுதிகள் குறிப்பிடப்படவேண்டியவை. 17

**இச்சான்றுகள் உள்ள இடங்கள்:**

வட்ட, மாவட்ட, வருவாய்த்துறை அலுவலக ஆவணக் காப்பகத்திலும், சென்னையிலுள்ள மாநில ஆவணக்காப்பகத்திலும் மேலே கண்ட சான்றுகள் பலவற்றையும் காணலாம்.

2.1.1.3 **ஒரு எச்சரிக்கை:**

சரியான பெயர் வடிவங்களை சேகரிக்க இவை எவ்வளவு தூரம் நம்பத்தகுந்தவை என்பதைப் பற்றிச் சில சொற்கள்:

அரசுப் பதிவேடுகள் வெளியீடுகளிலுள்ள பெயர்கள் எல்லாம், ஆங்கில ஆட்சிக் காலத் தொடக்கத்திலிருந்து ஆங்கில எழுத்திலேயே உள்ளன. கம்பெனி ஆட்சித் தொடக்கத்தில் பின்பற்றப் பட்ட எழுத்துப் பெயர்ப்பு முறை மிகவும் குழப்பமுடையதாக 18

---

17 United States Board on Geographic names **75th Anniversary 1890-1965,** U. S. Government Printing Office, 1967, p.8

18. Manual of Surveying of 1851 என்ற நூலில் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது:

பெரும் திரிகோண அளவையில் (The Great Trignometrical Survey) சர் வில்லியம் ஜோன்ஸின் ஒலிப்பெயர்ப்பு முறை சற்றுத், திருத்தப்பட்டுப் பயன்படுத்தப்பட்டது. நில வருவாய் அளவையில் (Revenue Survey) – Gil Christ (Professor of Hindustani College of Fort William, Calcutta, 1800) என்பவரின் எழுத்துப் பெயர்ப்பு முறை பின்பற்றப்பட்டது.

அதே நூலில், De Havilland என்பவர் கோவைக்குத் தாம் தயாரித்த வரைபடம் பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

(p. 114) " And in writing the names of places, although I have attempted throughout to adopt the orthography of the Tameel which appears to me the language, ab origine, of that country. I am sensible, as well from my very slender knowledge of that toungue, as from my being unable frequently to obtain the real names of places written in the language itself, that I have materially failed in this respect".

இருந்ததால் W. W. Hunter- (Imperial Gazetteer of India வைப் பதிப்பித்தவர்) ஆல் உருவாக்கப்பட்ட ஒலிப்பெயர்ப்பு முறை 1870-ல் அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.[19] எனினும் வட்டாரத்திற்கு வட்டாரம், மொழிக்கு மொழி, பலவேறுவிதமான எழுத்துப்பெயர்ப்பு முறைகளால் – உரோமன் எழுத்தில் பெயர்ப்புச் செய்யப்பட்ட இடப் பெயர் வடிவங்கள் - தெளிவின்றியும், குழப்பத்தைத் தருவன்வாகவும் அமைந்துள்ளன. மேலும் Hunter முறையில் ஆங்கிலத்தில் எழுத்துப் பெயர்ப்புச் செய்யப்பட்ட இந்தியப் பெயர்களை ஆங்கிலத்திலிருந்து நம் மொழிகளுக்குத் திரும்ப ஒலிப் பெயர்ப்புச் செய்யும் போது மறுபடியும் குழப்பமும் திரிபுகளுமே ஏற்பட்டன.[20] அதிலும் குறிப்பாக, ஆங்கில எழுத்தில் உயிரில், குறில் நெடில் வேறுபாட்டின்மை காரணமாக ஏற்படும் சிதைவும், குழப்பமும் அளவில்லாதன. உதாரணமாக, Dharmapuri, Palliyadi — என்றெழுதினல் அது தர்மபுரியா? தர்மாபுரியா? பள்ளியடியா? பள்ளியாடியா? என்று எப்படித் தெரியும்? கேரளத்திலுள்ள மங்கொம்பு என்ற இடத்தைத் தமிழ்ப்பத்திரிகை மான்கொம்பு என்று எழுதுகிறது. பாண்டிச்சேரியைப் போண்டிச்சேரி ஆக்கிவிடுகின்றன மலையாளப் பத்திரிகைகள். விடுதலைக்குப் பிறகும் இந்நிலை மாறவில்லை. மைய மாநில அரசுகள் முக்கிய அரசு ஆவணங் களையும் சான்றுகளையும் தொடர்பு மொழியான ஆங்கிலத்தில் தான் வெளியிடுகிருர்கள். வட்டாரமொழிகளில் வெளிவருகின்றவை முன்பே குறிப்பிட்டபடி ஆங்கிலத்திலிருந்து தவருகப் பெயர்ப்புச் செய்யப் பட்டவையாக உள்ளன. இவ்விஷயங்களில் ஆங்கிலத்திற்குப் பதிலாகப் பிரதேசமொழிகள் முழுமையாகப் பயன்படுத்தப்படும் காலம்

---

1811-ல் முடிக்கப்பட்ட Lambton's 8 mile Plan of the Southern Provinces இல் காணப்படும் பெயர் வடிவங்களுக்குச் சில உதாரணங்கள்:

Annamally — Anamalai.
Payroor — Perur
Pyney — Palani

— colonel R.H. Philinore, **Historical Records of the Survey of India** Vol-I (1945)- 18th century A.D. pp. 248-50, Vol. II (1950)- 1800-1815 A.D., p.266

19. D.N. Sarma, Atri Harnal, 'Importance of Place names', **Sunday Standard,** 19.11. 1978

20. Ibid

ஒரு போதும் வராது. எனவே இச் சிக்கல் தீர நிலையான தீர்வு கண்டே ஆக வேண்டும்.

மேற்கண்ட தவருன எழுத்துப் பெயர்ப்புகளோடு டிராங்குபார், கிராங்கனூர், டுட்டிக்கோரின் முதலிய ஆங்கிலமயமான பெயர்களும், Golden Rock, Washermenpet முதலியவற்றில் உள்ளது போன்ற மொழி பெயர்ப்புகளும் ஊர்ப் பெயராய்வாளன் கவனிக்க வேண்டியவை. இவற்றில் சில பொது மக்களின் கோரிக்கையால் மூலவடிவத்தை அடைந்துள்ளன. வடமொழித் தொடர்பால் ஏற்பட்டு, ஆங்கில வரவால் புதிதாக வளர்ந்து உரம் பெற்று விட்ட 'இப்பெயர்க் கொலைகள்' இடப் பெயராய்வாளனுக்குத் தொல்லை தருகின்ற விஷயங்கள். எனவே இம்மூலங்களினின்று சரியான பெயரைக் கண்டுபிடிக்கத் தனிக்கவனம் தேவை.

சர்வே ஆப் இந்தியா தன் வரைபடங்களில் ஹண்டரின் ஒலிப் பெயர்ப்பு முறையையே பின் பற்றி வருகிறது. அது போக இந்திய அரசின் முறை ஒன்றும் உண்டு. அதன் பின் 1970 இல் ஐக்கிய நாடுகள் சங்கத்தைச் சேர்ந்த நிலநூல் பெயர் நிலைப்படுத்தல் வல்லுநர் குழுவின் (United Nations group of experts on the standardisation of geographical names) சார்பில் நடந்த மாநாடுகளில் கலந்து கொண்ட இந்திய பிரதிநிதியான திரு. கர்னல் டி. என். சர்மா பரிந்துரை செய்திருக்கிற ஒலிப்பெயர்ப்பு முறை திரு. ஹண்டரின் முயற்சிக்குப் பின் ஒரு நூற்றுண்டுக்குப் பின் வந்திருக்கிறது.[21] இதிலும் சில குறைகள் உண்டு. இதை அரசு எவ்வளவு தூரம் நடைமுறைப் படுத்துகிறது என்பதைப் பொறுத்தே நம் இடப் பெயர்களின் நலம் அமைந்திருக்கிறது. இவை பின்பற்றப்படா விட்டால், நம் நாட்டுக்கும் மொழிகளுக்கும் ஏற்படும் ஊறும் இழப்பும் அளவிட முடியாதவை.

### 2.1.2.1 இடப்பெயர்களுக்குக் குறியீடுகள் அமைத்தல்

ஒவ்வொரு இடப்பெயரும், எந்த இடத்தில் இருக்கிறது என்பதற்குரிய ஒரு சுட்டுக் குறிப்பு இருந்தால் மட்டுமே அவற்றைக்

---

21. D. N. Sarma, 'Transliteration into Roman and Devanagari of the Indian Group' **Report on the Third U. N Conference on the standardisation of Geographical Names,** Athens, 1977, pp. 117-162.

கண்டுபிடிக்கவும், வேறுபடுத்தி அறியவும் முடியும். இதற்கு ஒவ்வொரு பெயருக்கும் சுருக்கக்குறியீடுகள் அமைத்தல் வேண்டும். எனவே இடப் பெயர்களைத் திரட்டுதலின் முதற்படியாக அவற்றிற்குக் குறியீட்டமைப்பு ஒன்றை உருவாக்கிக் கொள்ள வேண்டும். 22

தற்போது இடப்பெயர்களுக்கு நான்கு குறியீட்டு முறைகள் காணப்படுகின்றன.

1. வருவாய்த்துறையினரின் இடக்குறியீட்டு எண் (Location code Number of the Revenue Department): இதில் வட்டத்திலுள்ள ஒவ்வொரு பெருங்கிராமங்களும் ஒரு குறியீட்டு எண் பெற்றிருக்கும்.
2. ஊராட்சித்துறையினரின் இடக்குறியீட்டு எண்: இது முன்னதைப் போன்றது; ஊராட்சிகள் குறியீட்டு எண் பெற்றிருக்கும்.
3. மக்கள் தொகைக் கணக்கெடுப்புத் துறையினரின் இடக்குறியீட்டு எண்: இதுவும் முன்னவை இரண்டையும் ஒத்தது.
4. அஞ்சல் துறையினரின் குறியீட்டு எண் (pincode) துணை அஞ்சல் நிலையங்கள் வரை குறியீட்டு எண் காணப்படும்.

இவற்றில் ஒன்றை நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இவற்றில் நிலவருவாய்த்துறையினரின் அமைப்பு விரும்பத்தக்கது. நிலவருவாய்த்துறையினர் அமைப்பில் குறையுள்ள இடங்களில் - மக்கள் தொகைக் கணக்கெடுப்புத் துறையினரின் முறையை வேறுபாட்டோடு பயன்படுத்தலாம்.

ஒரு பெருங்கிராமத்திலுள்ள - சிறு கிராமங்களைக் குறிப்பிடவும், ஒரு மாவட்டத்திலுள்ள வட்டங்களைக் குறிப்பிடவும், நிலவருவாய் - இடக்குறியீட்டு எண்ணின் பின்பும், முன்பும் எண் அல்லது எழுத்துக் குறியீடுகளை அமைத்துக் கொள்ளலாம்.

உதாரணம்:

கோவை மாவட்டத்திலுள்ள ஒரு பெருங்கிராமத்தின் குறியீட்டு எண்:
தெலுங்குபாளையம் C 28

- C - கோவை வட்டம், 28-பெருங்கிராமத்தின் எண், இதன் - பின் எழுத்து ஒன்று இல்லாதிருப்பது இதுவே, பெருங்கிராமம் என்பதைக் காட்டும்.

22. Nachimuthu, K., op. cit.

**பெருங்கிராமத்திலுள்ள சிறுகிராமத்தின்-குறியீட்டு எண்:**
வடுகபாளையம் A 30 K
–A–அவிநாசிவட்டம்; 30 – வடுகபாளையத்தின் மேற்பிரிவாகிய குப்பே பாளையம் ஊரின் எண்; K பெருங்கிராமமாம், குப்பே பாளையத்தின் முதலெழுத்து.

மாநில மட்டத்திலான ஆய்வில் மாவட்டங்களைக்குறிக்க 2-தானங்களை அமைக்கலாம். ஒரு மாநிலம் முழுமைதற்கும் எழுத்தும் எண்ணும் கலந்த குறியீட்டு எண்ணை விட எண் மட்டும் உள்ள குறியீடு அமைப்பதாயின் 9- தானமுள்ள குறியீடு அமைக்க வேண்டும். (2 தானம் - மாவட்டம், 2 தானம் - வட்டம், 3 தானம்-பெருங்கிராமம் 2 தானம்-சிறுகிராமம்) (00 00 000 00). இது அளவில் சற்று பெரிதாகத் தோன்றும். அஞ்சல் குறியீட்டு எண்ணில் துணை அஞ்சல் நிலையம் வரை சுட்ட 6 தானங்கள் உள்ளன. இங்கிலாந்திலுள்ள அஞ்சல் குறியீட்டு எண்ணைப் போன்று எண்ணும் எழுத்தும் கலந்த குறியீட்டை வேண்டுமானாலும் அமைத்துக் கொள்ளலாம். பெருங்கிராமம், சிறு கிராமங்களில் பெயர்கள் தவிர்ந்த, சிறு பெயர்களாகிய தோட்டம், தோப்பு வயல், தெரு இயற்கை அமைப்புகள் ஆகியவற்றின் பெயர்களுக்கு அவை சேர்ந்துள்ள கிராமத்தின் குறியீட்டையோ, சர்வே (காலை) எண்ணையோ குறிப்பிடலாம். 1" – 1 மைல் வட்ட வரை படத்தில் தீர்க்க ரேகை, அட்சரேகையால் கிடைக்கும் சதுரங்களை எண்ணிட்டுக் குறியீடாக அமைக்கலாம். தேசீய வரைபட நிறுவனம் (National Atlas Organisation) இம் முறையைப் பயன்படுத்துகிறது.

சேகரித்த பெயர்களைக் குறிப்பிட்ட அளவில் உள்ள துண்டுத்தாள்களில் பெயர்களின் இடக்குறியீட்டு எண்களோடு எழுதி வைக்கவேண்டும்.[23] திரட்டிய பெயர்களை அகரவரிசைப் படுத்தி வைத்துக் கொண்டால், ஊர்ப்பெயர் அகராதி தயாரிக்கவும் மற்றும் எளிதாக ஒரு பெயரைப் பற்றிய விவரங்களை அறியவும் முடியும்.

### 2.1.2.2. தமிழ்நாட்டு இடப்பெயர்களுக்குக் குறியீடுகள் அமைத்தல்: ஒரு வழி காட்டுதல்

சான்றுச் செய்திகளைத் திரட்டுதல், நிலப்படம், அட்டவணைகள் ஆகியவற்றில் அடையாளம் காணுதல் ஆகிய பயன்களை நோக்கி,

---

23 For sizes of different slips to be used, please see A.H.Smith **Preparation for the country place name Survey**, English place name Society, 1954.

நில வருவாய் இடக் குறியீட்டு எண்ணை (Revenue Location Code Number) பயன் படுத்துவது நல்லது. இந்த எண்ணை நிலவருவாய் எண், நிலவருவாய் கிராம எண் என்றெல்லாம் அழைப்பார்கள். 1971 மக்கள் தொகைக்கணக்கெடுப்பிலும் இவ்வெண்களே பயன் படுத்தப்பட்டுள்ளன.

**மாவட்டங்களுக்கான குறியீடுகள்:**

தமிழ்நாட்டிலுள்ள 16 மாவட்டங்களையும் குறிக்கக் கீழ்க்கண்ட தமிழ்ச்சுருக்கெழுத்துக்களைப் பயன்படுத்தலாம்.

இராமநாதபுரம் — இரா.
கன்னியாகுமரி — க.
கோயம்புத்தூர் — கோ.
செங்கல்பட்டு — செங்.
சென்னை — சென்.
சேலம் — சே.
தஞ்சாவூர் — தஞ்.
தர்மபுரி — தர்.
திருச்சிராப்பள்ளி — திருச்.
திருநெல்வேலி — திரு.
தென்னார்க்காடு — தெ.ஆ.
நீலகிரி — நீ.
புதுக்கோட்டை — பு.
பெரியார் — பெ.
மதுரை — ம.
வட ஆர்க்காடு — வ.ஆ.

**வட்டங்களுக்குரிய குறியீடுகள்:**

ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள வட்டங்களைக் குறிக்கக் கீழ்க் கண்ட முறையில் தமிழ் எழுத்துக் குறியீடுகளை அமைத்துக் கொள்ளலாம்:

*இராமநாதபுரம் மாவட்டம் — இரா.*
*வட்டங்களின் குறியீடுகள்:*

1. அருப்புக்கோட்டை — அருப்.
2. இராமநாதபுரம் — இரா.
3. இராமேஸ்வரம் — இராமேஸ்.
4. இராஜபாளையம் — இராஜ.

5, இளையாங்குடி — இளை.
6. கமுதி — கமு.
7. காரைக்குடி — காரை.
8. சாத்தூர் — சாத்தூ
9. சிவகங்கை — சிவக.
10. திருச்சுழி — திருச்சு.
11. திருப்பத்தூர் — திருப்.1
12. திருவாடானை — திருவாடா.
13. தேவக்கோட்டை — தேவ.
14. பரமக்குடி — பர.
15. மானாமதுரை — மானா.
16. முதுகுளத்தூர் — முது.
17. விருதுநகர் — விருது.
18. ஸ்ரீவில்லிபுத்தூர் — ஸ்ரீவி.

*கன்னியாகுமரி மாவட்டம்* — க.
*வட்டங்களின் குறியீடுகள்:*

1. அகஸ்தீஸ்வரம் — அகஸ்.
2. கல்குளம் — கல்.
3. தோவாளை — தோ.
4. விளவங்கோடு — விள.

*கோயம்புத்தூர் மாவட்டம்* — கோ.
*வட்டங்களின் குறியீடுகள்:*

1. அவினாசி — அவி,
2. உடுமலைப்பேட்டை — உடு.
3. பல்லடம் — பல்.
4. பொள்ளாச்சி — பொள்.
5. மேட்டுப்பாளையம் — மேட்டு.

*செங்கல்பட்டு மாவட்டம்* — செங்.
*வட்டங்களின் குறியீடுகள்:*

1. உத்திரமேரூர் — உத்தி.
2. ஊத்துக்கோட்டை — ஊத்துக்.
3. காஞ்சிபுரம் — காஞ்.
4. கும்மிடிப்பூண்டி — கும்மி.
5. செங்கல்பட்டு — செங்.
6. சைதாப்பேட்டை — சை.

7. திருத்தணி — திருத்.
8. திருவள்ளூர் — திருவள்.
9. பள்ளிப்பட்டு — பள்.
10. பொன்னேரி — பொன்.
11. மதுராந்தகம் — மதுரா.
12. ஸ்ரீ பெரும்பூதூர் — ஸ்ரீபெ.

*சென்னைமாவட்டம்* — *சென்.*

*சென்னைமாநகராட்சி வட்டங்களில் எண்களையே பயன்படுத்தவும்.*

*சேலம் மாவட்டம்* - *சே.*

*வட்டங்களின் குறியீடுகள் :*

1. ஆத்தூர் — ஆத்.
2. ஏர்க்காடு — ஏ.
3. ஓமலூர் — ஓம.
4. சங்க(கி)ரி — சங்க.
5. சேலம் — சே.
6. திருச்செங்கோடு — திருச்செங்.
7. நாமக்கல் — நாம.
8. மேட்டூர் — மேட்டூ.
9. இராசீபுரம் — இராசீ.

*தஞ்சாவூர் மாவட்டம்* — *தஞ்.*

*வட்டங்களின் குறியீடுகள்* :

1. ஒரத்தநாடு — ஒரத்.
2. கும்பகோணம் — கும்ப.
3. சீர்காழி — சீர்.
4. தஞ்சாவூர் — தஞ்.
5. திருத்துறைப்பூண்டி — திருத்து.
6. திருவாரூர் — திருவா.
7. திருவிடைமருதூர் — திருவி.
8. திருவையாறு — திருவை.
9. நன்னிலம் — நன்.
10. நாகப்பட்டினம் — நாகப்.
11. பட்டுக்கோட்டை — பட்.
12. பாபநாசம் — பாப.
13. பேராவூரணி — பேரா.
14. மன்னார்குடி — மன்.
15. மாயூரம் — மா.

*தர்மபுரி மாவட்டம் — தர்.*

*வட்டங்களின் குறியீடுகள் :*

1. ஊத்தங்கரை — ஊத்தங்.
2. ஓசூர் — ஓசூ.
3. கிருஷ்ணகிரி — கிருஷ்.
4. தர்மபுரி — தர்.
5. தேங்கனிக்கோட்டை — தேங்.
6. பாலக்கோடு — பாலக்.
7. பெண்ணாகரம் — பெண்.
8. ஹரூர் — ஹ.

*திருச்சிராப்பள்ளி மாவட்டம் — திருச்.*

*வட்டங்களின் குறியீடுகள் :*

1. அரியலூர் — அரி.
2. இலால்குடி — இலால்.
3. உடையார்பாளையம் — உடை.
4. கரூர் — கரூ.
5. குளித்தலை — குளித்.
6. திருச்சிராப்பள்ளி — திருச்.
7. துறையூர் — துறை.
8. பெரம்பலூர் — பெரம்.
9. மணப்பாறை — மணப்.
10. முசிறி — முசி.

*திருநெல்வேலி மாவட்டம் — திரு.*

*வட்டங்களின் குறியீடுகள் :*

1. அம்பாசமுத்திரம் — அம்.
2. ஒட்டப்பிடாரம் — ஒட்.
3. கோவில்பட்டி — கோவி.
4. சங்கரநயினார் கோவில் — சங்கர.
5. சாத்தான்குளம் — சாத்தா.
6. சிவகிரி — சிவகி.
7. செங்கோட்டை — செங்கோ.
8. திருச்செந்தூர் — திருச்செந்.
9. திருநெல்வேலி — திரு.
10. தூத்துக்குடி — தூத்.
11. தென்காசி — தென்.

12. நாங்குனேரி — நாங்.
13. விளாத்திகுளம் — விளா.
14. ஸ்ரீவைகுண்டம் — ஸ்ரீவை.

*தென்னார்க்காடு மாவட்டம்* — தெ.ஆ.

*வட்டங்களின் குறியீடுகள்:*

1. உளுந்தூர்ப்பேட்டை — உளுந்.
2. கடலூர் — க.
3. கள்ளக்குறிச்சி — கள்.
4. காட்டுமன்னார்கோவில் — காட்.
5. சிதம்பரம் — சிதம்.
6. செஞ்சி — செஞ்.
7. திட்டக்குடி — திட்.
8. திண்டிவனம் — திண்டி.
9. திருக்கோயிலூர் — திருக்.
10. பண்ருட்டி — பண்.
11. விருத்தாசலம் — விருத்.
12. விழுப்புரம் — விழுப்.

*நீலகிரி மாவட்டம்* — நீ.

*வட்டங்களின் குறியீடுகள்:*

1. உதகமண்டலம் — உத.
2. குன்னூர் — குன்.
3. கூடலூர் — கூட.
4. கோத்தகிரி — கோத்.

*பெரியார் மாவட்டம்* — பெ.

*வட்டங்களின் பெயர்கள்:*

1. ஈரோடு — ஈ.
2. காங்கேயம் — காங்.
3. கோபிசெட்டிப்பாளையம் — கோபி.
4. சத்தியமங்கலம் — சத்.
5. தாராபுரம் — தாரா.
6. பவானி — பவா.
7. பெருந்துறை — பெருந்.

*மதுரை மாவட்டம்.* — *ம.*

*வட்டங்களின் குறியீடுகள்:*

| | | | |
|---|---|---|---|
| 1. | உசிலம்பட்டி | — | உசி. |
| 2. | உத்தமபாளையம் | — | உத்தம. |
| 3. | கொடைக்கானல் | — | கொடைக். |
| 4. | திண்டுக்கல் | — | திண்டு. |
| 5. | திருமங்கலம் | — | திருமங். |
| 6. | நத்தம் | — | நத். |
| 7. | நிலக்கோட்டை | — | நிலக். |
| 8. | பழனி | — | பழ. |
| 9. | பெரியகுளம் | — | பெரி. |
| 10. | மதுரை தெற்கு | — | ம. தெ. |
| 11. | மதுரை வடக்கு | — | ம. வ. |
| 12. | மேலூர் | — | மேலூ. |
| 13. | வேடசந்தூர் | — | வேட. |

*வட ஆர்க்காடு* — *வ. ஆ.*

*வட்டங்களின் குறியீடுகள் :*

| | | | |
|---|---|---|---|
| 1. | அரக்கோணம் | — | அரக். |
| 2. | ஆர்க்காடு | — | ஆர்க். |
| 3. | ஆரணி | — | ஆர. |
| 4. | குடியாத்தம் | — | குடி. |
| 5. | செங்கம் | — | செங்கம். |
| 6. | செய்யார் | — | செய். |
| 7. | திருப்பத்தூர் | — | திருப்.2 |
| 8. | திருவண்ணாமலை | — | திருவண். |
| 9. | போளூர் | — | போ. |
| 10. | வந்தவாசி | — | வந். |
| 11. | வாணியம்பாடி | — | வாணி. |
| 12. | வாலாஜா | — | வாலா. |
| 13. | வேலூர் | — | வேலூ. |

*பெருங்கிராமங்களுக்கான குறியீட்டு எண்:*

ஒவ்வொரு வட்டத்திலுமுள்ள பெருங் கிராமங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு எண்ணால் குறிப்பிடப்படும். இதற்கு நாம் கிராமங்களின் நில வருவாய்க் குறியீட்டு எண்ணையே பயன்படுத்தலாம். ஒவ்வொரு வட்டத்திலுமுள்ள பெருங்கிராமங்களும், அவற்றின் எண்களும்

அவற்றைக் காட்டும் வட்ட நிலப்படமும் Census of India 1971, Series 19. Tamil nadu Part IX A Administrative Atlas (1974) என்ற நூலில் கொடுக்கப்பட்டுள்ளன. அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஆய்வாளர்கள் இந்த எண்களை வட்ட அலுவலகத்தில் சென்று ஒத்திட்டு நோக்கி மாற்றங்கள் இருந்தால் அமைத்துக் கொள்ள வேண்டும்.

சில வட்டங்கள் அண்மையில் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவ்வாறு பிரிக்கப்பட்டுள்ள இடங்களில், நில வருவாய்க்குறியீட்டு எண்களில் மாற்றங்கள் ஏற்பட்டிருந்தால் அவற்றையும் அமைத்துக் கொள்ளவும்.

**பெருங் கிராமத்தைக் குறிக்கக் கொடுக்கப்படும் குறியீட்டுக்கு உதாரணங்கள்: (மாவட்டத்திற்கு 2 வீதம்)**

| | |
|---|---|
| டி. வேலங்குடி | இரா./அருப்./35 |
| கமுதி | இரா./கமு./8 |
| | (ஒரு பகுதி: பழைய முதுகுளத்தூர் வட்ட எண்) |
| கொல்லங்கோடு | க./விள./1 |
| தெரிசனங்கோப்பு | க./தோ./8 |
| தெலுங்குபாளையம் | கோ./கோ./28 |
| தெற்கு அவினாசிபாளையம் | கோ./பல்./33 |
| அத்திப்பேடு | செங்./பொன்./66 |
| நெமிலி | செங்./திருத்த./37 |
| காவேரிபுரம் | சே./மேட்டு./127 |
| பெருமாபாளையம் | சே./சே./40 |
| திருச்சோற்றுத்துறை | தஞ்./தஞ்./79/1 |
| பருத்திக்கோட்டை | தஞ்./ஒரத்./27 |
| நந்திமங்கலம் | தர்./ஓசூ./76 |
| அஞ்செட்டி | தர்./தேங்./90 |
| குணசீலம் | திருச்./முசி./55 |
| வாங்கல் | திருச்./கரூ./20 |
| வாகைக்குளம் | திரு./சங்கர./38 |
| குலசேகரநல்லூர் | திரு./கோவி./11 |
| திருநந்திபுரம் | தெ.ஆ./விழுப்./34 |
| கழுமலம் | தெ.ஆ./திருக்./27 |
| நஞ்சநாடு | நீ./உத./2 |
| முதுமலை | நீ./கூட./4 |
| கொடும்பாளூர் | பு./குள./4 |

| | |
|---|---|
| அமஞ்சி | பு./அறந்./14 |
| திண்டல் | பெ./ஈ./47 |
| நிழலி | பெ./காங்./(தாரா)30 |
| எரியோடு | ம./வேட./22 |
| விராலிப்பட்டி | ம./நிலக்./104 |
| பாச்சல் | வ.ஆ./திருப்.2./99 |
| வெண்மணி | வ.ஆ./போ./31 |

**சிறு கிராமங்களுக்கான குறியீட்டு எண் அமைத்தல்**

நிலவருவாய்ப் பெருங்கிராமத்தின் கீழ் அமைகின்ற சிறு கிராமங்களைக் குறிப்பிட மாவட்ட, வட்ட கிராமத்தின் சுருக்கெழுத்துக்குறியீடுகள், நிலவருவாய் எண் குறியீடுகள் ஆகிய மூன்றுடன் பெருங்கிராமத்தின் முதல் எழுத்தையும் நான்காவதாகச் சேர்த்துக் குறிப்பிடுக.

எடுத்துக்காட்டு: வடுகபாளையம் கோ. / அவி./ 30 / கு.

விளக்கம் : கோ. – கோயம்புத்தூர் மாவட்டம் ; அவி. – அவினாசி வட்டம் ; 30 – வடுகபாளையத்தின் பெருங்கிராமமாகிய குப்பேபாளையம் என்ற ஊரின் நிலவருவாய் எண் ; கு – பெருங்கிராமமாகிய குப்பே பாளையத்தின் முதல் எழுத்து.

சிறு கிராமங்களைக் குறிக்க நான்கு பகுதியாய் (மாவட்டம்' வட்டம், பெருங்கிராமம், சிறுகிராமம்) அமையும் குறியீடும், பெருங்கிராமத்தைக் குறிக்க மூன்று (மாவட்டம், வட்டம், பெருங்கிராம எண்.) பகுதியாய் அமையும் குறியீடும் கிடைக்கும்.

சிறு கிராமங்களின் பெயர்ப்பட்டியல்களை வட்ட, மாவட்ட அலுவலகங்களிலிருந்தும் திரட்டலாம். ஒவ்வொரு மாவட்டத்திற்குமாக தனித்தனியாக தமிழ்நாடு அரசு வெளியிட்டுள்ள Hand book of Electoral Areas நூல்களில் சிறு கிராமங்களின் பெயர் முதலிய விவரங்கள் அடங்கி உள்ளன.

**சிறு பெயர்களுக்கு குறியீடுகள் அமைத்தல் :**

பெருங்கிராமம், சிறுகிராமங்களின் பெயர்கள் தவிர்ந்த சிறு பெயர்களாகிய தோட்டம், தோப்பு, வயல், தெரு இயற்கை அமைப்புகள் முதலியவற்றின் பெயர்களைக் குறிக்க அவை உள்ள பெருங்கிராமம் அல்லது சிறு கிராமத்தின் குறியீடுகளோடு சர்வே எண்ணைக் கொடுக்கலாம். அல்லது பெரிய (1'' - 1 மைல்) நிலப்

படங்களில் தீர்க்கரேகை அட்சரேகையால் கிடைக்கும் சதுரங்களை எண்ணிட்டுக் குறியீடாக அமைக்கலாம். அல்லது கிராம நிலப் படத்தில் உள்ள பிற ஏதாவது குறியீடுகளை அமைக்கலாம். அவ்வாறு அமைக்கும்போது சுட்டப்படும் பெயர் எதைக் குறிக்கிறது (தோட்டம், வயல், ஓடை முதலியவை) என்பதையும் சுருக்க முறையில் குறித்துச் செல்க.

எ–டு : 1. வெள்ளியங்காடு பெ./காங் /30/நி./ 695
தோ.(ட்டப்)பெ.(யர்)

2. சின்னக்காக்கப்பள்ளம் பெ./காங்./30/நி. 696
ஓ.(டை)பெ.(யர்)

3. இராஜவீதி கோ./அவி./57/சே
தெ.(ருப்)பெ.(யர்)

நகரங்களிலும், கிராமங்களிலும் உள்ள தெரு, சாலைப் பெயர்களுக்கு அவ்வந் நகர கிராம எண்களையே (சிறு கிராமங்களுக்குக் கொடுப்பதைப் போல்) அமைக்கலாம். பெரிய நகரங்களாயின் நகராட்சி வார்டு எண்களைக் கொடுக்கலாம். அவ்வம்மாவட்டங்களிலுள்ள பெரிய நகரங்களின் நிலப்படங்களை இதற்குப் பயன்படுத்துக.

இச் சிறுபெயர்களை நேரடிக் கள ஆய்வில் திரட்ட முடியும். Settlement Register (கிராம அடங்கல்) முதலியவற்றிலும் இவற்றின் பெயர்கள் சில சமயம் குறிப்பிடப்பட்டிருக்கும்; அவற்றிலிருந்து நிலங்களின் சர்வே எண்கள் கிடைக்கும்.

எத்தகைய குறியீடுகளை அமைத்துக்கொண்டாலும் அதை விளக்கும் குறியீட்டுத் திறவுகோல் (Key to the codes) ஒன்றை முதலில் தயாரித்து வைத்துக் கொள்ளவேண்டும். மேலே குறிப்பிட்ட நான்குவகைக் குறியீடுகளுக்கிடையேயுள்ள உறவைக் (சமத்தன்மையைக்) காட்டும் பட்டியல் (Table) தயாரித்துவைத்துக் கொண்டால் நான்கு வகைக் குறியீடுகளும் உள்ள பதிவேடுகளை ஆராயும் போது பயன்படுத்த வசதியாக இருக்கும்.

சேகரித்த பெயர்களைக் குறிப்பிட்ட அளவில் உள்ள துண்டுத் தாள்களில் பெயர்களின் இடக் குறியீட்டு எண்களோடு எழுதி வைக்க வேண்டும். திரட்டிய பெயர்களை அகரவரிசைப் படுத்திவைத்துக் கொண்டால், ஊர்பெயர் அகராதி தயாரிக்கவும் மற்றும் எளிதாக ஒரு பெயரைப் பற்றிய விவரங்களை அறியவும் முடியும்.

எ.டு 5" x 3" (12.5 x 7.5 செ.மீ.)

| தெலுங்குபாளையம் கோ./கோ./28 |
|---|

## 2.2. சான்றுச் செய்திகளைத் திரட்டுதல்: (Documentation)

இது இடப்பெயர் விளக்கத்திற்குத் தேவையான எழுத்து மற்றும் வாய்மொழிச் செய்திகளைச் சேகரிக்கும் இரண்டாம் படியாகும். இதில் இரண்டு நிலைகளை நாம் காணுகிறோம்:

1. எழுத்துச்சான்றுகளைச் சேகரித்தல் (நூலக ஆய்வு)
2. வாய்மொழிச்சான்றுகளை சேகரித்தல் (களஆய்வு)

### 1. எழுத்துச் சான்றுகளைச் சேகரித்தல்

ஒலிமாற்றம், மற்றும் சமயம். வரலாறு, அரசியல், பிறமொழிக் கலப்பு முதலிய பல புறக் காரணங்களால் ஊர்பெயர்கள் திரிபு அடைகின்றன. இடப்பெயரின் மாற்றுவடிவங்களை எல்லா ஆவணச் சான்றுகளிலிருந்தும் திரட்டுதல் வேண்டும். இதிலும் குறிப்பாக முதல் வகைப் பெயர்களாகிய, வழக்கிலும் எழுத்துச் சான்றிலும் காணப்படும் பெயர்களை ஆய இச் சான்றுகள் தேவை. பழைய எழுத்துச்சான்று களில் மட்டும் காணப்படும் மூன்றும் வகைப் பெயர்களை எழுத்துச் சான்றுகளில் மட்டும் இருந்தே திரட்டமுடியும்.

**எழுத்துச் சான்றுகள்**

**சாசனங்கள்:**

இந்தியாவில் காணப்படும் சுமார் ஒரு லட்சம் சாசனங்களில் அளவிறந்த பூகோளச் செய்திகள் காணப்படுகின்றன. தானம் செய்யப்பட்ட நிலங்கள், கிராமங்கள், அவற்றின் பெயர்கள், அவற்றின் எல்லைகள் ஆகியவை இதில் விளக்கமாகக் குறிக்கப்பட்டுள்ளன.

வரலாற்றுப் பூகோளவியல் (Historcal Geography) வரலாற்று நிலக் கிடைக்கையியல் (Historical Topography) அடிப்படையில் சாசனச் சான்றுகள் ஆயப்பட்டுள்ளன.24 எனினும் ஆயப்பட வேண்டியவை நிறைய உள்ளன. உதாரணமாகத் தமிழில் காணப்படும் சுமார் நாற்பதினாயிரம் சாசனங்களில் நாலில் ஒரு பகுதியே படிஎடுக்கப்பட்டு அச்சிடப்பட்டுள்ளன.

**இலக்கியம் :**

நம் இந்திய மொழிகளில் காணப்படும் எல்லாப் பழைய இலக்கியங்களிலும், அளவிறந்த பூகோளச் செய்திகள் காணப் படுகின்றன. நம்முடைய பதினெண் மகாபுராணங்கள், உப புராணங்கள், மண்டல சதகங்கள், சிற்றிலக்கியங்கள் முதலியவற்றில் பூகோளம், ஊர் வரலாறு ஆகியன பற்றிய நிறையச் செய்திகள் உண்டு. புராணங்கள் தரும் பூகோளவியல் செய்திகள் ஓரளவு ஆயப் பட்டுள்ளன.25 இன்னும் ஆயவேண்டியவை அதிகம் உண்டு. உதாரணமாகத் தமிழில் சுமார் 500 தலபுராணங்கள் உள்ளன.26 நாட்டுக் கதைப்பாடல் போன்ற நாடோடி இலக்கியங்களும் இடப் பெயராய்விற்குத் துணை செய்யும்.

**பிற நாட்டார் குறிப்பு:**

பழைய உரோம, கிரேக்க, அராபிய, யாத்திரீகர் குறிப்பு களும், இடைக்கால சீன யாத்திரீகர் குறிப்புகளும், பிற்காலக் கிறிஸ் தவப் பாதிரிகள் குறிப்புகளும், பல நிலவியல் செய்திகளைத் தருகின்றன.

கர்னல் மெக்கன்சியால் சேகரிக்கப்பட்ட வம்சாவளிகள், கைபியத்துக்கள் முதலிய உள்ளூர் வரலாற்றுத் தொகுப்பு நூல்கள் (Chronicles) பலவும் இடப்பெயராய்விற்குத் துணை செய்யும். ஆனந்த

---

24. Vide 'F. N. 7
25. Pusalkar. A. D., 'Puranic Studies' **Ibid, pp.** 235 - 247
26. எஸ். கிருஷ்ணசாமி, தமிழில் தலபுராணங்கள், நாகர்கோவில், 1974.
    Nachimuthu, K., 'Sthalapuranas in Tamil', paper presented in the Seminar on the Literary Heritage of the Tamils, conducted by the International Institute of Tamil Studies, Madras, 1978 (Unpublished).

ரங்கம் பிள்ளை நாட்குறிப்பு போன்றவையும் உதவும். தஞ்சை, சென்னை, திருவனந்தபுரம் முதலிய இடங்களிலுள்ள ஏட்டுச் சுவடிகளும் ஆராயப்படவேண்டியவை.

**தற்கால அரசு ஆவணங்கள்**

நாட்டின் சில பகுதிகளுக்கு ஹைதர்அலி, திப்புசுல்தான் ஆகியவர்களின் கீழ்த் தயாரிக்கப்பட்ட *பைமாஷீ பதிவேடு*, இனும் *பதிவேடுகள்* காணப்படுகின்றன. வெளிநாட்டார் ஆட்சிக் காலத்திய அரசு ஆவணங்கள் தொடர்ச்சியாகக் கிடைக்கின்றன. அவற்றில் சர்வே ஆப் இந்தியாவின் மேப்புகள், நினைவுக் குறிப்புகள், நிர்வாக ஆவணங்களாகிய கிராம அடங்கல் (RSR) முதலியன இடப்பெயராய்வாளருக்கு மிகுந்த பயனளிப்பன.

புக்கானன் போன்று கூர்ந்து நோக்கிய பயணிகளின்குறிப்புகள்' எண்ணிறந்த தனிப்பட்டவர்களின் சொந்தக் குறிப்புகள், அலுவலகக் குறிப்புகள், கடிதங்கள் ஆகியவையும் உதவக் கூடியனவே. 27

இதிலுள்ள சான்றுகளை மாநில மத்திய ஆவணக் காப்பகங்கள், இந்தியா அலுவலக நூலகம் (லண்டன்), பிரிட்டிஷ் அருங்காட்சியக நூலகம் ஆகியவற்றில் பார்க்கலாம்.

மேலே சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டவை தென்னிந்தியா சம்பந்தப்பட்ட மாதிரிக்கான சில சான்றுகள் மட்டுமே. இடப்பெயராய்வாளன், தான் ஆயப்புகும் பகுதி பற்றிய எல்லாச் சான்றுகளையும் தொகுத்து வைத்துக் கொண்டு - அவற்றை ஆராய்வது நல்லது.

இடப் பெயர்களின் மாறுபட்ட வடிவங்களைத் தனித் தனித் துண்டுத்தாள்களில் எழுதிக் கொள்ள வேண்டும். சான்றுகளின் காலம் இடம் முதலியவற்றோடு அவை பற்றிய நூலடைவுக் குறிப்புகளும் சுட்டுக் குறிப்புகளும் அதில் இடம் பெறவேண்டும். இடப் பெயர், களுக்குப் பல மாறுபட்ட வடிங்கள் கல்வெட்டு, நிலப்படம் முதலியவற்றில் காணப்படுவதுண்டு.

27. Brian J.Murton, 'Some sources for the Geography of South India', **Pacific view point** Vol. II. No.2, (1970), pp.188-187.

எ-டு.

| பெயர்வடிவம் | ஆண்டு | இடம் | சுட்டுக் குறிப்பும் நூலடைவுக் குறிப்பும் |
|---|---|---|---|
| 1. (இ) ராஜராஜபுரம் | கி. பி. 1387 | தாராபுரம் | S. I. T. I. 309 |
| 2. ராதாபுரம் | கி. பி. 1244 | பழையகோட்டை | S. I. T. I. 1222 |
| 3. தாராபுரம் | கி. பி. 1795 | புரவிப்பாளையம் | S. I. T. I. 1187 |
| 4 சுசீந்திரம் | கி. பி. 1134 & 1629 | சுசீந்திரம் | T. A. D. S. N. 1968/161 & 1968/234 |
| 5. சிவிந்திரம் | கி. பி. 9-10 நூற் 1125 & 17 - 18 | சுசீந்திரம் | T. A. D. S. N. 1968/180 1968/149 & 1968 230 |
| 6. சூழ்சீந்திரம் | கி. பி. 1544 | சுசீந்திரம் | T. A D. S. N. 1968/159 |
| 7. சுவீந்திரம் | கி. பி. 1237 | சுசீந்திரம் | T. A D. S. N. 1968/169 |
| 8. சூழ்சிவிந்திரம் | கி. பி. 1590 | சுசீந்திரம் | T. A. D. S. N. 1968/238 |
| 9. சுசெந்திரம் | கி. பி 17-18 நூற். | சுசீந்திரம் | T. A. D. S. N. 1968/239 |
| 10. திருச்சிவிந்திரம் | கி. பி. 956 & 9-10 நூற். | சுசீந்திரம் | T. A. D. S. N. 1968/210 1968/206 |
| 11. திருச்சுசீந்திரம் | கி. பி. 10 | சுசீந்திரம் | T. A. D. S. N. 1968/181 |

எ—டு: இடப் பெயர்களில் மாறுபட்ட வடிவங்களைத் தனித்தனித் துண்டுத் தாள்களில் கீழ்க்கண்ட முறையில் எழுதிக் கொள்ள வேண்டும்.

5"x 3"(12.5x7.5cm)

1. பெயர் வடிவம் :
2. சான்றின் விவரங்கள் (நூலடைவு, சுட்டுக் குறிப்புகள்—சுருக்கக் குறியீட்டில்):
3. ஆண்டு:
4. இடத்தின் இருப்பு:
5. மொழி முதலிய பிற விவரங்கள்:

கல்வெட்டிலிருந்து பெயர்த்தெழுத ஒரு உதாரணம்:

1. ராஜராஜபுரம்
2. S.(outh) I.(ndian) T.(emple) I.(nscription) No.309
3. கி.பி. 1387
4. தாராபுரம் (கோவை மாவட்டம்)
5. தமிழ்க் கல்வெட்டு

வரைபடத்திலிருந்து பெயர்த்தெழுத ஒரு உதாரணம் :

1. Pyney
2. Lambton's 8 mile plan of the Southern Province
3. கி.பி. 1811
4. பழனி
5. ஆங்கில வரைபடம்

**கள ஆய்வு**

கள ஆய்வு - செய்தி சேகரிக்கும் நிலையில் அடுத்த படி. அகல ஆய்வு, சிற்றளவாய்வு இரண்டிலுமே களஆய்விற்கு முக்கிய இடம் உண்டு. Prof. W.F.H. Nicolaisen, 'Field and Place name Research' என்ற கட்டுரையில் கீழ்க் கண்டவாறு கூறுகிறார்:

"கள ஆய்வின்றிச் செய்யப்படும் இடப்பெயர் ஆய்வு உயிரற்ற பிணம் போன்று, உண்மையொடு உறவற்றது. அதிலிருந்து வெளியாகும் முடிவுகள் நிறைவளிக்காதவை."

இந்தியாவில் இடப்பெயர் ஆய்வு தொடர்பாகப் பரந்த கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டு அவற்றிலிருந்து கிடைத்த அனுபவங் களிலிருந்து ஒரு சரியான முறையியல் இன்னும் உருவாகவில்லை. எனினும் ஸ்காட்லாந்து இடப்பெயர் ஆய்வில் கள ஆய்வு பற்றி எழுதிய பேரா. நிக்கொலெய்சன் கருத்துக்களைப் 28 பார்க்கும் போது நம் நாட்டிலும் அதை ஒத்த சூழலும் பிரச்சினைகளும் உள்ளன எனலாம். எனவே அவர் கருத்துக்களை அடியொற்றி, என்னுடைய மிகச்சிறிய கள ஆய்வு அனுபவங்களையும் வைத்து இப்பகுதியை விளக்குகிறேன்.

இடப்பெயராய்வுக் கள ஆய்வு மேற்கொள்ளப்புகும் ஆய்வாள னுக்குச் சில அடிப்படைக் கேள்விகள் எழுகின்றன.

1. கள ஆய்வில் எத்தகைய செய்திகளைச் சேகரிக்கவேண்டும்?
2. யார் கள ஆய்வைச் செய்வது?
3. கள ஆய்வை எப்படிச் செய்வது?
4. தேவையான செய்திகளைச் சேகரிக்க யாரை அணுகுவது?

இக்கேள்விகளுக்கு ஒவ்வொன்றாக விடை காண்போம்.

**1. கள ஆய்வில் சேகரிக்கப் படவேண்டிய செய்திகள்:**

இடப்பெயராய்வின் நான்கு நிலைகளுக்கும் கள ஆய்வு உதவும் படியாக இருக்கக் கூடியது. வரைபடம், மற்றும் ஆவணங்களிலிருந்து பெயர்களை எழுதி எடுக்கவும் ஆவணங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட பெயர்களின் உச்சரிப்பை பதிவு செய்யவும், இடங்களுக்கு நேரில் சென்று பார்த்து எழுத்தில் உள்ள பெயர்களை அடையாளம் காணவும் இயற்கை அமைப்பு முதலியன பற்றிய விவரங்களைத் திரட்டி இடப் பெயர்களை விளக்கஞ்செய்யத் தேவையான தடயங்களைப் பெறவும் கள ஆய்வு பயன்படும்.

---

28. Nocolaisen, op.cit.

**1. பதிவாகாத பெயர்களைத் திரட்டுதல் (மூன்றும் வகைப் பெயர்கள்):**

முன்பே குறிப்பிட்டபடி, அரசு ஆவணங்கள் குடியிருப்புப் பெயர்களையே தருகின்றன. 1''–1 மைல் நிலப்படம் கூட எல்லாப் பெயர்களையும் அடக்க இயலாது. நில அடங்கல் - ஆவணத்தில் கூடச்சில குறைகள் காணப்படலாம். முன்பே நில அளவைகள் நடந்த சூழல், பெயர்களைத் தெரிந்து கொண்ட அடிப்படை, அவற்றிற்கான ஆதாரங்கள் ஆகியன பற்றி இன்று நமக்கு ஒன்றும் தெரியாது. பெயரைத் தொகுத்த சர்வேயர்கள் தெரிந்தோ தெரியாமலோ சிலவற்றை விட்டிருக்கலாம். எனவே பதிவு செய்யப்படாத பல பெயர்கள் நாட்டுமக்கள் வழக்கில் மட்டுமே உள்ளன. சில இடங்களில் ஒரே ஊருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்கள் (ஒன்று நிர்வாகப்பெயர், இன்னொன்று வழக்குப்பெயர், இன்னொன்று சிறுகுழுப்பெயர்) காணப் படலாம். எ-டு: நிர்வாகப் பெயர்: நாகலிங்கபுரம்; வழக்குப்பெயர்: கணக்குப்பிள்ளை புதூர். இன்னும் சில இடங்களில் சாதி முதலியவற்றை வைத்துக் கொல்லர் தெரு / குடி எனவும் தெற்குப்புதூர் எனவும் ஊரார் குறிப்பிடுவர். இவைகளை எல்லாம் கள ஆய்வின் மூலமே திரட்டியாக வேண்டும்.

***சிறு பெயர்கள்*** (Unrecorded minor names):

பதிவு செய்யப்படாது, வழக்கில் மட்டும் காணப்படும் இச்சிறு பெயர்களில் தான் நம் நாட்டுப்புறங்கள் மொழியோடு இணைந்து வாழ்வதைப் பார்க்கிறோம்; இவற்றில் கிளைமொழிச் சொற்களும் (தன்னாசியப்பன்காடு, நாட்ராயன்கோவில்) வழக்கிழந்த சொற்களும், உள்ளூர் வரலாற்றுச் சம்பவங்களும் (எ-டு: அப்புபிள்ளை வேப்பமரம், சுங்கம்) காணப்படும். இவ்வகைப் பெயர்களில் பலவும் சிறிய இயற்கை அமைப்புக் கூறுகளைச்சுட்டுவனவாக இருப்பினும், இடப் பெயராய்வு, கிளைமொழி ஆய்வு ஆகியவற்றில் இவற்றின் சிறப்பைக் குறைத்து மதிப்பிட இயலாது. மனிதன்மொழிமூலம் தன் சூழலைப் புரிந்துகொள்ள முயன்ற முயற்சிகளின் விளைவுகளே இப்பெயர்கள். இவற்றில் பலவும் சாதாரணச் சொற்களுமாகாது (மலை, ஆறு, கீழூர், மேலூர்). இயற்பெயர்களுமாகாது இடைப்பட்ட நிலையில் விளங்கும். இருப்பினும் இச் சொற்களை மாறுபாடின்றிப் பலரும் திரும்ப திரும்பச் சொல்லியும் அதன் குறிப்பிட்ட பொருளில் புரிந்தும் கொண்டால், இவற்றையும் பெயராகக் கொண்டு 'பதிவாகாத பெயர்கள்' என்ற நிலையில் ஒரு முழு அளவாய்வில் சேகரித்தாக வேண்டும்.

இங்கு குறிப்பிடப்படும் இச்சிறுபெயர்கள் உள்ளூர் மட்டத்தில் தெரிந்தவையாகவும், சின்னுள் வாழ்நாள் உடையனவாகவும் இருக்கும். நாட்டுப்புறங்களில் நன்கு பழகியவருக்கே இப்பெயர்கள் வழங்குவது தெரியும். இத்தகைய பெயர்கள் பற்றிய அறிவு பழைய தலைமுறையோடு மறைந்து வருகிறதெனலாம். மலைப் பாங்கான இடங்கள், கடலோரப் பகுதிகள், வனப்பகுதிகள் போன்ற ஒதுக்குப் புறமான பகுதிகள் முதியதலைமுறையினரின் வாழ்வோடு இணைந் திருந்தது போன்று இளைய லைமுறையினரோடு இணைந்திருக்கவில்லை. எனவே இவற்றைஎல்லாம் மறையுமுன் உடனடியாகச் சேகரித்தாக வேண்டும். இல்லை என்ருல் இவை அழிந்தொழியும். இதே போல வயல், தோட்டப்பெயர்களும் மிகப் பழமையானவையாகும். ஆனுல் அவை உரிமை மாற்றம் முதலியவற்ருல் மறக்கப்பட்டு மறைந்து வருகின்றன; புதிய சொந்தக்காரர்கள் பழைய பெயர்களை விட்டுவிட்டுப் புதிய பெயர்கள் வைக்கின்றனர். இடப்பெயராய்வாளனுக்கு புதுப்பெயரும் வேண்டியதுதான், அதைவிடப் பழைய பெயர் மிக முக்கியமானதாகும்.

உண்மையில் நாம் நினைப்பதை விட இச்சிறுபெயர்கள், எண்ணிக்கையில் மிக அதிகம் உள்ளன. மாவட்டத்திற்கு மாவட்டம் இவற்றின் எண்ணிக்கை அளவில் சில வேறுபாடு காணப்படலாம். ஒவ்வொரு பகுதி வரைபடங்களைப் பார்க்கும் போதும் அதில் சேர்க்கப் படாத பல புதிய பெயர்களை நாம் தர இயலும். இவற்றைத் [29] திரட்டவே கள ஆய்வு மிக முக்கியமானதாக உள்ளது.

### 2. எழுத்துச் சான்றுகளிலுள்ள 1 & 3 ஆம் வகை செய்திகளைப் பதிவு செய்தல்:

#### எழுத்துச் சான்றுகளைச் சரிபார்த்தல்:

எழுத்துச் சான்றுகளிலுள்ள பெயர்களைப் பற்றிய செய்திகளைத் திரட்டவும் கள ஆய்வு பயன்படும். எழுத்துச்சான்றுகளிலுள்ள பெயர்களுடைய உச்சரிப்பு, எழுதும் முறை, அவை வழக்கிலுள்ளதா, அல்லது மறைந்து விட்டதா என்பது முதலிய பலவற்றைச் சரி பார்க்கக் கள ஆய்வு பயன்படும்.

29. Ibid

3. **எல்லா வகைப் பெயர்களைப் பற்றியும் விளக்கமான விவரங்கள் சேகரித்தல்:**

**அ. நேரில் உற்று நோக்கல்:**

இடங்களின் இயற்கை நில அமைப்பை நேரில் உற்று நோக்கி அவை பற்றிய சிறு வருணனைகளை எழுதி வைத்தால் பெயர் விளக்கத்திற்கு அவை துணையாகும்.

**ஆ. நாட்டுபுறச் செய்திகளைச் சேகரித்தல்:**

இடப்பெயர்கள் பற்றி, குறிப்பாக நிகழ்ச்சிப் பெயர்கள் பற்றி மக்கள் கூறும் சொற்பொருள் விளக்கம், தலக்கதைகள், புராணங்கள், மரபுகள் முதலியவற்றைத் திரட்டலாம்.

**இ. பெயர்களின் "வழக்கு ஆட்சி"** (Currency value):

ஒரு இடப் பெயரை அவ்வூரார் முழுதும் பயன்படுத்துகின்றனரா, அல்லது ஒரு சமூகம், ஒரு தொழில் செய்வோர், ஒரு குறிப்பிட்ட வயதினர் மட்டும் பயன்படுத்துகின்றனரா என்பது போன்றசெய்திகளையும் திரட்ட வேண்டும். உதாரணமாக –கடற்கரைப் பகுதிகளுக்கு உள்நாட்டார் ஒரு பெயரும், மீன்பிடிப்போர் ஒரு பெயரும் வழங்குவர். இத்தகைய இருபெயர்கள் (doublenomenclature) திரட்டப்படவேண்டும்.

ஒரு நல்ல இடப்பெயர் ஆவணக்காப்பகத்தில் ஒவ்வொரு பெயருக்கும் இத்தகைய எல்லாச் செய்திகளும் அடங்கிய கோப்பு அடங்கல் (dossier) இருத்தல் வேண்டும். இது பெயர் விளக்கத்திற்கு மிகுந்த துணை செய்யும் என்பதை எடுத்துக் கூறவேண்டிய அவசியமில்லை 30.

2. **கள ஆய்வு செய்வோர் யார்?**

பெரிய அளவிலான இடப்பெயர் அளவாய்வுகளில் அதைச் சேர்ந்த ஒரு சில ஆய்வாளர்களினால் மட்டும் இக் கள ஆய்வைச் செய்து விட முடியாது. முதற்காரணம், ஒருவரின் அல்லது சிலரின் வாழ்நாள் முழுமையும் கூடக் களஆய்வை முடிக்கப் போதுமானதாக இராது; இரண்டாவது இத்தகைய கள ஆய்வாளன் ஒருவனே, பல கிளை மொழிகள், பிரதேசங்களின் சூழ் நிலைகள் ஆகியவற்றை அறிந்தவனாக இருக்கஇயலாது. எனவே இடப்பெயராய்வுக் கள ஆய்வைப் பலர் கூடிப் பகிர்ந்தே செய்ய முடியும். உதாரணமாக

30. Ibid.

அவ்வப்பிரதேசங்களிலுள்ள உள்ளூர் உதவியாளர்கள் தங்கள் நேரத்தையும் சக்தியையும் ஈந்து களஆய்வுப் பணிகளில் பங்கேற்று ஒத்துழைத்தாலே இதைப் பூர்த்தியாக்க இயலும்.

இத்தகைய கள ஆய்வாளராக யார் வேண்டுமானாலும் ஒத்துழைக்கலாம்; இன்ன தகுதியுடையார் என வரம்பு ஒன்றுமில்லை. உதாரணமாக ஸ்காட்டிஷ் இடப்பெயர் அளவாய்வில், பல்கலைக் கழகத் துணை வேந்தர், தலைமையாசிரியர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள், உழவர்கள், வன அதிகாரிகள், வீட்டுப் பெண்கள், வங்கியாளர்கள், பள்ளிக் குழந்தைகள், போலீஸ்காரர் முதலிய 116 பேர் மிகத் திறமையாக ஈடுபட்டு உதவுகின்றனர். அவரவர், ஆர்வம், உழைப்பு, கூர்த்த அறிவு இவற்றிற்கேற்ப இவர்கள் திரட்டும் செய்திகளின் தன்மை சிறந்து விளங்குகிறதே ஒழிய இவர்களின் சமூக அந்தஸ்திற்கும் கள ஆய்விற்கும் யாதொரு தொடர்புமில்லை.

கள ஆய்விற்கு, ஆசிரியர்கள் பல நிலையிலும் தகுந்தவர்களாகக் காணப்படுகின்றனர். கள ஆய்வு பெரும்பாலும், நாட்டுப்புறங்களில் செய்யப்படுவது. நாட்டுப்புறத்தில் வேலை செய்யும் ஆசிரியர்கள், அதோடு நெருங்கிய தொடர்புள்ளவர்களாக இருக்கிறார்கள். பெரும்பாலோர் 3, 4 தலைமுறை ஊரோடு தொடர்புடையவர்களாயிருப்பர். வெளியூர்க்காரராயிருந்தாலும் விரைந்து உள்ளூர் வரலாறு, மரபு, வட்டார வழக்கு ஆகியவற்றை அறிந்து கொள்கிறவர்களாகவும் இவ்வாசிரியர்கள் காணப்படுகின்றனர். அடுத்து முக்கியமானது இடப்பெயராய்விற்கு இன்றியமையாத நிலப்படங்களை கையாளும் ஆற்றல் ஆசிரியர்களுக்கு உண்டு. ஆசிரியன் தான் கற்பிக்கும் மொழி, வரலாறு, பூகோளம் முதலியவற்றில் இடப்பெயராய்வுச் செய்திகளை இணைத்துப் பயன்படுத்திக் கொள்ளலாம். இடப்பெயர்களைத் திரட்டப் பள்ளிப்பிள்ளைகளை உபயோகிக்கும் போதும் அவற்றை வரைபடங்களில் பெயர்த்து எழுதும் போதும் அவர்களைக் கண்காணிக்கச் சிறந்தவர்கள் ஆசிரியர்களே. இது வெறும் இலட்சிய வாதம் மட்டுமல்ல ஸ்காட்லாந்திலும் மற்றும் பல நாடுகளிலும் இது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.[31]

இந்தியாவில் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களை மக்கள் தொகைக் கணக்கெடுப்பு, வாக்காளர் பட்டியல் தயாரிப்பு ஆகியவற்றில் பயன்

---

31. Ibid.

படுத்துகிறோம். இதே முறையில், இடப்பெயர்க் கள ஆய்வில் இடப் பெயர் ஆய்வின் தன்மைக்கு ஏற்ப ஆசிரியர்களைப் பயன்படுத்த முடியும். அரசின் மூலம் ஆசிரியர்களின் உதவியைப் பெறுவது கடின மன்று. பணம் அல்லது வேறு ஏதாவது ஊக்க ஊதியம் இன்றி ஆசிரியர்கள் உதவ முன் வருவார்களா என நாம் நினைக்கலாம் ஆசிரியர்களிடம் உள்ளூர் வரலாறு, பூகோளம் ஆகியவற்றில் ஆர்வம் ஏற்படச் செய்தால் அதன் காரணமாக இப் பணிக்கு அவர்கள் உதவ முன் வரக் கூடும். ஏனெனில் – இடப் பெயராய்வுப் பணிகளுக்குப் பெரும் பணம் செலவழிப்பது சாத்தியமல்ல.

ஒவ்வொரு ஊராட்சியிலிருந்தும், திறமையும் ஆர்வமும் மிக்க ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களைத் தலைமைக் கள ஆய் வாளராக அல்லது உதவியாளராக நியமித்துக் கொள்ளலாம். அவர்கள் அவ்வப்பகுதி அல்லது ஊருக்குப் பொறுப்பாக இயங்கித் தம் உடன் பணியாற்றுவோரை மேற்பார்வையிடுபவர்களாக இருப்பர்.

ஊராட்சி ஆசிரியர்களின் மாதாந்திரக் கூட்டங்களில் இவர் களுக்குக் கள ஆய்வில் பயிற்சி அளிக்கலாம்; அல்லது எல்லாக் குறிப்புகளும், விளக்கங்களும் அடங்கிய அச்சடித்த துண்டு வெளியீடு களை (அல்லது வினா நிரல்களைக்) கொடுக்கலாம்; அல்லது குறுகிய காலப்பயிற்சி வகுப்பில் தலைமை கள ஆய்வாளர்களை மட்டும்பயிற்று வித்தாலும் போதும்; அவர் ஊருக்குச் சென்று தன் உதவியாளர் களுக்கும் பயிற்சி அளிப்பார்.

கள ஆய்விற்குப் பொறுப்பான-மேல்நிலைத் திரட்டாளர் ஒருவர் காலந்தோறும்- ஊர்த் தலைமைக் கள ஆய்வாளர்களிடம் சென்று அவர்கள் சேகரித்தவற்றைத் திரட்டிக்கொண்டு அவர்களின் சந்தேகங்கள் ஏதாவது இருந்தால் அவற்றைத் தீர்த்து புதிய விளக்கம் ஏதாவது தேவையிருந்தால் அதையும் கொடுத்துச் செல்ல லாம்.

### 3. கள ஆய்வை எவ்வாறு செய்வது ?

களஆய்வில், இடப்பெயர்கள் இருக்கும் இடம், அவற்றின் பேச்சு வழக்கு வடிவம் முதலிய பல விவரங்களைச் சேகரிக்க வேண்டி யிருப்பதால் 1. ஒரு நிலப்படம், 2. ஒரு நோட்டுப்புத்தகம், 3. ஒலிப் பதிவுக் கருவி, 4. முன்கூட்டித் தயாரிக்கப்பட்ட சிறிய வினாநிரல் அமைப்பிலுள்ள அஞ்சல் அட்டைவடிவத்தாள் அல்லது அட்டை

முதலிய முக்கிய கருவிகள் தேவை. கள ஆய்வுச் செய்திகளைக் கீழ்க் கண்ட முறைகளில் பதிவு செய்யலாம்.

*1) முதன் முறை:*

மிகப்பெரிய நிலப்படத்தின் படி ஒன்று கையில் வைத்துக் கொள்ள வேண்டும். நாம் கருதும் இடப் பெயரைக் குறிக்கும் (குறியீட்டு) எண்ணை வரைபடத்தில் அது உள்ள இடத்தில் குறித்துக் கொள்ள வேண்டும். அதே எண்ணை நோட்டுப்புத்தகத்திலும் குறித்துக் கொண்டு, அந்த நோட்டுப் புத்தகத்திலேயே, அதன்பெயர், வழக்கு வடிவம், கதைகள், விளக்கங்கள், இயற்கையமைப்பைப் பற்றிய வருணனை.

*2) இரண்டாம் முறை:*

இம்முறையில் நோட்டுப்புத்தகத்திற்குப் பதில் முன்கூட்டித் தயாரிக்கப்பட்ட சிறிய வினா நிரல் அமைப்பிலுள்ள அஞ்சல் அட்டை வடிவிலுள்ள தாள் அல்லது அட்டையில் செய்திகளைச் சேகரிக்கலாம். இது விரும்பத்தக்கதும் வசதியானதும் ஆகும்.

இவ்வாறு சேகரிக்கும் பொழுது ஊர்பெயர்களின் இருப்பிடத்தை நிலப்படத்தில் சுட்டும் இடக் குறியீட்டு எண் ஒன்றை எழுதிக் கொள்ளுதல் வேண்டும். இதற்கு முன்பு குறிப்பிட்ட **நிலவருவாய் இடக் குறியீட்டு எண்ணையே** அமைத்துக் கொள்ளலாம். நிலப்படம் கையில் இல்லாத போதும் இக்குறியீட்டு எண்களின் திறவுகோல் பட்டியல் (Key to the code numbers) ஒன்று இருந்தால் போதும். பின்பு வசதியானபோது நிலப்படத்தில் பார்க்கவோ குறிக்கவோ செய்யலாம். வயல், தோட்டம் முதலியவற்றின் பெயர்களைக் குறிப்பிட அவற்றின் சர்வே எண்ணைக் குறிப்பிடலாம். இவற்றை எல்லாம் முன் கூட்டியே பெற்றுத் தயாரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

வினாநிரல் அமைப்பிலுள்ள அஞ்சல் அட்டை (5.5" x 3.5") மாதிரி:

1. இடத்தின் நிர்வாகப் பெயர் குறியீட்டு எண்
2. வழக்கு வடிவம் (உச்சரிப்பு)
   (ஒலி எழுத்தில்)
3. வரலாற்றுப் பெயர் வடிவங்கள்
   (மாற்று வடிவங்கள், மாற்றுப்பெயர்கள்)
4. இயற்கை, நில அமைப்பு விவரம்
5. மொழி, சாதி-முதலிய மக்கள்தொகை
   அமைப்பு விவரங்கள்
6. வரலாற்றுச் சின்னங்கள் முதலியன
7. சொற்பொருள் விளக்கக் கதைகள்,
   தலபுராணம் வரலாற்றுச் செய்திகள்
   பெயர் அமைப்பு(பகுதி-விகுதி)
   பிற செய்திகள் முதலியன(சுருக்கமாக)
8. பக்கத்து நாற்பால் கிராமங்கள், அடைகள்
   முதலியன (பெயர் விளக்கத்திற்குத் தேவையாயின்)

சேகரித்தவர் பெயர்
(சுருக்கக் குறியீட்டில்)

முதலிய – கிடைக்கிற எல்லாச் செய்திகளையும் எழுதிக் கொள்ள வேண்டும். இதனால் நிலப்படமும் தெளிவோடு இருக்கும். நோட்டுப் புத்தகத்தில் நாம் எழுதும் செய்திகளும் எவ்வளவு நீண்டதாகவும் இருக்கலாம்.[32]

### 3. இன்னொரு முறை

ஒலிப்பதிவுக் கருவி இருந்தால் அதில் இடப் பெயர்களின் வழக்கு வடிவம், கதைகள் முதலியவற்றைப் பதிவு செய்து கொள்ளலாம். நோட்டுப்புத்தகத்தை விட ஒலிப்பதிவுக் கருவி சிறந்தது. ஏனெனில் ஒலிப்பதிவுக் கருவியில் நிறையச் செய்திகளை விரைவாகப் பதிவு செய்யலாம்; அடுத்து ஓய்வாக இருக்கும் போது அதைப் போட்டுக் கேட்டு எழுதி வைத்துக் கொள்ளலாம்; அல்லது சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளலாம். இடப்பெயர்களைத் தனியாகக் கேட்டுப்பதிவு

32. Ibid.

செய்யும் போது கிடைக்கும் வடிவங்களைவிடப் பேச்சுப் போக்கில் கூறப்படும் வடிவங்களே-உண்மையான பேச்சுவடிவங்களாயிருக்கும். பேச்சோடு பேச்சாய் வரும் அப்பெயர்களின் வடிவங்களைப் பதிவு செய்யவும் ஒலிப்பதிவுக்கருவி உதவியாயிருக்கும். ஒலிப்பதிவுக் கருவிகள் விலை கூடியதாக இருப்பதால் - மேல் நிலை இடப்பெயர் ஆய்வாளர், தன் கீழ்ப் பணிபுரியும் கள ஆய்வாளர்கள் மூலம் நோட்டுப் புத்தகங்களில் செய்திகளைச் சேகரிக்கச் செய்து அவற்றை நிரல்படுத்தி, வேண்டியவற்றை மட்டும் தேர்ந்தெடுத்து, அவற்றை மட்டும் ஒலிப் பதிவுக் கருவியில் பதிவு செய்யலாம். இத்தகைய ஒலிப்பதிவுகளை இடப்பெயர் ஆவணக் காப்பகங்களில் சேகரித்து வைக்க வேண்டும். (இடப்பெயர் சேகரிப்போருக்கு, தகவலாளி (informant) வாழும் இடம், பேசும் கிளைமொழி ஆகியன பற்றிய ஆழ்ந்த அறிவிருப்பது நல்லது.)

**நிறைவு செய்யப்பட்ட மாதிரி அட்டையும் சில விளக்கங்களும்**

கோ./கோ./47

1. கோயம்புத்தூர்/கோயம்பத்தூர்/
2. (Ko: yamptu:rr), (Ko: yemuttu:rr), (Ko: vai)
3. கோவன்புத்தூர் ஆன வீரகேரளநல்லூர்
   (கி. பி. 12 – 13)
4. —
5. தெலுங்கு, கன்னடம், மலையாளம்.
6. கோணியம்மன் கோவில்
7. 1. கோவன் என்ற இருளனால் பெற்ற பெயர்,
      கோவன்—புத்தூர் (சோழன் பூர்வ பட்டயம்)
   2. கோயன்–அரசன்; இவ்வூர்ப் பெரியகுளத்தில் முத்து
      விளைந்தது = கோயன் + முத்து + ஊர்
   3. கோணியம்மன் + ஊர் — கோயமுத்தூர்
   4. கோசர் + முத்தூர் — கோயமுத்தூர்
      கோவன் புத்தூர் – கோயம்புத்தூர் – கோயமுத்தூர்
      (ஓரினமாதல்) மூலம் திரிந்தது.
8. இவ்வூருக்குப் பக்கத்திலுள்ள காஞ்சிவாய்ப் பேரூரின் அண்மையில் தோன்றிய புதிய ஊர்; கோவைக்கு மூன்று கல் மேற்கிலுள்ள வீரகேரளம் (ஒக்கிலிபாளையம்) – என்ற ஊர்ப் பெயரை நோக்குக.

கி. நா. (ச்சிமுத்து)

**அட்டையில் சேகரிக்க வேண்டிய செய்திகள் பற்றிய சில விளக்கங்கள்**

**1. இடத்தின் நிர்வாகப் பெயர்:**

இதில் அரசாங்க ஆவணங்களில் பெரு வழக்கில் இருக்கும் பெயர் வடிவத்தைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதுக. தற்கால எழுத்து வழக்கில் ஒன்றுக்கு மேற்பட்ட மாற்று வடிவங்கள் இருந்தால் அவற்றையும் தருக. (பார்க்க: இரண்டாம், மூன்றும் குறிப்புகள்.)

*குறியீட்டு எண்:* ஊரின் இடக்குறியீட்டு எண்ணை அட்டையின் வலது மேல் கோடியில் எழுத மறக்க வேண்டாம்.

**2. வழக்கு வடிவம் உச்சரிப்பு: (ஒலி எழுத்தில்)**

ஒவ்வொரு ஊர்ப் பெயரும் பேச்சுவழக்கில் பல்வேறு விதமாக உச்சரிக்கப்படும். இவற்றைப் **பேச்சு வழக்கு மாற்று வடிவங்கள்** எனலாம்.

அதைப் போலவே இன்று ஒரு பெயரில் பொதுவாக அறியப் படும் ஊர் சிறு சிறு குழுக்களால் வேறு பெயரில் அழைக்கப்படலாம். உதாரணமாக: நாகலிங்கபுரம் என்ற நிர்வாகப் பெயர் பெற்ற ஊர் புதூர் கணக்குப்பிள்ளை புதூர் என்று உள்ளூர் மக்களால் அழைக்கப் படுகிறது. இன்னும் சில இடங்களில் ஊர்ப்பெயரை முழுமையாக குறிப்பிடாது கிழக்காலூர், மேற்காலூர் என்றும் குறிப்பிடுவர். இத்தகைய பெயர்களைப் **பேச்சு வழக்கு மாற்றுப் பெயர்கள்** என அழைக்கலாம். இவ்வகைப் பெயர்களை இருமொழி பேசும் பகுதிகளில் அதிகம் காணலாம். உதாரணமாக, தர்மபுரி மாவட்டத்தில் எருமத் துனஹள்ளி என்று கன்னட மக்கள் அழைக்கும் ஊரை தமிழ்மக்கள் எருமத்தம்பட்டி என அழைப்பர். இவ்வாறு ஒரே ஊர்ப் பெயரின் பேச்சு வழக்கு மாற்று வடிவங்களையும், மாற்றுப் பெயர்களையும் (ஒரு மொழியிலாயினும், பலமொழியிலாயினும்) திரட்டுதல் வேண்டும். இத்தகைய வடிவங்களும், பெயர்களும் யாரால் எங்கெங்கு எவ்வெவ் வாறு பயன்படுத்தப்படுகின்றன, இவற்றின் வழக்காட்சி என்ன ஆகியன பற்றிய விவரங்களையும் குறிப்பிட வேண்டும்.

பேச்சு வழக்கு வடிவங்கள், பெயர்கள் ஆகியவற்றைப் பேச்சு வழக்கில் உச்சரிக்கப்படும் முறையிலேயே ஒலி எழுத்தில் எழுதுக. இதற்கு International Phonetic Alphabet-ஐப் பயன்படுத்துக. அவ்வாறு செய்ய இயலாதவர்கள் ஆங்கில எழுத்தில் முடிந்த வரை

பெயரின் பேச்சு வடிவத்தை எழுதிக் காட்டலாம். அதுவும் இயலாத வர்கள் தமிழ் எழுத்திலேயே பேசுவதைப்போலவே எழுதிக்காட்டலாம்.

**3. வரலாற்றுப் பெயர் வடிவங்கள் :**

இன்றைய நிர்வாக வழக்கு பேச்சு அல்லாத நிலையில் கிடைக்கும் மாற்று வடிவங்கள் திரட்டப்பட வேண்டும். உதாரண மாக, பழைய நிலப்படம், கல்வெட்டு, இலக்கியம் ஆகியவை ஓர் ஊர்ப் பெயரின் மாறுபட்ட வடிவங்களைத் தரலாம். இவற்றை நாம் **வரலாற்று மாற்று வடிவங்கள்** என அழைக்கிறோம். (செங்கழு நீர்பட்டு, செங்கல்பட்டு, இராஜராஜபுரம், இராதாபுரம், தாராபுரம்)

இதைப் போலவே ஒரு ஊரின் பெயராக முன்பு ஒன்றுவழங்கி வந்து இன்று வேறு பெயர் பெற்றிருக்கலாம். (இளங்கோக்குடி பழைய பெயர்; இன்றைய பெயர் அம்பாசமுத்திரம், திருமறைக்காடு –வேதாரண்யம்) இத்தகையப் பெயர்களை **வரலாற்று மாற்றுப் பெயர்கள்** என அழைக்கலாம்.

வரலாற்று மாற்று வடிவங்களையும், மாற்றுப் பெயர்களையும் தனித்தனித் துண்டுத் தாள்களில் (5'' x 3'') திரட்டிக் கொள்க. இவ்வாறு திரட்டப்பட்ட துண்டுத் தாள்களிலுள்ள செய்திகளை எடுத்துச் சுருக்க முறையில் இக் குறிப்பில் அமைக்கவும். அவ்வாறு எழுதும் பொழுது வரலாற்று மாற்று வடிவங்கள், பெயர்கள் ஆகிய வற்றின் காலம், சான்றுதாரம் ஆகியவற்றையும் சுருக்க முறையில் அமைக்கவும்.

வரலாற்று வடிவங்களையும் பெயர்களையும் திரட்டப் பயன் படுத்திய துண்டுத் தாள்களையும் பெரிய அட்டையுடன் சேர்த்து வைத்துக்கொள்க.

**4. இயற்கை நில அமைப்பு விவரம்:**

இது பெயர் வழக்கத்திற்கு தேவையாயிருந்தால் குறிப்பிடுக. தேவை இல்லையென்றால் விட்டு விடலாம்.

**5. மொழி, சாதி, முதலிய மக்கட் தொகை அமைப்பு விவரங்கள்:**

ஒரு ஊரில் பேசப்படும் மொழிகள், வாழும் சாதிகள், செய்யப் படும் தொழில்கள் ஆகிய விவரங்கள் ஊர்ப் பெயர் விளக்கத்திற்கு துணை செய்யுமானால் அவற்றையும் குறிப்பிடுக. உதாரணமாக,

தொட்டிய பாளையம் என்ற ஊரில் இன்று தொட்டியர் வகுப்பினரே இல்லாமல் இருக்கலாம். அது இன்று குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டிய செய்தி. இத்தகைய செய்திகளை இன்று சேர்த்துக் கொள்ளலாம்.

6. *வரலாற்றுச் சின்னங்கள்*

இத்தகைய செய்திகள், பெயர் விளக்கத்திற்கு தேவையாயின் (எடுத்துக்காட்டு: கல்வெட்டுப்பாளையம், கோவில் பாளையம், ஒத்தக்கல் மண்டபம் முதலியன) தவறாது தருக. இல்லையெனில் ஆய்வாளரின் விருப்பத்தைப் பொறுத்து கற்காலச் சின்னங்கள், கோயில், கல்வெட்டுகள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளைத் தரலாம்.

7. **சொற்பொருள் விளக்கக் கதைகள்: தலபுராணம், வரலாற்றுச் செய்திகள், பெயர்அமைப்பு, பகுதி, விகுதி முதலியன (சுருக்கமாக)**

பொதுவாக இடப்பெயர்களின் சொற்பொருளை விளக்க மக்களும், அறிஞரும் கொடுக்கும் சொற்பொருள் விளக்கங்கள் (Uneducated and Educated Folk Egymologies), தலபுராணம், இலக்கியம் முதலியன தரும் கதைகள், இடப்பெயர் விளக்கத்தோடு தொடர்புடைய உண்மை வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகியவற்றை இங்கு சுருக்கமாக எழுதுக. சொற்பொருள் விளக்கங்கள் பலவும் உண்மையோடு பட்ட விஞ்ஞான பூர்வமான செய்திகள் அல்ல என்றா லும், நாட்டிலக்கியச் செய்திகள் என்ற முறையில் அவையும் மக்களின் கற்பனை வளம், சிந்தனைப் போக்கு ஆகியவற்றை அறிய உதவும். எனவே இவற்றையும் திரட்டிச் சுருக்கமாகத் தருதல் வேண்டும்.

இதே குறிப்பில் ஊர்ப்பெயரின் பகுதி, விகுதியைப் பிரித்துக் காட்டி விஞ்ஞானபூர்வமாக ஏற்றுக் கொள்ளத் தக்க பொருள் விளக்கத்தைக் கூறலாம்.

8. **பிற செய்திகள்: பக்கத்து நாற்பால் கிராமங்கள், அடைகள் முதலியன: (பெயர் விளக்கத்திற்குத் தேவையாயின்)**

தொடர்பு நோக்கி அமையும் பெயர்கள் (வடசித்தூர், தென் காசி, புத்தூர், கீழச்சேரி, மேற்சேரி, கீழக்கரை, நடுப் பாளையம் பழைய காளிபாளையம், அக்கரைதத்தப் பள்ளி, இக்கரைப்போளு

வாம்பட்டி) பலவற்றிற்கும் அவை சுட்டும் தொடர்புச் செய்திகள், பற்றிய விளக்கங்கள் கொடுக்கலாம். அதுபோலவே அடையாக அமையும் ஊர்கள் (மலைக்கோயில் தொட்டியபாளையம், எழுமாத்தூர் வேலாயுதம்பாளையம்), நில அமைப்பு விளக்கங்கள் (நஞ்சை புளியம்பட்டி, புஞ்சைபுளியம்பட்டி), நிலவருவாய்ச்செய்திகள் (ஜமீன் ஊத்துக்குளி, சர்க்கார் சாமக்குளம் அட்டவணை அனுமன்பள்ளி, முகாசி அனுமன்பள்ளி, பட்டவிருத்தி அய்யம்பாளையம்) முதலிய வற்றிற்கும் விளக்கங்கள் தருக.

வலது கீழ்க் கோடியில் சேகரித்தவர் பெயரைச் சுருக்கக் குறியீட்டில் கொடுக்கலாம்.

**ஒலிப்பெயர்பு:**

இடப்பெயர்களின் பேச்சு வடிவங்களை ஒலி எழுத்தில் எழுதிக் கொள்வதே சிறந்தது. ஆனால் நம் நாட்டில் பலருக்கும் ஒலி எழுத்தில் பயிற்சியில்லாமையால், அதற்குப் பதிலாக எல்லாக் கிராம நிலைக்கள ஆய்வாளர்களும் புரிந்து கையாளத்தக்க விதத்தில் சிக்கலற்ற எளிய ஒலி எழுத்தொன்றை நாம் படைத்துக் கொள்ளலாம். அல்லது நம் நாட்டு மொழி எழுத்துக்களுடன் வேண்டிய குறிகளைச் சேர்த்து ஒரு ஒலி எழுத்தை உருவாக்கிக் கொள்ளலாம். இனியாவது பள்ளிப் பருவத்திலிருந்தே மாணவர்க்கு ஒலி எழுத்தில் பயிற்சி கொடுப்பது அவசியம் என்பதை இங்கு வற்புறுத்த தேவையில்லை.

**தகவலாளி பற்றிய ஒரு குறிப்பு**

ஊர் நிலைக்கள ஆய்வாளர் உதவியாளருக்கு ஊரில் யாரைக் கேட்டால், தான் விரும்பும் செய்திகள் கிடைக்கும் என்பது தெரியும். வயதானவர்களைத் தகவலாளியாகத் தேர்ந்தெடுப்பது நல்லது. தான் கருதும் பொருளுக்கேற்ற சரியான வடிவம் என்று நினைத்துப் பெயர் வடிவங்களை மாற்றிக் கூறுபவரை விட, இயல்பான பேச்சுவடிவம் தருபவரே நமக்கு வேண்டியவர்.

வயல், தோட்டப் பெயர்கள் சேகரிக்கப் பள்ளிப்பிள்ளைகள் மிகுந்த உதவியாக இருக்கின்றனர் என்பது பல இடங்களிலும் நிரூபிக்கப் பட்டுள்ளது. இடப் பெயர்கள் – பழைய ஊர், நாட்டு வரலாற்றின் திறவுகோல்களாகவும், காப்பகங்களாகவும் கண்கூடாக இருப்பதை அறியுந்தோறும் பிள்ளைகளின் ஆர்வம் மிகுகிறது. மேலும் இது அவர்களுக்கும், அவர்கள் பெற்றோருக்கும், ஆசிரியர்களுக்கும் ஒரு

இன்பமும் பயனும் தரும் பொழுதுபோக்காகவும் அமைகிறது. அச்சிட்ட நிலப் படங்களுடன், மாணவர்கள் கைப்பட வரையும் நிலப் படங்களையும் நாம் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**மைய இடப் பெயர் ஆவணக்காப்பகம் :**

இடப்பெயர்களைச் சேகரிக்கவும், சேகரிக்கப்பட்ட பெயர்களைப் பேணி வைக்கவும் மைய இடப்பெயர் ஆவணக்காப்பகம் ஒன்று தேவை. தனிப்பட்டவர்களால் ஒரு மாநிலம் அல்லது நாடு முழுவதும் உள்ள இடப் பெயர்களைத் திரட்டிச் சான்று சேகரித்து விளக்கிப் பதிப்பிக்க இயலாது. குறிப்பாக, மாவட்டப் பகுதிகளிலிருந்தும் பழைய வரை படங்கள், ஆவணங்களிலிருந்தும் வழக்குப் பெயர்களையும், வரலாற்று வடிவங்களையும் சேகரிக்க உள்ளூரார் பலரின் உதவியும் தேவை. இவ்வாறு சேகரித்த செய்திகளை எல்லாம் எழுத்தில் அட்டைகளிலும், துண்டுத்தாள்களிலும் வடித்து வைத்து விடவேண்டும். (அல்லது ஒலிப்பதிவு நாடாவிலும் வைக்கலாம்.) அப்பொழுது தான் எதிர் காலத்தில் அவற்றை ஒத்துப் பார்க்கவும், பிறவற்றிற்கும் அறிஞர் களுக்குப் பயன்படும். அவ்வாறு எழுதி வைக்காவிடில், செய்தி சேகரிப்பது முழுமையடையாது. சில சமயங்களில்,கள ஆய்வுத் துணைச் செய்திகள் இன்றி வெறும் எழுத்துச் சான்றுகளை மட்டும் கொண்டு செய்யும் முடிவுகள், தவருக இல்லாமல் இருப்பினும் ஐயத்திற்கு இடந்தரும். எனவே முடிந்தவரை எல்லோரும் இணைந்து - கள ஆய்வில் பங்கேற்றுச் செய்து முடிப்பது நல்லது. 33

## 2.3 அடையாளம் காணல்:

சான்றுகளைச் சேகரிப்பதற்கு அடுத்த நிலை இடப்பெயர்களை அடையாளம் காணல் ஆகும். எழுத்துச்சான்றுகளில் கண்ட இடப் பெயர்களின் தற்கால வடிவைக் காண்பதே இவ்வாறு அழைக்கப் படுகிறது. இது மூவகையில் அமையலாம். பழையவடிவம் அப்படியே இன்றும் வழக்கிலிருக்கலாம், அல்லது பழைய பெயர் மறைந்து புதிய பெயர் வந்திருக்கலாம், அல்லது பழைய பெயர் முற்றிலும் மறைந் திருக்கலாம். தோட்டம், வயல் முதலிய குடியிருப்பல்லாதவற்றைக் குறிக்கும் சிறு பெயர்கள் முற்றிலும் மறைந்து விடுவதே பெரும் பான்மை. ஆனல் பெரிய குடியிருப்புப் பெயர்களையும் இயற்கைப் பெயர்களையும் எளிதாக அடையாளங் கண்டு பிடித்துவிடலாம். பழம் வரலாற்றுப் பெயர்களைத் திட்டமாக அடையாளம் காண இயலா

---

33. Ibid

விட்டால் வெறும் யூகங்களில் ஈடுபடாது, எதிர்கால் ஆராய்ச்சிக்கு விட்டு வைப்பதே அறிவுக்கு ஏற்றது. மறைந்து போன இடப் பெயர்களைக் கண்டுபிடிக்கவும் இந்நிலையில் முயலலாம். இதற்கும் கள ஆய்வைப் பயன் படுத்தலாம்.34

## 2.4 விளக்குதல்

பெயர்களின் உண்மைப் பொருளையும், அவை தோன்றியதன் காணத்தையும் விளக்குதலே, இடப்பெயராய்வின் இறுதி நோக்க மாகும். முதல் மூன்று நிலைகளும் இன்றிப் பொருள் விளக்கம் செய்ய முயல்வது கதை சொல்வது அல்லது புராணம் காட்டுவது போன்றதாகும். விளக்குதல் என்பது உண்மையில் சொற்பொருள் விளக்கம் செய்தலே. அதன் முறைகளை இனி விளக்குவோம்.

முதலாவதாக இடப்பெயர்களின் உண்மையான மூல வடி வத்தை நிச்சயிக்க வேண்டும். காலவாரியாகத் திரட்டிய பெயரின் பல்வேறு வடிவங்களை அடிப்படையாகக் கொண்டு மீட்டுருக் கொடுக்க வேண்டும். இதில் நாம் வரலாற்று மொழியியலின் விதிக்குட்பட்டே செயல்பட வேண்டும். ஒலியனியல், உருபனியல், பொருளனியல் மாற்றங்களைப் பற்றிய விதிகளே நமக்கு மேல்வரிச் சட்டங்களாக அமைய வேண்டும்.

சில வகையான பெயர்களின் மூலவடிவங்களை அறிதலிலும் மூல வடிவங்கள் தெரிந்தாலும் அவற்றின் பல்வேறு பகுதி விகுதி களையும் பொருளையும் பிரித்து அறிதலிலும் இடர்ப்பாடுகள் இருக்கும் அப்பொழுது ஒத்த பலபெயர்களை ஒரே மொழியிலும், இன மொழி களிலும் கிடைக்கின்றவற்றை எடுத்து நோக்கும் போது தெளிவு கிடைக்கும். காட்டாகக் காங்கேயம் என்ற பெயரின் (பேச்சு வடிவம்: காங்கயம்) உண்மையான விளக்கத்தை அப்பெயரைத் தனித்து நோக்கும்போது தோன்ருது. ஆனல் அதை ஒத்த

அமுக்கயம்
அலங்கியம்
கலிங்கயம்
குமரிகயம்
கொடுங்கயம்
பாண்டிக்கயம்
பொதுக்கயம்

34. Ibid

போன்ற பெயர்களை ஒப்பிட்டு நோக்கும் பொழுது எல்லாப் பெயர்களி லும் குளம் எனப் பொருள்படும் கயம் என்ற விகுதி அமைவதைப் பார்க் கிறோம். இப்பெயர்கள் குளப்பெயரடிப்படையில் தோன்றியிருக்கலாம் என்ற யூகத்திற்கு இந்த ஒப்பீடு வழி காட்டுகிறது. இதன் பிறகு இதை நிலை நாட்டப் பிறதுணைச் சான்றுகளைத் தேடலாம். அதுபோலவே இப்பெயரின் சிறப்புக்கூறை விளக்கவும் (கான்? கயம், ஒப்புமைச் சொற்கள்) பூகோளஅமைப்பு முதலியவற்றை ஆராயலாம்.

பெயர்களின் தோற்றத்தை அறிய, மொழியியலல்லாத பிற துறையறிவுகள் தேவை. பெயர்களின் பின்புலத்தை அறிய அப்பகுதி யில் வாழும் மக்கள் பேசும் மொழிகள், வழக்கியல்புகள், மட்டு மின்றி, அதன் வரலாறு, வாழும் இனங்கள், சாதி சமயப்பிரிவுகள், பழக்கவழக்கங்கள், புராணக் கதைகள், மரபுக்கதைகள், செவிவழிச் செய்திகள் ஆகியவைகளையும் பயன்படுத்த வேண்டியிருக்கும். எல்லா வற்றிற்கும் மேலாக அப்பகுதியின் பூகோள, இயற்கை அமைப்புப் பற்றிய அறிவும் தேவை. எனவே இத்துறைகளிலெல்லாம் பெயராய் வாளன், ஓரளவு அறிவு பெற்றிருத்தல் நல்லது.

பொருள் விளக்கம் செய்யும் பொழுது சான்றுகட்கு உட்பட்டு காரண காரிய முறையிலேயே செய்ய வேண்டும். முன்பே குறிப்பிட்ட படி சான்றுகள் இல்லாத பொழுது வெற்று ஊகங்களில் ஈடுபடாது, விளங்கவில்லை என விடுவதே நேர்மையானது.

*பாகுபடுத்தலும் வகைப்படுத்தலும்* (Analysis & Classification):

விளக்கம் செய்தலின் கடைசி நிலையின் தொடர்ச்சியாகவும், பெயராய்வின் பயனை அடைவதற்கு முன்னிலையாகவும் அமையும் கட்டமே வகைப்படுத்தலாகும். வகைப்படுத்தல் என்பது, பெயர்களைக்

1. காலவாரியாகவோ
2. இடவாரியாகவோ
3. பெயரமைப்பு முறைகளை ஒட்டியோ, அல்லது பெயர்க் கூறுகளின் (பகுதி விகுதிகளின்) அடிப்படையிலோ.
4. இன்னும் இவைபோன்ற வேறு ஏதாவது அடிப் படையிலோ[35] பாகுபாடு செய்து பலவையாகப் பிரிக்கலாம்.

J. J. Egli, Issac Taylor, Eilert Edwall, George Stewart முதலிய அறிஞர்களின் நூல்களில் காணப்படும் பாகுபாடுகளை நோக்குக.

---

35. Waniwright, F. T., **Place names and Archaeology and History**, London, 1962. p. 41.

மேல் நாடுகளில், பெயர்களைப் பிரிப்பது, பாகுபடுத்துவது, தொகுத்துக் கூறுவது, புள்ளிவிவரங்கள் தயாரிப்பது ஆகியவற்றிற்குக் கம்பியூட்டரைப் பயன்படுத்துகின்றனர் என்பதை முன்பே குறிப்பிட்டேன் 36.

**பரப்பு வரைபடம் (Distribution Maps):**

இவ்வகைப்படுத்தலை அடிப்படையாக்கிப் பரப்பு வரைபடங்கள் (Distribution Maps) தயாரிக்கலாம். *வகைப்படுத்தல், பரப்பு வரைபடங்கள் ஆகியவற்றின்* மூலமே, உறுதியான ஊகங்கள் அல்லது கருதுகோள்களை உருவாக்கவும், அவற்றை வரலாறு, தொல்பொருளியல் போன்றவற்றிற்குரிய துணைச் சான்றுகளாகப் பயன்படுத்தவும் இயலும்.

**இடப் பெயர் அடைவுகள் அகராதிகள் முதலியன:**

இடப்பெயர் அடைவுகளையும் அகராதிகளையும் தயாரிப்பது பெயர் விளக்கத்திற்கு அடிப்படையானதாகும். இடப்பெயர் அகராதிகளில் ஊர்ப் பெயர்களும், தெருப் பெயர்கள், வயல்பெயர் முதலிய சிறு பெயர்களும் முதலியன எல்லாம் சேர்க்கப் படவேண்டும். திரட்டிய செய்திகளில் முக்கியமானவற்றை தெளிவு செய்து கொடுப்பது நல்லது. பெயர்களின் முக்கிய மாற்று வடிவங்களை மொத்தமாகத் தொகுத்துக் கொடுக்கலாம். ஏனையவற்றைச் சுருக்கமான முறையில் அமைக்கலாம். ஒரு சிற்றூரில் அடங்கிய சிறு பெயர்களை அதன் கீழ் ஒரு சிறு பத்தியில் அமைக்கலாம். ஒரு பெயர் பற்றிய வரைவில் (article) பெயரின் மொழிபெயர்ப்பு அல்லது பொருள், அல்லது வகை, ஒப்புமை பகுதிகள், பொருத்தமான நிலக்கிடக்கை அல்லது இடம் பற்றிய விவரங்கள், அசாதாரண ஒலித்திரிபுகள் பற்றிய விளக்கம் முதலியன இடம் பெற வேண்டும் 37. இவை பற்றி மேலும் அறிய A.H. Smith எழுதிய Preparations for the country place name Survey (1954), Eilert Ekwall எழுதியThe Concise Oxford Dictionary of English Place names (1960) ஆகியவற்றை நோக்குக.

---

36. Allan Rostvik, 'Computer processing in the Name Archives Onoma Vol.XVIII No.3 (1974), pp.567-568.

37. A.H.Smith, op.cit.,pp.23-27.

## 2.5. வெளியீடு

இடப் பெயராய்வுகளின் முடிவாகப் பெறும் பெயர்களடங்கிய அகராதிகள் வெளியிடலாம், இவ்வகராதிகளை மாவட்டம் அல்லது வட்ட வாரியாகப் பதிப்பிக்கலாம். இவ்வகராதிகளில் பெயர்களின் விளக்கத்திற்குத் தேவையான எல்லாச் சான்று விவரங்களையும் கொடுத்தல் வேண்டும். அகராதி தவிரச் சில வகைப் பெயர்களின் விகுதிகள் ஆகியவற்றின் தோற்றம், பரப்பு ஆகியவற்றை விளக்கும் தனி நூல்களும் வெளியிடலாம்.

## 3. இடப் பெயராய்வின் பயன்கள்

எத்தகைய ஆய்வாயினும், அதன் பயன் கண்டே அது மதிப்பிடப்படுகிறது. இடப்பெயராய்வால் பயன் என்ன? என்று கேட்டால், மனிதப் பண்பாட்டையும், நாகரிகத்தையும் ஆராய்ந்து வெளிப்படுத்துவதில் வரலாற்றுக்கும், தொல்பொருளாய்வுக்கும் என்ன பங்கு உண்டோ அப்பங்கு இடப்பெயராய்விற்கும் உண்டு என்று இன்று அறிஞர்கள் உணர்ந்துள்ளனர் என்பதை விடையாகக் கூறலாம்.

தொல்பொருளாய்வாளர் திரு. F. T. Waniwright இடப் பெயர்களின் சிறப்பைக் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்[38]. "தொல் பொருளாய்வில் காணப்படாததும், வரலாற்றுச் சான்றுகளில் திரிபடைந்து அல்லது புறக்கணிக்கப்பட்டுக் காணப்படுவதுமான மொழியியல் செய்திகளை இடப்பெயர்கள் முழுமையாகத் தருகின்றன." இதை விளக்க அவர் மூன்று காரணங்கள் தருகிறார்.

1. பெரும்பாலும் இடப்பெயர்கள், மண்பாண்டங்கள், சுவடிகள் போலன்றி, அவற்றைப் படைப்போரின் அறிவு பூர்வமான கவனத்தைப் பெறுமல், ஒரே சமயத்தில் தோன்றுகின்றன; அவ்வாறு தோன்றுகிற அவை முன் கூட்டிய திட்டம் எதுவும் இன்றி, தம்போக்கில் பல்கிப் பெருகுகின்றன. சில வேளைகளில் வேண்டுமென்றே கொடுக்கப்பட்ட அல்லது மாற்றப்பட்ட பெயர்களும் உண்டு; ஆனால் அவை மொத்த எண்ணிக்கையில் மிகச் சிறியவையே. இயல்பாகத்தோன்றி, திட்டமிட்ட மனிதத்தலையீடு இன்றி விளங்கும் இப்பண்பே இடப் பெயர்களை நம்பத்தக்க சான்றுகளாகக் கொள்ள வைக்கின்றன.

2. மட்பாண்டமோ, சுவடியோ- ஒரு நிபுணனின் படைப்புக்கள். ஆனல் இடப்பெயர்கள் பெரும்பாலும், தனித் திறமையோ, நுணுக்

38. Waniwright, F.T., op. cit.p. 4

கமோ இன்றிச் சாதாரண மக்களால் படைக்கப்படுகின்றன. எனவே சாதாரண மனித வாழ்வின் பருப்பொருள் அம்சங்களை ஒரு தொல்பொருள் சின்னம் உணர்த்துவதை விட, இடப்பெயர்கள் மக்களின் மொழிச் சிந்தனைகளை மிகச் செவ்வையாக உணர்த்துகின்றன. இதன் காரணமாக, இடப்பெயர்ச்சான்றுகளை துணிந்து-மறைமுகச் சான்ருகப் பயன்படுத்த இயலும்.

3. இடப்பெயர்களில் ஏற்பட்ட ஒலி மாற்றங்களை, இதழ், இதழாக தோலுரித்துக் காட்டி, அம்மாற்றங்களை இனங்கண்டு, மூலவடிவத்தை நிச்சயிக்கும் முயற்சியில் இடப்பெயராய்வாளன் ஈடுபடுகிருன். இம்முயற்சிக்கு, மொழி வளர்ச்சியைக் காட்டும் பல விதிகள் அவனுக்கு ஆதாரமாக அமைகின்றன.

(''இந்த அல்லது அந்த மொழிமாற்றம், ஒரு விதியைப் போலப் பொதுவாகக் காணப்படுகிறது. எனவே இந்த குறிப்பிட்ட எடுத்துக்காட்டில் நாம் கீழ்க்கண்டவாறு துணிந்து முடிவு செய்யலாம்.' 39. மேற்கண்ட பண்புகளால், இடப்பெயர்கள் நம்பத்தக்கச் சான்றுகளாகப் பயன்படுகின்றன.

இடப்பெயர்களின் பண்பையும் இன்றியமையாமையும் உணர்ந்து ஐரோப்பாவின் மேற்குப் பகுதியிலும் கிழக்குப்பகுதிலும், இங்கிலாந்திலும், இடப்பெயராய்வாளர்கள் சிறந்த பல ஆய்வுகள் நடத்தி, மொழியியலுக்கும் மற்ற துறைகளுக்கும் குறிப்பிடத்தக்க பணியாற்றியுள்ளார்கள்.)

அவர்களின் ஆய்வுகளிலிருந்து இடப்பெயராய்வு கீழ்க்கண்ட மொழி மற்றும் பிற துறைகளுக்கு உதவியாக இருப்பதை அறிய முடிகிறது:

**மொழியியல்**

1. ஒலியனியல்
2. உருபனியல் தொடரியல்
3. இயற்பெயர்கள்
4. பொருளனியல்
5. கிளைமொழி வேறுபாடுகள்

39. Ibid PP. 45—48

6. அகராதிக் கலை
7. பிறமொழித்தாக்கம் 40

பிற துறைகளில் 1. வரலாறு (மதவரலாறு) 2. தொல்பொருளியல் 3. நிலநூல் 4. சமூகவியல் 5. மானிடவியல் 6. நாட்டுப்புறவியல் 7. இயற்கை அறிவியல் 8. பிறதுறைகள் ஆகியன குறிப்பிடத்தக்கன.

**1. ஒலியனியல் (மாற்றங்கள்)**

இடப் பெயர்களில், பலவித மாற்றங்களைப் பார்க்கிறோம். உதாரணத்திற்குச் சில. 41

1. ஒலிகெடல்: எ-டு: சூரலூர்> சூலூர்
   குருக்கள்பாளையம்> குருக்கபாளையம்
2. **ஒலிமிகல்** எ-டு: வெள்ளைக்கல்> வெள்ளைக்கோவில்
   ஜினபுரம்> சீனுபுரம்
3. **ஒரினமாதல்:** எ-டு: கோவன்புத்தூர்> கோயமுத்தூர்
   கூத்தம்பூண்டி> கூத்தமுண்டி
4. **வேறினமாதல்:** எ-டு: செம்மடைப்பாளையம்> செம்படப்பாளையம்
5. **ஒலி இடம்பெயரல்:** எ-டு: ராதாபுரம்> தாராபுரம்
6. ஒலி திரிதல்: எ-டு: திருவிடைமருதூர்> திருவடமருதூர்
   கிணற்றுக்கடவு> கெணத்துக்கடவு
   சின்னையன்பாளையம்> சின்னியம்பாளையம்
   கூவலூர்> கூகலூர்
   சந்திராபுரம்> சந்திராவரம்
7. **மரூஉ முதலியன:** எ-டு: பார்ப்பதி> பார்ப்பினி
   திருப்பையூர்> திருப்பூர்
   பொழில்வாய்ச்சி> பொள்ளாச்சி

இடப்பெயர்கள் அடைந்த ஒலி மாற்றங்கள் அக்கிளைமொழியின் இயல்பைக் காட்டுகின்றன. பொதுஒலித் திரிபுகளுக்கு இடப்பெயர்களும் உட்பட்டாலும், சில சமயம் அவற்றையும் மீறி வரலாற்றுக் காரணம், மக்களின் சொற்பொருள் விளக்கம் ஆகியவற்றால், இடப் பெயர்களின் ஒலி வடிவங்கள் மாறி விடும். (அமிஞ்சிக்கரை> அமைந்

---

40. Ibid. p. 38
41. Nachimuthu. K. Place names of Coimbatore District (1973), pp.510-523

தகரை; ஹாமில்டன்பிரிட்ஜ்> அம்பட்டன்வாராவதி பார்பிர்ஸ் பிரிட்ஜ் etc.,) எனவே இதில் கவனமாக இருத்தல் வேண்டும்.

**2. உருபனியல் தொடரியல்**

இடப்பெயர்கள் எல்லாம் மொழியில் சாதாரண நிலையில் பெயர்களாகவும், பெயரடைகளாகவும் அமைந்த தொகைச் சொற்களாகவே பெரும்பாலும் இருக்கின்றன. (பூவிருந்தவல்லி, கரிவலம் வந்தநல்லூர், முதலியவற்றில் உள்ள வினைத்தொடர்கள் சொல் விளக்கத்தால் ஏற்பட்டிருக்கலாம்.) அதாவது இவை எல்லாம் ஒரு வகையில் தொடர்களேயாம். தமிழ் இடப்பெயர்கள், ஊர்ப்பெயர்கள் பெரும்பாலும் வேற்றுமை, பண்பு வினைத்தொகைகளின் அடிப்படையில் தோன்றும் அன்மொழித் தொகையாயும் எண்ணொடு பொருள் புணர்ந்த எண்தொகையாயும் (பஞ்சவடி) முன்னும், பின்னும் மொழியடுத்து வரும் இடைச்சொல்தொகையாயும் (கொன்னூர்), அமைவதாகத் தமிழ் இலக்கணநூலார் கருதுகின்றனர். இத்தொகைச் சொற்களாம் இடப்பெயர்கள் எல்லாம் பன்மொழித் தொகைகளாயினும் அவை அண்மை நிலையில் இரு உறுப்புகளாகவே இணைந்து தொகையாய் ஒருசொல் நீர்மைத்தாய் நின்று பின்னும் தொகையாற்றலால் பல அடுக்குகளாக நிற்கின்றன என உணரலாம் 42.

இடப்பெயரியலார், இடப்பெயர்களின் பகுதிகளை பொதுக் கூறுகள், விகுதிகள், (Generics Suffixs) என்றும், சிறப்புக்கூறுகள் (Specifics) என்றும் பகுத்துக் கொண்டு ஆய்வர். இப்பொதுக்கூறுகளைத் தமிழ் இலக்கணநூலார் ஒரு *பெயர்ப் பொதுச்சொல்* என்பர் (தொல். சொல். கிளவி. 49.) விகுதிகளின் சிறப்புக் கூறுகளாக வருபவை (Specifics) *தலைமைப் பண்பாலும், சிறப்புப்பண்பாலும்* அமைகின்றன எனவும் அவர் கூறுவர்.

கோவை மாவட்ட ஊர்ப் பெயர்களில் 165 பொதுக்கூறுகள் காணப்பட்டன. இவற்றில் 6 மட்டும் கூட்டு வடிவங்கள், ஏனைய 159-ம் தனி வடிவங்கள். சிறப்புக்கூறுகள் தனி அல்லது கூட்டு வடிவங்களாக உள்ளன. கூட்டுச்சிறப்புக்கூறுகளில் அதிக பட்சம் 3 பகுதிகள் உள்ளன. இவற்றின் விரிவான ஆராய்ச்சியை இக்கட்டுரையாளரின் "கோவை மாவட்ட இடப்பெயராய்வு" என்ற ஆய்வுக் கட்டுரையில் காண்க.

---

42. *நாச்சிமுத்து. கி., இடப்பெயர்களின் அமைப்பும் புணர்ச்சியிலக்கணமும் (அச்சிடப்படாத கட்டுரை)*

### 3. இயற்பெயர்கள்–அமைப்பும் முறையும்

இடப் பெயர்களின் அமைப்பு முறை மட்டுமின்றி, அவை ஏற்படும் விதத்தையும், பொருளையும் ஆராயும்போது பண்பாட்டுச் செய்திகள் பலவும் கிடைக்கும். இடப்பெயர்களில் வழக்கில் காணப் படாத பல இயற்பெயர்களைப் பார்க்கலாம். (கீரனூர்) இடப் பெயர் களிலுள்ள இயற்பெயர்களின் ஆராய்ச்சியே தனித்துச் செய்யப்பட வேண்டியது.

### 4. பொருளனியல் மாற்றங்கள் (Semantic changes):

இடப் பெயர் விகுதிகளைப் பற்றிய வரலாற்று ஆய்வின் மூலம் அவற்றின் பொருள் வளர்ச்சிகளை அறிய முடியும். தமிழில் முற் காலத்தில் படையையும், படை முகாமையும் குறித்த பாளையம் காலப் போக்கில் ஊரைக்குறிக்கத் தொடங்கியது. படையைக் குறித்த பாடி இன்று வெறும் ஊரைக் குறிக்கிறது. அது போலவே முன்பு இயற்கைப் பெயர்கள் காலப்போக்கில் அன்மொழித் தொகையாயும் ஆகு பெயராயும் குடியிருப்பை உணர்த்துவதும் (எ-டு: இலவமலை, தாமரைக்குளம்) பொருளனியல் வளர்ச்சியைக் காட்டுகிறது. இடப் பெயர் விகுதிகள் எல்லாம் காலப் போக்கில் தம் சிறப்புப் பொருளை இழந்து பொதுப் பொருட்பேறு பெற்றுவிட்டன. இன்னும் இடப் பெயர்ச் சிறப்புக்கூறுகளைப் பொருளடிப்படையில் பாகுபடுத்தினால், பெயர்களின் பொருட்பாகும், அதனால் பண்பாட்டுச் செய்திகளும் கிடைக்கும்.

### 5. கிளைமொழிவேறுபாடுகள்:

இடப் பெயர்களின் பேச்சுவடிவங்களைப் பதிவு செய்தால் கிளை மொழியின் தன்மையைக் காண இயலும். சில சமயம் இடப்பெயர்களின் வடிவங்களே அக்கிளைமொழியின் தன்மையையும் விளக்கும் (ஊற்றுக் குழி > ஊத்துக்குளி). பொருள் நிலையிலும் கூட வட்டாரப் பொருள் வேறுபாடுகளைப் பார்க்கலாம். கோவை மாவட்ட இடப் பெயர்களில் காணப்படும் – கரை (நிழலிக்கரை) - *பள்ளம்* (குதிரைப் பள்ளம், நரிப்பள்ளம், நீராழிப் பள்ளம்) ஆகியன சிறு காட்டாறுகள் அல்லது ஓடைகளைக் குறிக்கும். இப்பொருள் பிற கிளைமொழிகளில் இல்லை; தமிழ்ப் பேரகராதியும் இதைக் குறிப்பிடவில்லை.

6. அகராதிக்கலை

இடப் பெயராய்வாளன் தொகுத்து வெளியிடும் பலவித இடப் பெயர் அகராதிகள் - அகராதிக் கலை வளர்ச்சிக்குப் பயன்படும். இடப் பெயர்களில் காணப்படும் புதிய பொருள் மரபுகள் பேரகராதியில் சேர்க்கப்படவேண்டியவை.

7. பிறமொழித்தாக்கம் :

இடப் பெயர்கள் எல்லாமொழிகளிலும் ஊடுருவக் கூடியதனுல், இடப் பெயர்களில் பிற மொழித் தாக்கம் எளிதில் ஏற்படுகிறது. இத்தாக்கங்களையும் அவற்றின் இயல்புகளையும் இடப்பெயராய்வில் நன்கு வெளிப்படுத்த இயலும்.

பிறதுறைகள்:43

1. *வரலாறு:-*

வரலாற்றிற்குப் பெயராய்வும், ஒரு துணைச் சான்ருக நின்று உதவுகிறது. சில சமயங்களில் இது மட்டுமே பல செய்திகளைத் தரும் தனிச் சான்ருகவும் அமையும்.

1. இன வரலாற்றில் பழங்காலத்தில் எவ்வெப்பகுதியில் எவ்வெவ்வினங்கள் வாழ்ந்தன என்பதை இடப் பெயர்களைக் கொண்டு அறிய முடியும். வாழ்ந்து, எவ்விதச் சுவடும் இல்லாமல் மறைந்து போன இனங்களைப் பற்றியும் அறியலாம். காட்டாக, இலங்கையின் தமிழ்பேசும் வட பகுதியில் காணப்படும் சிங்கள ஊர்ப் பெயர்களும், சிங்களம் பேசும் தென் பகுதியில் உள்ள தமிழ்ப்பெயர்களும் பண்டு அப் பகுதிகளில் முறையே சிங்களரும் தமிழரும் வாழ்ந்ததை உறுதிப் படுத்துகின்றன. பாரசீகப் பகுதியில் முன்பு திராவிடர் வாழ்ந்தனர் என்பதற்குத் திராவிட ஊர்ப் பெயர்களைச் சுட்டிக் காட்டுவர் அறிஞர் எல். வி. இராமசாமி ஐயர். இதே போலத் திராவிடர்க்கு முன் தென்னகத்தில் வாழ்ந்திருந்த தொல் மக்களைப் பற்றியும் இடப் பெயராய்வு புதிய செய்திகள் ஏதாவது தரக்கூடும். வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் நிகழ்ந்த வெளி, உள் குடிப்பெயர்ச்சிகளையும்,

---

43. *நாச்சிமுத்து, கி., 'இடப்பெயராய்வு - ஓர் அறிமுகம்,, ஆய்வு மலர் (கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைப் பழைய மாணவர் மன்ற ஆண்டு வெளியீடு) தொகுதி I, 1972, பக். 339 - 362.*

பெயர்களைக் கொண்டு யூகிக்கலாம். வஞ்சி, கருவூர், முசிறி, கழுமலம், செங்குன்றூர் போன்ற பெயர்கள் மேற்குக் கரையிலும், கொங்கு நாட்டிலும் இருப்பது குடிப்பெயர்ச்சியின் விளைவாகலாம்.

2. சமய வரலாற்றை அறியவும் பெயர்கள் உதவுகின்றன. பள்ளி, பாழி, போன்றவை சமண பௌத்தத் தொடர்பையும் காட்டுகின்றன. ஊர்ப் பெயர்களிலுள்ள திரு என்ற அடைமொழி பக்திக்கால நிலையை உணர்த்துகின்றது. கோவை மாவட்டத்தில் கிராம தேவதைகளின் பெயர்கள் ஊர்ப் பெயர்களில் காணப்படுவது அங்கு அவ்வழிபாட்டுச் செல்வாக்கை உணர்த்துகிறது.

3. அரசியல் வரலாற்றில் சேர, சோழ, பாண்டிய, பல்லவ, ஒய்சள, நாயக்க, முசுலீம் அரசுகளின் தொடர்பை முறையே இரும்பொறை, சோழமாதேவி, வீரபாண்டி, மகேந்திரவாடி, தனநாயக்கன் கோட்டை, கெத்தல் ரேவு, வாலாஜாபாத் போன்ற பெயர்கள் காட்டுகின்றன. நாயக்கர் காலத்தில் படை அடிப்படையில் ஏற்பட்ட நில மானிய சமூக அமைப்பின் செல்வாக்கைப் பாளையம் என்ற விகுதியுடைய எண்ணிறந்த ஊர்கள் உணர்த்துகின்றன.

2. *தொல் பொருளியல்*

பெயர்களும் ஒருவகையில் புதை பொருட்களே. புதை பொருட்களைப் போலவே, பழைய இடப் பெயர்களும் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கிலிருக்கின்றன; எனவே, அவை புதை பொருட்களைப் போல் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தைப் பற்றிக் கூறும் வல்லமை உடையன. இதனால் தான் தொல் பொருளாய்விற்கு இடப்பெயராய்வு பல வகையில் துணை செய்கிறது.

1. ஆந்திரப் பகுதியிலிருந்து காணப்படும், சாம்பல் மேடுகள், புதுக் கற்காலத்தில் வாழ்ந்த மக்களின் கால்நடைச் சாணங்களால் ஏற்பட்டவை என்ற எண்ணத்தோடு, தொல் பொருளாய்வில் ஈடுபட்ட ஆல்சின்ஸ் என்பார். பூதமேடுகள் காணப்படுவதால், பூதி ஊர்ப் பெயர்கள் இருந்த இடங்கள் எல்லாம் புதுக் கற்காலக் குடியிருப்புகளாகும் என்ற முடிவிற்கு வருகிறார்.

2. தென்னிந்திய வரலாற்றில் சிக்கல் நிறைந்த பெருங்கற்காலப் பண்பாட்டை (மெகலிதிக் கல்ச்சர்) (Megalithic Culture) ஆய்பவர்கள் பெயர்ச் சான்றுகளால் பல செய்திகளை உறுதிப் படுத்த முனைவதைக் காணலாம். அங்காடி, பட்டடை போன்ற ஊர்ப் பெயர்விகுதிகள்

பெருங்கற்காலச் சின்னங்கள் இருந்த இடங்களைக் குறிக்கும் என்பர் அறிஞர் கெ. ஆர். ஸ்ரீநிவாசன். கோவை மாவட்டத்தில் காணப்படும், வீரக்கல், கல்வெட்டுப்பாளையம் ஆகியன தொல் பொருள் சின்னங்களைக் குறிக்கின்றன.

(3. திராவிடர்க்கும், மேற்காசியா, ஐரோப்பா முதலிய இடங்கட்கும் உள்ள தொடர்பைப் பேசுபவர்கள் ஊர்ப் பெயர்களை ஒப்பிட்டுக் காட்டுவர். (எ-டு: என். லாஹோரவறி) மொகஞ்சதாரோ நாகரிகத்தையும் அதற்கும் வரலாற்றுக் காலத்திற்கும் இடைப்பட்ட இருண்ட கால இந்திய வரலாற்றையும் அறிய, இந்தியா முழுமையுமுள்ள பெயராய்வு துணை செய்யக்கூடும்.

4 வரலாற்றுக் காலப் புதை பொருளாய்விலும், மறைந்து போன நகரங்கள் இருந்த இடங்களைத் தற்காலத்தின் பெயர் வடிவங்களை வைத்தே கண்டுபிடித்துத் தோண்டிப் பார்க்கிறோம். காட்டாகப் புகார், கொடுங்கல்லூர் ஆகிய இடங்களில் நடந்த மாதிரிப் புதைபொருளாய்வுகளைக் குறிப்பிடலாம்.)

3. *நிலநூல்*

பழங்காலத்தில் இயற்கையாக எழுந்த இடப்பெயர்கள் இயற்கை அமைப்புக்களைக் கொண்டே எழுந்தன. எனவே பெயராய்வால் இயற்கை நில அமைப்புக்களைப் பற்றி அறியமுடியும். தமிழ் இலக்கியம் ஐவகை நிலங்களுக்கேற்ற பெயர்களைப் பேசுகிறது. ஆனால் அவ்வரையறைகள் எல்லாம் மயங்கிக் கிடப்பதையும் பார்க்கிறோம். இதற்கு, காலந்தோறும் ஏற்பட்ட நில அமைப்பு மாறுபாடுகள் காரணமாகலாம். உதாரணமாக, கழிப்பாலை என்ற ஊரிருக்குமிடத்தில் அப்பெயர் சுட்டுவதைப் போல இயற்கையமைப்பு எதுவுமில்லை. ஒரு காலத்தில் கடல் அதன் அருகிலிருந்து பின் வாங்கியிருக்கலாம்; அல்லது இது கடலோரத்திலிருந்த ஊர் அழிந்ததால், உள்நாட்டில் குடியேறியோர் அந்நினைவாக இட்ட நினைவுப் பெயராகவும் இருக்கலாம்.

கோவை மாவட்ட இடப் பெயர்களிலிருந்து வேறெங்கும் கிடைக்காத, அம்மாவட்டத்தின் நில அமைப்பு பற்றிய செய்திகள் கிடைக்கின்றன :44

1. கோவை மாவட்டத்திலுள்ள நீரியற் பெயர்களை ஆய்ந்த

---

44. Nachimuthu, K., Place names of Coimbatore District, (1973), pp.487–489.

போது, மழை அதிகமாயிருக்கும் வடபகுதியில் அவை மிகுந்திருப் பதைத் தெளிவாக உணர முடிந்தது.

2. மாவட்டத்தின் மேடும், பள்ளமுமான நிலை அமைப்பை இடப்பெயர்கள் காட்டத் தவறவில்லை. மேடு- என்ற சிறப்புக்கூறு 58-ம், பள்ளம் 44-ம் காணப்படுகின்றன. வடபகுதி மலைப்பாங்கானது என்பதை கரடு முதலிய விகுதிகள் காட்டுகின்றன.

(3. ஆறு, ஓடை, பள்ளம், கரை, துறை முதலிய பெயர்கள் அம் மாவட்டத்திலுள்ள காட்டாறுகளைக் காட்டுகின்றன.

4. காடு, தோட்டம். தோப்பு என முடியும் விகுதிகள் அம் மாவட்டத்தில் தோட்ட விவசாயத்தின் மிகுதியைக் காட்டுகின்றன.)

4. *சமூகவியல்*

இடப்பெயர்கள் மூலம் அப்பகுதியின் சமூகவியல் நிலையை அறிய இயலும்[45].

பெயர்களை வகைப் படுத்தல், அதனடிப்படையில் பரப்பு வரை படங்கள் தயாரித்தல்-ஆகியவற்றின் அடிப்படையில், பண்பாட்டுக் கூறுகள் தோன்றிப் பரவுதலை (Diffusion of cultural traits) ஆய் வதைப் போல், ஒரு குறிப்பிட்ட பெயர்க்கூறு எங்கு தோன்றி எப்படிப் பரவியது என்பதைக் காணலாம். இதைக் கொண்டு மக்களின் குடியிருப்பு முறைகள், குடியேற்றத்தின் வளர்ச்சி, வேகம் முதலிய வற்றைப் பற்றி ஊகிக்கலாம். காட்டாகக் கோவை மாவட்டத்தில் 13-ஆம் நூற்றுண்டிற்குப் பிறகு கிழக்குப் பகுதியில் பாளையம் விகுதியுடைய பெயர் மிகுதியாகத் தோன்றி, மேற்கு நோக்கி 18-ம் நூற்றுண்டிற்குப் பிறகு பட்டி -பெயர் விகுதி தென் மேற்குப் பகுதியிலும், வலசு விகுதி வடகிழக்குப் பகுதியிலும், மிகுதியாகக் காணப்படுவதும், மூன்று திசைகளிலும் அவ்வக் காலங்களில் நடந்த கன்னட, தெலுங்கு, தமிழ்க் குடியேற்றங்களைக் காட்டுகின்றன.

கோவை மாவட்ட இடப் பெயர்களில் சுமார் 250 சாதி, குடி, தொழில் பெயர்கள் காணப்படுகின்றன. தெலுங்குச் சாதி - 40, கன்னடச்சாதி – 23, பட்டிகை சாதி - 16 ,பழங்குடி - 14 ஆகியன இடப் பெயர்களில் காணப்படுகின்றன.

---

45. Nachimuthu. K., 'Some non-linguistic uses of place name Study, **Research papers** Vol.VII–VIII, Tamil Department Kerala University, Kariavattom, 1976-77,pp.4–8.

கோவை மாவட்ட இடப் பெயர்களில் பலவற்றிற்கும் 10-ம் நூற்றுண்டிற்கு முற்பட்ட வரலாறு இல்லை. எனவே புதிய குடியேற்றங்களும், மக்கள் தொகைப் பெருக்கமும் அதன் பின் ஏற்பட்டனவே என்பது தெளிவு. 18 -ம் நூற்றுண்டிலிருந்த ஊர்களை நோக்க இன்று 20 முதல் 40 சதவீதம் ஊர்கள் பிற்காலத்தில் தோன்றியுள்ளன எனத் தெரிகிறது. இதை பாளையம் (42.9%), புதூர் (11%), வலசு (7%) பட்டி (48%), புரம் (3.3%) முதலிய விகுதிகள் (70%) அமைந்த பெயர்கள் உணர்த்துகின்றன.

(மேலும் இங்கு உள்ள கிராமங்களில் அடர்த்தியை நோக்கும் போது ஈரோடு வட்டம், தன் நீர், நில வளத்தால் மிகப் பழைய குடியிருப்புப்பகுதியாக விளங்கிற்று எனத் தெரிகிறது. வளம் குறைந்த உடுமலை பொள்ளாச்சி வட்டங்களில் ஊர்கள் குறைவே. அமராவதி· பவானி, நொய்யல் கரை ஓரங்களில் பழைய ஊர்களும், மற்றப்பகுதிகளில் புதிய ஊர்களும் காணப்படுகின்றன.)

5. *மானிடவியல்*

(நீலகிரி மலையில் இன்று வாழும் இருளர், குறும்பர் முதலியோர் முன்பு கோவை மாவட்டச் சமவெளிப் பகுதிகளில் இருந்தனர் என்பதை இடப்பெயர்கள் காட்டுகின்றன.) பாளையம் - பெயரின் செல்வாக்கு தெலுங்கு, கன்னட மக்கள் குடியேற்றத்தைச் சுட்டுவதோடு, அக்கால நிலமானிய அமைப்பு முறையின் செல்வாக்கையும் காட்டுகிறது. (தோட்டம், காடு என முடியும் பெயர்கள், விவசாயப் பண்ணைகளைச் சுற்றிக் குடியிருப்புகள் தோன்றிய விதத்தைக் காட்டுகின்றன. தொழு, பட்டி போன்றவை மக்களின் ஆடு மாடு மேய்க்கும் தொழிலைக் காட்டுகின்றன.)

6. *நாட்டுப்புறவியல்*

ஊர்களின் பெயர்களைச் சுற்றி, மக்களின் பழைய நினைவுகளையோ, எண்ணங்களையோ வெளிப்படுத்தும் நாட்டுக் கதைகளும், தலபுராணங்களும் எழுகின்றன. இவை நாட்டிலக்கிய ஆய்வாளர்க்குப் பல செய்திகளைத் தரும். பெயர்களைப் பற்றிய கதைகள் தலபுராணம் என்னும் இலக்கிய வகையாக மலர்ந்து இலக்கியத்தை வளப்படுத்தியிருக்கின்றன[46]. எனவே பெயராய்வு இலக்கியத்திற்கும் பயன்படுகிறது.

---

46. See F. N.26

7. *இயற்கை அறிவியல்*

மரம், விலங்குப் பெயர்களை உடைய இடப்பெயர்கள் அவ்வப் பகுதியின் மர, விலங்கு வளத்தை அறிவிக்கின்றன. இவ்வளங்கள் இப்போது மறைந்தாலும், அதை ஊர்ப் பெயர்களால் ஊகிக்கலாம். ஆர்க்காடு, புலியூர் இவை எடுத்துக் காட்டுகள்.

கோவை மாவட்ட இடப் பெயர்களில் காணப்படும் காரை (26) கள்ளி (43), வேலான் (25), வெள்ளி (37) முதலிய வறட்சி நில மரப்பெயர்கள் மழை வளங்குறைந்த நிலப்பகுதி அது என் பதைக் காட்டுகின்றன. ஆனைப் பெயர் உள்ள இடப்பெயர்கள் மலை ஓரப் பகுதிகளில் காணப்படுகின்றன.

8. *பிறதுறைகள்*

பெயர்களை திரட்டுதல், வகைப்படுத்தல் முதலியவற்றின் மூலம், பலநாட்டு, இனமொழிக் கூறுகளோடு ஒப்பிட்டாய்ந்து, உலகளாவிய ஒற்றுமை வேற்றுமைகளைச் சுட்டிக்காட்ட இயலும். அத்தோடு பெயர்கள் பற்றிய பொதுக் கோட்பாடுகளை உருவாக்க வும் இயலும்.

இடப் பெயராய்வுகளின் துணையால் சரியான நிலநூல்பெயர்களை நிலைப்படுத்த முடியும். இதுபற்றி முன்பே குறிப்பிடப்பட்டது. பின்பும் விளக்கப் படும்[47].

**இந்திய இடப் பெயராய்வின் எதிர்காலம் :-**

இந்தியாவில் இடப்பெயராய்வு பெரிய அளவில் தொடர்ந்து இதுவரை மேற்கொள்ளப்படவில்லை. எனவே பரந்த அளவாய்வுகளைத் திட்டமிட்டு ஒவ்வொரு மொழியினரும், பல்கலைக் கழகத்தினரும் தொடங்க வேண்டும். பல்கலைக் கழகங்களிலுள்ள மொழி, மொழியியல் துறைகள்தான் இதைத் தொடங்கவேண்டும். கிளை மொழி ஆய்வையும் இதையும் இணைத்துச் செய்யலாம். மாநில மட்டத்தில் தனி அமைப்பு மூலம், பள்ளி கல்லூரி ஆசிரியர் மாணவரைப் பயன்படுத்தியும் இவ்வாய்வை மேற் கொள்ளலாம். மைய மாநில அரசுகள், பல்கலைக்கழக மானியக் குழு, மற்றும் இந்திய வரலாற்று ஆய்வுக்குழு முதலிய பலவித ஆய்வுக் குழுக்கள் ஆகியவற்றிடமிருந்து நிதியுதவியும் உதவித் தொகைகளும்

---

47. See F.N . 18, 19 & 21

பெற முடியும். வரலாற்று மற்றும் வழக்குப் பெயர்களைப் பல நிலையிலும் ஆராயும் படி மாணவரைத் தூண்டிப் பயிற்சி கொடுக்கலாம்.

அண்மையில் தோன்றிய இந்தியப் பெயராய்வுக் கழகத்தில் சேர்ந்து, அதைக் கருவியாக்கிப் பல முன்னேக்குத் திட்டங்கள் தீட்டலாம். ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் அதில் ஆர்வத்தை ஏற்படுத்தி ஆய்வில் ஈடுபடுத்தலாம். புது நாகரீகம், பண்பாடு ஆகியவற்றின் தாக்கத்தால் பழைய இடப்பெயர் பலவும் வேகமாக மறைந்து வருகின்றன; இச்சூழ்நிலையில் நாம் அவற்றை அளவாய்வுகள் மூலம் திரட்டிப் பதிவு செய்து வைக்காவிடில், அவை என்றென்றைக்கும் நமக்கும் கிடைக்காமல் மறைந்தொழியும்.

வளராமல் இருக்கும் இந்திய இடப்பெயராய்வின் ஆக்கத்திற்குச் செய்ய வேண்டிய சிறப்புப்பணிகள் சிலவற்றை இங்கு எடுத்துரைக்கலாம்:

1. இடப்பெயர்க் கள ஆய்வு, தானியங்கிச் செய்திப் பகுப்பாய்வு (Automatic Data processing) ஆகியன பற்றிய வழிகாட்டி நூல்களும், மூலச் சான்றுகள் பற்றிய பட்டியல் நூல்களும் வெளியிடப் படவேண்டும்.

2. நடந்த, நடந்து வருகிற இடப்பெயராய்வு பற்றிய நூலடைவுகளும், சுருக்கங்களும் வெளியிட வேண்டும். இதற்கெனச் சிறு அளவிலான நூலடைவுச் செய்தி இதழ் ஒன்று வெளியிடத் தொடங்கலாம் அல்லது Indian Linguistics I.J.D. L/ Studies in Indian place names போன்றவற்றில் அவற்றை வெளியிடலாம்.

3. கோட்பாட்டு நிலையில், இந்திய உலக இடப் பெயர்களை ஒப்பிட்டு ஆய, இந்திய இடப் பெயர்கள் பற்றிய இலக்கணம் இயற்பெயர்கள் பற்றிய கோட்பாடுகள், பெயர்ப் பாகுபாடுகள், பெயரமைப்பு முறைகள் ஆகியன பற்றி விரிவாக ஆராயவேண்டும்.

4. மொழிப் பொருளாகிய இடப் பெயர்களை விரிவாக ஆராய்ந்து, வரலாற்று/ஒப்பியல்/சமூகவியல்/மொழியியலில் பயன்படுத்த வேண்டும். உதாரணமாகத் திராவிடர்க்கு முற்பட்ட தென்னிந்தியாவில் பேசப்பட்ட மொழிகள் பற்றி அறிய இடப்பெயராய்வு துணை செய்யும்.

5. இலக்கிய வழக்கிலுள்ள எண்ணிறந்த இடப் பெயர்களை ஆய்ந்து அடையாளம் காண வேண்டும். மகாபுராணங்கள், தல புராணங்கள் முதலியவற்றிலுள்ள இடப் பெயரியல் செய்திகள் திரட்டப் படவேண்டும். இடப் பெயர்கள் பற்றி வாய்மொழியாக உள்ள

நாடோடிக் கதைகள், புராணச் செய்திகளைத் திரட்டினால் அது நாட்டுப் புறவியலாளனுக்கும் பயன் தரும்.

6. மொகஞ்சதாரோ காலத்திற்குப் பின்பு வரலாற்றுக் காலம் வரையுள்ள வரலாறு தொடர்ச்சியாக அறியப்படவில்லை. இதற்கு இடப்பெயராய்வு துணை செய்யும்.

7. இந்திய மொழிகள் எல்லாவற்றிலும் உள்ள பழைய பூகோள, இடப் பெயர்ச் செய்திகள் அளவற்றவை. அவற்றையும் சாசனங்களி லுள்ள இடப் பெயர்களையும் நன்கு ஆய வேண்டும்.

8. வரலாற்றுக்கு முற்பட்ட காலத் தொல் பொருளாய்வு, வரலாற்றுக் காலத் தொல் பொருளாய்வு ஆகியவற்றில் இடப் பெயராய்வின் இன்றியமையாமையை எடுத்துரைக்க வேண்டும்.

9. பூகோள அமைப்புக்கும், இடப் பெயர்களுக்கும் உள்ள தொடர்பை வரலாற்றுப் பூகோள இயல், நிலக்கிடக்கையியல் ஆகிய வற்றிலும் தற்கால பூகோள அமைப்பிலும் ஆயலாம். நம் இந்தியாவில் ஆறுகள் திசை மாறியதுண்டு, கடல் நாட்டின் பல பகுதிகளைக் கொண்ட துண்டு. இவற்றைப் பற்றி எல்லாம் இடப் பெயர்கள் மூலம் ஆராயலாம்.

10. வரலாற்றில் நடந்த உள், வெளிக் குடிப்பெயர்ச்சிகளை இடப் பெயர்களை வைத்துத் திட்டமாக ஆய முடியும். பகர்ப்புப் பெயர்கள் (replica names) முற்காலத்தில் நடந்த குடிப்பெயர்ச்சிகள் பற்றிய தடயங்களைத் தருகின்றன. கேரளத்திலும், தமிழ்நாட்டிலுள்ள கருவூர், முசிறி, செங்கோடு, கழுமலம் முதலியனவும், ஆந்திரத்திலும், தமிழகத்திலுமுள்ள கதிரி, ஜம்மாலமடுகு, கெத்தல், ரேவு, கம்பம் (கம்மம்) முதலிய பெயர்களும் பகர்ப்புப் பெயர்களாய் அமைந்து குடிப் பெயர்ச்சிகளைக் காட்டி நிற்கின்றன[48].

11. மானிடவியல், கிளைமொழியியல், ஆகியவற்றில் பண்பாட்டுக் கூறுகள், மொழிக்கூறுகள் தோன்றிப் பரவுதலை ஆய்வதைப் போல் ஒரு பகுதியின் இடப்பெயரமைப்பு முறைகளையும் ஆராயலாம். பெயர் களை வகைப்படுத்தல், அதனடிப்படையில் பரப்பு வரைபடங்கள் தயாரித்தல் ஆகியவற்றின் அடிப்படையில் குடியேற்றமையம், குடி

48. Nachimuthu,K., 'Internal migrations and place name of Tamilakam', J D T (1970) Vol. I- pp. 38-44.

யேற்றப் பரப்பு, குடியேற்ற வேகம், குடியேற்றத் திசை முதலிய இனக் குடியேற்றங்கள் பற்றிய பலவிதச் செய்திகளை ஆயலாம். இடப்பெயராய்வு முறைகளைச் செம்மைப் படுத்தி, காலந்தோறும் இருந்த மக்கள் தொகை விவரம், மக்கள் தொகை வளர்ச்சிஆகியன பற்றிக் கூட நல்ல யூகங்கள் உருவாக்க இயலும். இத்தகைய செய்திகளை பிற சான்றுகளில் இருந்து பெற இயலாது[49].

*12.* **நில நூல் பெயர்களை நிலைப் படுத்தல்:**

இந்தியா பல மெ ழிகள் பேசப்படும் நாடு. நில நூற் பெயர் களைக் கையாளும் முறை அல்லது திட்டமான கொள்கை ஒன்றும் நம் நாட்டில் இல்லாததால் ஒரு மொழிப் பகுதியிலுள்ள பெயர்களைப் பிற மொழியினர் திரித்தும், சிதைத்தும் ஒலிப்பெயர்ப்புச் செய்து வழங்குவதைப் பார்க்கிறோம். மக்களின் அறியாமை காரணமாகவும், அதிகாரபூர்வமான நிலைப்பட்ட பெயர்கள் இல்லாமையாலும் பல பெயர்கள் மாறியும், உருவழிந்தும் காணப்படுகின்றன. மூன்று நூற்றாண்டுக்கு மேல் நம் நாட்டின் ஆட்சி மொழியாய் விளங்கிய ஒலியியல் குறைபாடுடைய ஆங்கிலத்தின் எழுத்து இந்திய மொழி ஒலிகளைச்; செவ்வையாகக் காட்ட இயலாமையும் இதற்கு இன்று ஒரு காரணமாகும். போக்குவரத்து செய்தித் தொடர்புகளின் வளர்ச்சி காரணமாக இந்தியாவின் பல்வேறு பகுதிகளும் நெருங்கி வரும் இவ்வேளையில் இடப்பெயர்களின் மூலம் புலனாகும் இந்தியா வின் பல்வேறு தேசீய இனங்களின் பண்பாடு, வாழ்க்கை நோக்கு முதலியவற்றை நன்கு புரிந்து போற்ற இடப்பெயர்களைச் செவ்வை யாக **நிலைப்படுத்துவதை** உடனடியாக நாம் மேற்கொள்ளவேண்டும். இதற்கெனத் தனி நிறுவன அமைப்பு இருந்தாலேயே இது சாத்திய மாகும். இந்திய இடப்பெயர்க்கழகம் இது பற்றிய ஆய்வுகளை மேற் கொண்டு 'இடப் பெயர்களை நிலைப் படுத்தத் தகுந்த கொள்கைகளை வகுக்க வேண்டும்[50]. நாம் முன்பே குறிப்பிட்டபடி, உலகளாவிய ஐ நா. வின் இம் முயற்சியில் இந்தியாவும் சேர்ந்திருப்பது வரவேற் கத்தக்கது[51]. தேசீய, மாநில அளவில் இதை எப்போது எவ்வாறு செய்யப் போகிறார்கள் என்பதை நாம் எல்லோரும் ஆவலுடன் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

---

49. Nachimuthu, K., 'Place names of Coimbatore District' (1973).
50. Meredith F. Burill., 'International Geographical name Conference', 'The 1967 Conference', 1967.
51. See F. N. 18, 19, 21 & 47

முடிவுரை:

இது வரை விளக்கம் செய்யப்பட்ட கருத்துக்கள் எல்லாம் இலட்சிய வாதம் போலத் தோன்றக் கூடும். இன்னும் சிலர் மூலையி லிருந்து கொண்டு "இடப் பெயர் ஆய்வா? அதற்கென்ன தேவை? என்ன அவசரம்" என முனகக் கூடும். நாம் இனியும் கண்ணிருந்தும் குருடராய், காதிருந்தும் செவிடராய் நம் வரலாறும், வாழ்வும் எந்தத் தடயங்களும் இன்றி முன்பு போல அழியச் சம்மதிப்போமா? நம் வறுமையையும் பொருளின்மையும் நினைத்துக் கொண்டு முடங்கிக் கிடப்போமா? என்ன செய்யப் போகிறோம்? இடப் பெயர்களைத் தொகுக் கவும், ஆயவும் சோதனைகள் மூலம் எளிய சிக்கன வழியொன்றைக் காண்போம்!

மக்கள் தொகைக் கணக்கெடுப்போடு, தனி வினா நிரல் அமைத்து (Questionaire or Schedule) இடப் பெயர்களைத் திரட்ட முடியுமா என ஏன் பார்க்கக் கூடாது?

இந்த இடத்தில் பொதுவுடைமை நாடுகளான ரஷியாவையும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளையும் பாருங்கள்: 52 செல்வம் மிக்க அமெரிக்காவை விட இவை இடப் பெயராய்வில் முன் நிற்கின்றன. இத்தகைய ஆய்வுகள் மூலம் அங்கு மக்கள் தங்கள் பாரம்பரியத்தின் பெருமையை உணர்ந்து மதிக்கவும் தங்கள் நாட்டைப் பற்றிப் பெருமை கொள்ளவும், நாட்டுப் பற்றை வளர்க்கவும் முயல்கின்றனர். 'பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்', 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே' என முழங்கும் நாம் மட்டும் ஏன் இதைச் செய்யக் கூடாது?

*வாழிய செந்தமிழ்!* *வாழ்க நற்றமிழர்!*

*வாழிய பாரத மணித் 'திருநாடு !*

---

**52.** A. V. Superankaja V. E. Staltmane N. V. Podal'skaja V. D. Belen, kaja 'Work on Onomastics in the USSR,' **Onoma** Vol. XVII (1972/73), pp 308 – 320.

# 2. ஊர்ப் பெயர்களின் இலக்கணமும் புணர்ச்சி முறையும்

ஊர்ப் பெயர்கள், மொழியில் காணப்படும் பெயர்வகைகளுள் ஒன்ருகும். ஊர்ப் பெயர்களின் இலக்கணத் தன்மையையும் அவை புணருமாற்றையும் இங்கு ஆராயலாம்.

பெயர்ச் சொற்களாய ஊர்ப்பெயர்கள் பெரும்பான்மையும் தொகைச் சொற்களேயாம். தமிழிலுள்ள அறுவகைத் தொகைகளில் ஊர்ப் பெயர்கள் பெரும்பான்மையும் அடிப்படையில் வேற்றுமைத் தொகையாயும், பண்புத் தொகையாயும், சில வினைத்தொகையாயும் அமையும். சில உவமத் தொகையும் அமைதல் கூடும்.

**வேற்றுமைத் தொகை**

(எ-டு) : திருத்தொண்டத் தொகை மங்கலம்
அரிசிற்கரைப் புத்தூர்
கோவன் புத்தூர்
சாத்தமங்கலம்
காஞ்சி வாயில்

**பண்புத்தொகை**

பேரூர்
மூதூர்
புதூர்
சிற்றூர்
நல்லூர்

**வினைத்தொகை**

உறையூர்
கட்டூர்
செல்லூர்

உவமத்தொகை

கருவூர்

உம்மைத் தொகையாய் அமைந்த ஊர்ப் பெயர்கள் காணப் படவில்லை. ஹுப்ளி – தார்வாட், ஹைதராபாத் – செகந்திராபாத் போன்ற நிர்வாகப் பெயர்களில் உம்மைத்தொகை இருப்பது போல் தமிழிலும் அருகிக் காணப்படக்கூடும். (ஏழேகால்)

ஊர்ப்பெயர்கள் பலவும் ஒருவகையில் அன்மொழித் தொகைகளாம். பொதுநிலைக் குறிப்பு நிலையிலிருந்து ஓர் ஊரின் அடையாளக் குறியீடு என்ற நிலையில் அவையெல்லாம் அன்மொழித் தொகைகளேயாம். எடுத்துக்காட்டாகப் பேரூர் என்பது 'பெரிய ஊர்' என்று பொது நிலையில் குறிக்கப்படுவதிலிருந்து வேறுபட்டுச் சிறப்புநிலையில் ஒரு குறிப்பிட்ட ஊரைக் குறிக்கிறது. இதே போலத்தான் பல ஊர்ப் பெயர்களும் பொதுக்குறிகள் சிறப்புக் குறிகளாக மாறியவை ஆகும்.

குளங்கரை, குளக்கரை, விளங்கோடு என்பது போன்ற தொகைகளாக மட்டுமின்றிக் குளத்தங்கரை, குளத்தூர், விளவின்கோடு, விளத்துக்கோடு, விளவத்துக்கோடு போன்று சாரியை வெளிப்பட்டு நிற்பவையும் உள. இவ்வாறு சாரியை வெளிப்பட்டு நிற்பனவற்றைத் தொகை என்பதா? தொகாநிலைத் தொடர் என்பதா? இலக்கணக் கொத்து (96 நூற்பா) கூறும்

''நிலைமொழி வருமொழி நீக்கம் இன்றி
ஈறும் முதலும் இசைந்து நின்று
விட்டிசைப்பு இன்றி ஓர்நிலைமொழி விதிபெறத்
தொகு...ம்...''

உருபு முதலிய விரிந்தும் இரண்டு முதலிய சொற்கள் ஒட்டி ஒரு சொல் நீர்மைப்படும். இரண்டாம் வகைத் தொகை என இவற்றை அழைக்கலாம்.

காவிரிப் பூம் பட்டினம் (< காவிரி புகும் பட்டினம்?), கரிவலம் வந்த நல்லூர், பூவிருந்தவல்லி, அமைந்தக்கரை (அமிஞ்சிக்கரை என்பது மிகைத்திரியால் ஏற்பட்டது) போன்று பெயரெச்சத் தொடர்களாய் அமையும் பெயர்கள் மிக அருகியே காணப்படுகின்றன. கங்கை கொண்ட சோழபுரம், சுங்கம் தவிர்த்த சோழநல்லூர் போன்று பெயரெச்சத் தொடர்கள் முன் மொழியாய் அமைந்த பெயர்த் தொகை

இடப்பெயர்களும் உள. காலத்தால் ஏற்பட்ட திரிபுகளால் கங்கை கொண்டான், மூவரைவென்றான்போன்று வினை முதலை உணர்த்தும் வினையாலணையும் பெயர்களும் ஊர்ப்பெயர்களாய் விளங்குகின்றன.

**தமிழ் இலக்கண நூல்கள் கூறும் ஊர்ப்பெயர் பற்றிய செய்திகள்:-**

**தொல்காப்பியம்:**

தமிழ் இலக்கண நூல்களுள் ஆங்காங்கே ஊர்ப்பெயர்களின் இலக்கணத் தன்மைகள் ஆராயப்படுகின்றன. தொல்காப்பியம் கிளவியாக்கம் 49–ஆம் சூத்திரமாகிய,

> ஒருபெயர்ப் பொதுச்சொல் உள் பொருள் ஒழியத்
> தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
> உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்

என்பதன் உரையில் சேனாவரையர்,

''பிறரும் வாழ்வாருளரேனும் பார்ப்பனச்சேரி என்றால் உயர்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. எயினர் நாடென்பது அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பிறபுல்லும் மானும் உளவேனும் கமுகந்தோட்டம் என்றால் அஃறிணைக்கண் தலைமை பற்றிய வழக்கு. ஒடுவங்காடு என்பது அத்திணைக்கண் பன்மைபற்றிய வழக்கு. பார்ப்பார் பலராயினும் கமுகு பலவாயினும் அவைதாமே பன்மைபற்றிய வழக்காம்...'' என்பர். இளம்பூரணரும் கல்லாடனாரும் குற்றிளைநாடு, காரைக்காடு, ஆகியவற்றையும், பெயர் தெரியாத உரையாசிரியர் குற்றிளனார் நாடு, தெங்கந்தோட்டம் ஆகியவற்றையும் புதிய உதாரணங்களாகச்சேர்ப்பர். நச்சினார்க்கினியர் 'பல குடி சேர்ந்தது சேரி, பல பொருள் தொக்கது தோட்டம்,' என்பர். பெயர் தெரியாத உரையாசிரியர், ''ஒரு பெயர்ப் பொதுச் சொல்லாவது, ஒரு பெயருமாய்ப் பொதுச் சொல்லுமாய் வருவது. அது சேரி, நாடு, தோட்டம், காடு என்பன. சேரி, நாடு உயர்திணைப் பொதுச் சொல். தோட்டம், காடு அஃறிணைப் பொதுச் சொல்'' என்று மேலும் விளக்கம் தருவார்.

**நேமிநாதம்:**

நேமிநாதம் 41-ஆம் வெண்பா இதே கருத்தைக் கூற, உரை புதிய உதாரணங்களைத் தருகிறது.

''ஒரு பெயர்ப் பொதுச் சொல்லாவன:-தோட்டம், சேரி, காடு நாடு முதலியன. இஞ்சித் தோட்டம், மஞ்சள் தோட்டம் என்பன

பன்மையாற் பெயர் பெற்றன. மாந்தோட்டம், பலாத்தோட்டம் என்பன தலைமையாற் பெயர் பெற்றன. கமுகந் தோட்டம், தெங்கந் தோட்டம் என்பன பன்மையாலும், தலைமையாலும் பெயர் பெற்றன இடைச்சேரி, வாணிகச் சேரி என்பன பன்மையாற் பெயர் பெற்றன. செங்கோன்சேரி, செவ்வண்ணச்சேரி என்பன தலைமையாற் பெயர் பெற்றன. காரைக்காடு என்பது பன்மையாற் பெயர் பெற்றது. ஆலங்காடு என்பது தலைமையாற் பெயர்பெற்றது. எயினர் நாடு என்பது பன்மையாற் பெயர் பெற்றது. பாண்டிநாடு என்பது தலைமையாற் பெயர் பெற்றது. பிறவுமன்ன......''

இங்கு 'ஒருபெயர்ப் பொதுச்சொல்' என்பது ஊர்ப் பெயர் களில் வரும் பொதுக் கூறுகளாகிய (Generics) விகுதிகளேயாம் (Suffixes). விகுதிகளின் சிறப்புக் கூறுகளாக வருபவை- அதாவது தெரிபு வேறுகிளத்தல் (Specifics or prefixes) தலைமைப் பண்பாலும் சிறப்புப் பண்பாலும் அமைக்கப்படுகின்றன என்பதுவே தொல்காப் பியர் முதலானோர் கருத்தாகும்.

**வீரசோழியம்:**

வீரசோழிய உரையில் தொகைகளைப் பற்றிய பகுதியில் ஊர்ப் பெயர்களின் அமைப்புப் பற்றி நிறைய ஆராயப்படுகின்றன.

வீரசோழிய உரைப்படி ஊர்ப்பெயர்கள் அன்மொழித் தொகைகள் ஆம்; அன்மொழித் தொகையிலும் இவை பன்மொழித் தொகை என்ற உட்பிரிவைச் சார்ந்தனவாம்.

'' குரங்குகள் ஆடப்பட்ட துறை யாதொரு ஊரில் உண்டு, அவ்வூர் குரங்காடு துறை எனவும், மயில்கள் ஆடப்பட்ட துறை யாதொரூரில் உண்டு அவ்வூர் மயிலாடுதுறை எனவும் சொல்வது, பன்மொழியைத் தொகுத்தலால் பன்மொழித் தொகை '' என்பர் பெருந்தேவனார் (வீரசோழியம்: 47).

மேலும் பல இட அல்லது ஊர்ப்பெயர்களை விரித்து விளக்கம் கூறுகிறார் உரையாசிரியர் பெருந்தேவனார்.

ஊர்ப்பொது – (ஊரினது பொது) ஆறும் வேற்றுமை
(வீரசோழியம்: 44, உரை)

ஊரினுடைய உள் - உள்ளூர் – ஏழுவாய் வேற்றுமைத்தொகை
(வீரசோழியம்: 46, உரை)

கரும்பினுடைய வேலி – கருப்புவேலி – நான்காம் வேற்றுமை ஆரும் வேற்றுமையாகத் தொக்கது
(வீரசோழியம்: 44, உரை)

கல்லாற்றளி – கற்றளி – மூன்ரும் வேற்றுமைத் தொகை
(வீரசோழியம்: 46, உரை)

ஆயிரந்தளி கூடினவிடம் – ஆயிரத்தளி - ஒருமொழி ஒப்புத் து விகுத்தொகை அல்லது அன்மொழி ஒப்புத் து விகுத்தொகை
(வீரசோழியம்: 46, உரை)

எள்ளூர் – முன்மொழிச் சிறப்புத் தொகை
(வீரசோழியம்: 51, உரை)

வீரசோழிய 44–ஆம் காரிகை உரையில் வேற்றுமைத் தொகையில் உருபும் பயனும் உடன் தொகுவதற்கு உதாரணமாக ஊர்ப் பெயர்களை எடுத்து விளக்குகிருர் உரையாசிரியர்.

பாண்டி நாட்டுக் கடலின் கரை — பாண்டிக்கரை என வரும். இது இடைச் சொல் அழி தொகை அல்லது மத்திம பத லோப சமாசம் எனப்படும்.

தமிழ்த் தொகை நிலைத்தொடர்களில் முன் மொழி[1] யீறு பன்மைப் பொருளைத் தரும் என்ற வீரசோழிய (சூத். 51) உரைக்கு,

பட்டர்கள் தெருவு

நாட்டார்கள் வாய்க்கால்

ஆயிரத் தளியார் வாசல்

என்பவற்றில் முன் மொழியீறு பன்மைப் பொருளை விளக்கி நின்றது என்றெழுதுகிருர் பெருந்தேவனர்.

'முன்றில், வாயில் என்பன முன்மொழி பின்னுய் பின்மொழி முன்னுய் மாருடி வந்தமையான் மாருடு தொகை, என்பதும் அதே சூத்திரத்தில் பெருந்தேவனர் கூறும் கருத்தாகும்.

---

1. *முன்மொழி என்பது தொல்காப்பிய (தொல் - சொல் : 419) உரையாசிரியர் கருத்துப்படி இடம் பற்றி வந்த, தொகைச் சொல்லின் இரண்டாம் உறுப்பாகும்; ஆனுல் பெருந்தேவனர் கருத்துப்படி காலம்பற்றி வந்த தொகைச் சொல்லின் முதல் உறுப்பாகும்.*

**நன்னூல்:**

நன்னூல் மயிலைநாதருரையில் ஊர்ப்பெயர் அல்லது இடப்பெயர் பற்றிய சில செய்திகள் காணப்படுகின்றன. கங்கை கொண்ட சோழ புரம், இரதநூபுர சக்கரவாளம் (சூளா. இரதநூபுர: 12), பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி முதலியவற்றை ஒட்டுப்பெயர் (= தொகைப்பெயர்) என்கிறார் மயிலைநாதர் (நன். 129 உரை); கிள்ளிகுடி என்பது கிள்ளியது குடிமக்களிருக்குமூர் என விரிந்து அன்மொழித் தொகையாக நிற்பதைக் குறிப்பிடுவார் அவர் (நன். 368 உரை). அளகை நகர் என்ற பண்புத் தொகை அளகையான நகர் என விரியும் (நன். 364 உரை). ஊர்ப் பெயர்களை ஒன்றுக்கு மேற்பட்ட முறையில் விரிக்கலாம் என்பதற்குக் கீழ்க் கண்ட உதாரணங்களைக் காட்டுவார் மயிலைநாதர் (நன். 372):

| | | |
|---|---|---|
| திரையனூர் | — | திரையனாற்செய்யப்பட்டஊர்(3-ஆம்வேற்.)<br>திரையனதூர் (6-ஆம் வேற்.) |
| வையை வடக்கு | — | வையையின் வடக்கு (7–ஆம் வேற்.)<br>வையைக்கு வடக்கு (4ஆம் வேற்.) |
| ஊர்க்குளம் | — | ஊரின்கட்குளம் (7-ஆம் வேற்.)<br>ஊரினது குளம் (6-ஆம் வேற்.)<br>ஊர்க்குக்குளம் (4-ஆம் வேற்.) |
| ஏழேகால் | — | ஏழும் காலும் (எண்ணும்மை)<br>ஏழின் மேற்கால் (6/7 ஆம் வேற்.)<br>ஏழேகால் நிலமானவூர் (உம்மை/ வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை; இப்பெயரில் ஓர் ஊர் இருந்தமை தெரிகிறது.) |
| கருப்பு வேலி | — | கரும்பாற் செய்த வேலி (3–ஆம் வேற்.)<br>கரும்புக்கு வேலி (4–ஆம் வேற்.)<br>கரும்பினிற் செய்த வேலி (5-ஆம் வேற்.)<br>கரும்பினது வேலி (6-ஆம் வேற்.)<br>கரும்பின் கண் வேலி (7-ஆம் வேற்.) |

தொல்காப்பியர் கூறும் ஒரு பெயர்ப் பொதுச்சொல் பற்றிய கருத்தும் உதாரணங்களும் நன்.377 ல் காணப்படுகின்றன. வடுகக் கண்ணன் (<வடுகம் + கண்ணன்) என்றால் வடுகநாட்டிற் பிறந்த கண்ணன் என்றும், வடுகங் கண்ணன் (<வடுகன் + கண்ணன்) என்றால்

வடுகற்கு மகனாகிய கண்ணன் என்றும் பொருள்படும்; முன்னது இடத் தொகை; பின்னது பெயர்த் தொகை என்ற கருத்து நன். 370இல் கூறப்படுகிறது. உப்பளம், ஊர்மன்று போன்றவை வழக்கிடத்து இனஞ் சுட்டாதவை என்பார் மயிலைநாதர் (நன். 400).

**பிற இலக்கணங்கள்**

பாண்டிக்கரை என்பதைப் பாண்டிய நாட்டுக் கடலினது கரைக்கண் இருக்கும் ஊர் என விரிக்கும் இலக்கணக்கொத்து (சூத்திரம் 97). மேலும் அது ஒரு பொருட்கு இரு பெயர் ஆதலுக்குக் கன்னியா குமரியை உதாரணம் காட்டும்.

பிரயோக விவேகம் கங்கையுள் இடைச்சேரி என்ற தொடரில் கங்கை இலக்கணையாற்றலால் கங்கைக்கரையைக் குறிக்கிறது என்று கூறும் (காரிகை: 47). அன்மொழித் தொகையாகிய ''வெகுவிரீகிக்கு அந்நிய பத அர்த்தத்திலேயே சத்தி என்றும், சக்கிய சம்பந்தமான இலக்கணை வேண்டா என்றும், இரதநூபுர சக்கிரவாளம் (சூளா. 4-12) என்புழி அவ்வச் சொற்களின் பொருள் மேல் அன்றி. அவற்றோடு ஒரு சம்பந்தம் இன்றியும் ஒரு நகரத்தை உணர்த்தினாற் போல வெகு விரீகி தொகும் என்றும் உணர்க....'' ''என்பது பிரயோக விவேக விளக்கம் (காரிகை 47). மேலும் பிரயோக விவேகம் துவிகு சமாஜம் என்ற எண்ணோடு பொருள் புணர்ந்த எண் தொகையில் ஏகவத்பாவிதுவிகு என்பதற்குப் பஞ்சவடி என்பதை உதாரணமாகக் கொடுக்கும் (காரிகை. 21) வடமொழியில் அவ்யயி பாவசமாசம் என்றும், தமிழில் முன்னும் பின்னும் மொழியடுத்து வரும் இடைச்சொல் தொகை என்றும் அழைக்கப்படும் தொகைக்குப் பிரயோக விவேகம் 'கொன்னூர்' என்பதை உதாரணமாகக் கொடுக்கிறது.

**தொகைகளில் பொருள் சிறத்தல்:**

ஊர்ப் பெயர்களாக வரும் வேற்றுமைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உவமத்தொகை ஆகியவைகளில்பொதுக் கூறுகளாகிய முன்மொழியிலும் (பெருந்தேவனார் கருத்துப்படி பின் மொழி) சிறுபான்மை வேற்றுமைத் தொகையிலும் பண்புத் தொகையி லும் சிறப்புக் கூறுகளாகிய பின்மொழியிலும் (பெருந்தேவனார் கருத்துப்படி முன்மொழியிலும்) பொருள் நிற்றலுண்டு. ஊர்ப்பெயர்கள் அன்மொழித் தொகை என்ற நிலையில் பொருள் பிறிதொரு இடத் தில் சிறந்து நிற்கிறது எனலாம். (மேலும் பார்க்க: பிரயோக விவேகம் –25.)

ஊர்ப்பெயர்கள் பற்றிய தமிழ் இலக்கண நூலார் கருத்துக் களைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துக் கூறலாம்:

1) ஊர்ப்பெயர்களுட்சில இலக்கணை (= ஆகுபெயர்) ஆற்றலால் பொருள் உணர்த்தலாம். (எ-டு: கங்கையுள் இடைச்சேரி- கங்கைக் கரையுள் இடைச்சேரி)

2) பெரும்பான்மையான ஊர்ப்பெயர்கள் வேற்றுமை, பண்பு, வினை முதலிய தொகைகளின் அடிப்படையில் தோன்றும் அன்மொழித் தொகைகளாம். (எ-டு: கிள்ளிகுடி, இரதநூபுர சக்கரவாளம்).

3. அன்மொழித் தொகையில் அவை பன்மொழித் தொகை என்ற உட்பிரிவைச் சேர்ந்தவை. (எ-டு: குரங்காடு துறை, மயிலாடு துறை).

4 அவற்றை 'ஒட்டுப் பெயர்' எனவும் அழைக்கலாம்.

5. ஊர்ப் பெயர்களுட் சில எண்ணெடு பொருள் புணர்ந்த எண் தொகையாயும் (ஒருமொழி ஒப்புத் து விகுத்தொகை அல்லது அன்மொழி ஒப்புத் து விகுத் தொகை) (எ-டு: ஆயிரத் தளி பஞ்சவடி), முன்மொழிச் சிறப்புத் தொகையாயும் (எ-டு: எள்ளூர்), சில முன்னும் பின்னும் மொழியடுத்து வரும் இடைச்சொல் தொகையாயும் (எ-டு: கொன்னூர்), சில இடைச்சொல் அழி தொகையாகவும் (எ-டு: பாண்டிக் கரை), சில மாருடு தொகையாகவும் (எ-டு: முன்றில்,வாயில்) அமையலாம்.

6. ஊர்ப்பெயர்கள் எல்லோமே தொடர்களிலிருந்து வருவிக்கப் பட்டவை. எனவே ஊர்ப் பெயர்களைத் தொடர்களாக விரிக்கும் போது பொருளுக்கு ஏற்ப விரிக்கலாம். (எ-டு: கருப்பு வேலி).

7. ஊர்ப் பெயர்களின் விகுதிகளை ஒரு பெயர்ப் பொதுச் சொல் என்று குறிக்கிறுர் தொல்காப்பியர்.

8. ஊர்ப் பெயர் முன்னெட்டுக்களைத் தெரிபு வேறு கிளத்தல் என்பார் அவர். அவை தலைமை பன்மை முதலிய காரணங் களால் அமையலாம்.

9. ஊர்ப்பெயர்களில் முன்மொழியீறு (முன்னெட்டுக்கள்) பன்மைப் பொருளைத் தரும் (எ-டு: பட்டர்கள் தெருவு).

10. ஊர்ப்பெயர்கள் இனஞ்சுட்டியும் (எ-டு: புதூர்), சுட்டாதும் (எ-டு: உப்பளம்) வரலாம்.

11. இடப்பெயருக்குப் பின்னர் வரும் இயற்பெயர், வல்லொற்றுப் பெற்று வரும் (எ-டு: வடுகக் கண்ணன்).

ஊர்ப்பெயர்கள் பலவும் பன்மைத் தொகைகளாயினும் அவை அண்மை நிலையில் இரு உறுப்புக்களாகவே இணைந்து தொகையாய் ஒரு சொல் நீர்மைத்தாய் நின்று பின்னும் தொகையாற்றலால் பல அடுக்குகளாக நிற்கின்றன என உணரலாம். ஊர்ப்பெயர்களில் வரும் பெயர்த் தொடர்களையும், வினைத் தொடர்களையும் தொடரியல் நிலையில் விரிவாக ஆராய்ந்தால் ஊர்ப்பெயர்களின் தொடரமைப்பு (Syntax)த் தெளிவாகும்; அதன் மூலம் ஊர்கள் தோன்றியதற்கான வரலாற்றுக் காரணங்களை வகைப்படுத்தி ஊர்ப்பெயர்களின் பொருளமைப்பையும் (Semantics) விளக்க இயலும்.

**ஊர்ப்பெயர்களின் புணர்ச்சிமுறை:**

இனி ஊர்ப்பெயர்களின் புணர்ச்சி முறையை இலக்கண ஆசிரியர் கருத்தின் வழியும் பிற வழியும் நின்று ஆராயலாம்.

ஊர்ப்பெயர்களில் பெரும்பான்மையாக அமையும் வேற்றுமைத் தொகைகளைப் பொதுப் புணர்ச்சி விதிகளுக்கு உட்படுத்தி விளக்கி விடலாம். ஆனால் பண்புத் தொகையாயும் வினைத் தொகையாயும் அமையும் ஊர்ப் பெயர்களின் புணர்ச்சி மாற்றங்களை அமைப்பதில் சிக்கல் எழுகின்றது.

தொல்காப்பியர் உரிச் சொல், இடைச் சொல், பண்புத் தொகை, வினைத்தொகை ஆகியவை புணரும் புணர்ச்சி, புணரியலால் விளக்கப்படாது என்று கருதுகிறார் (தொல். எழுத்து. 482, நச்). இவை எல்லாம் மருவின் பாத்திய என்று கூறினாலும் அதற்கு விதிவிலக்கு உண்டு என்றும் அவரே கூறுகிறார் (தொல். எழுத்து. 483). அவ்வாறு வருவனவற்றை இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ என்று கூறி விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர் (தொல். எழுத்து. 111). சுருக்க மாகச் சொன்னால் புறச்சந்தி மட்டுமே சந்தி என்பதே தொல்காப் பியர் கருத்து. ஆனால் பிற்காலத்தில் எழுந்த வீரசோழியம், நேமி நாதம், நன்னூல் போன்றவற்றின் ஆசிரியர்கள் அகச்சந்தி புறச்சந்தி இரண்டையும் ஏற்று, தொல்காப்பியர் விலக்கியவற்றையும் பொதுப் புணர்ச்சியில் அடக்கிக் கூறுவர். அதோடு பண்புத் தொகையில் அடையும் புணர்ச்சி வேறுபாடுகளையும் தனியே பிற்கால இலக்கணத் தார் வகுத்துரைக்கின்றனர் (நன். 136).

புணர்ச்சி பற்றிய இக்கோட்பாட்டடிப்படையிலேயே ஊர்ப் பெயர்களின் புணர்ச்சி அமைப்புக்களையும், உரையாசிரியர்கள் விளக்கி யிருக்கின்றனர்.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோர் தொல்காப்பிய எழுத்ததிகாரப் புணரியல்களில் பொதுப் புணர்ச்சி விதிகளில் ஆங் காங்கே வேற்றுமைத் தொகையாய் அமையும் ஊர்ப்பெயர்களை எடுத்து, அவற்றின் புணர்ச்சி அமைப்புக்களை விளக்குகின்றனர்.

தொல்காப்பிய எழுத்ததிகார நச்சினார்க்கினிய உரை, நன்னூல் மயிலைநாதர் உரை, வீரசோழிய உரை, நேமிநாத உரை ஆகிய வற்றில் காணப்படும் ஊர்ப் பெயர்களின் புணர்ச்சி முடிபுகளை இங்கே தொகுத்துப் பார்க்கலாம். தொல்காப்பிய எழுத்ததிகார இளம்பூரணர் உரையிலும் இத்தகைய எடுத்துக்காட்டுகளே பெரும்பாலும் உள்ளன.

| வருமிடம் | | ஊர்ப்பெயர்ப் புணர்ச்சி முடிபு |
|---|---|---|
| தொல். எழுத்து | நன்னூல் | |
| 133,266 | | அண்ணா / அண்ணா அ + அத்து + ஏரி > அண்ணா / அண்ணா + த்து + ஏரி > அண்ணாத்தேரி / அண்ணா அத்தேரி |
| 153 | 158 | ஆசீவகன் + பள்ளி > ஆசீவகப்பள்ளி |
| | | நிக்கந்தன் + கோட்டம் > நிக்கந்தக் கோட்டம் |
| | | கணக்காயன் + பள்ளி > கணக்காயப் பள்ளி (நன்.) |
| | | வாணிகர் + தெரு > வாணிகத் தெரு |
| | | குமரன் + கோட்டம் > குமரகோட்டம் ~ குமரக்கோட்டம் |
| | | பிரமன் + கோட்டம் > பிரம கோட்டம் ~ பிரமக் கோட்டம் |
| | | வாசுதேவன் + கோட்டம் < வாசுதேவ– கோட்டம் — வாசுதேவக்கோட்டம் (நன்.) |
| 154 | 158 | நம்பி + பேறு ( நம்பியது பேறு, நம்பிக்குப் பேறு) > நம்பிப்பேறு |

| தொல் எழுத்து | நன்னூல் | |
|---|---|---|
| | | எட்டி + புரவு > எட்டிப்புரவு (நன்.)<br>காவிதி + புரவு > காவிதிப்புரவு (நன்.) |
| 201 | | வடக்கின் + கண் > வடக்கண்<br>கீழ் + குளம் > கீழைக்குளம் (ஐ சாரியைப்பேறு)<br>மேல் + குளம் > மேலைக்குளம் ( " ) |
| 216 | | இருவிள + கொற்றன் > இருவிளக் கொற்றன் (> இருவிளவிற் கொற்றன்)<br>இருவிள : வேணாட்டகத்து ஓரூர் ; கருவூரினகத்து ஒரு சேரியுமென்ப. |
| 217 | | அத / விள + கோடு > அதங்கோடு / விளங்கோடு (மரப்பெயர்) |
| 243 | | உதி + கோடு > உதிங்கோடு / உதியங்கோடு (மரப்பெயர்) |
| 260 | | செரு + களம் > செருவக்களம் / செருக்களம் |
| 262 | | ஒடு + கோடு > ஒடுங்கோடு / ஒடுவங்கோடு |
| 293 | | கோ + இல் > கோவில் |
| 306 | | வெண் + கரை > வெண்ணாக்கரை / வெண்ணின் கரை (வெண் = வெண்ணாறு) |
| 307 | 210 | உமண் / பாண் + குடி / சேரி / தோட்டம் / பாடி > உமண் / பாண் குடி / சேரி / தோட்டம் / பாடி |
| 312 | 219 | குளம் + கரை > குளங்கரை / குளக்கரை |
| 338 | 211 | எயின் + குடி / சேரி / தோட்டம் / பாடி > எயின்குடி / சேரி / தோட்டம் / பாடி |
| 338 | 158 | பார்ப்பான் + சேரி > பார்ப்பன் + அக்கு + சேரி > பார்ப்பன் + அ + சேரி < பார்ப்பனச் சேரி (ஆகாரங் குறுகி அக்கும் வல்லெழுத்தும் பெற்றன—நச்.)<br>ஈற்றயல் குறுகி அகரம் மிக்கது - மயிலைநாதர். |

| தொல். எழுத்து நச்சினார்க் கினியர் | நன்னூல் மயிலைநாதர் | |
|---|---|---|
| 418 | | பார்ப்பு + அன் + அக்கு + சேரி / தோட்டம் > பார்ப்பு + அன் + அ + சேரி > பார்ப்பனச் சேரி/தோட்டம் (இங்கு உடமை விரிக்க. |
| 350 | | கொற்றன் + குடி > கொற்ற் + அம் + குடி > கொற்றங்குடி<br>சாத்தன் + குடி > சாத்த் + அம் + குடி > சாத்தங்குடி<br>கொற்றன் + மங்கலம் > கொற்ற் + அம் + மங்கலம் > கொற்ற் + அ + மங்கலம் > கொற்றமங்கலம்<br>சாத்தன் + மங்கலம் > சாத்த் + அம் + மங்கலம் சாத்த் + அ + மங்கலம் > சாத்தமங்கலம்<br>வேடன் + மங்கலம் > வேட் + அம் + மங்கலம் > வேட்ட் + அ + மங்கலம் > வேட்டமங்கலம்<br>வேடன் + குடி > வேட் + அம் + குடி > வேட்ட் + அ + குடி > வேட்டங்குடி |
| 355 | | இல் + முன் > முன் + இல் > முன்னில் > முன்றில் — மரூஉ |
| 385 | | தமிழ் + சேரி / தோட்டம் / பள்ளி > தமிழ்ச்சேரி / தோட்டம் / பள்ளி (தமிழைஉடைய சேரி என விரிக்க)<br>தமிழ் + நாடு > தமிழ் + அக்கு + நாடு > தமிழ் + அ + நாடு > தமிழநாடு<br>தமிழ் + நாடு > தமிழ்நாடு. |
| | 224 | தமிழ் + சேரி/தோட்டம் > (வேற்றுமைப் புணர்ச்சி) தமிழச்சேரி/தோட்டம் |
| 395 | 225 | கீழ் + குளம்/சேரி/துறை/தோட்டம்/பாடி |

| தொல். எழுத்து | நன்னூல் | |
|---|---|---|
| | | > கீழ்க்குளம்... ∽ கீழ்குளம். |
| 405 | | கல் + பாறை > கல்லாம்பாறை (மரூஉ) |
| 432 | | வடக்கு + சுரம் > வடசுரம் |
| | | வடக்கு + வேங்கடம் > வடவேங்கடம் |
| | | தெற்கு + குமரி/சுரம் > தென்குமரி/சுரம் |
| | | கிழக்கு + கரை > கீழ்கரை |
| | | மேற்கு + கரை > மீ கரை |
| | | மேற்கு + சேரி > மேலைச்சேரி |
| | | **செய்யுளுள் திரிவன** |
| 483 | | கள்ளி + காடு > கள்ளியங்காடு |
| | | புன்னை + கானல் > புன்னையங்கானல் |
| | | நாவல் + தண்பொழில் > நாவலந் தண்பொழில் |
| | | கானல் + பெருந்துறை > கானலம் பெருந்துறை |
| | | **திரிந்து மருவி வழங்குவன** |
| 483 | 237 | சோழன் + நாடு > சோழனாடு > சோணாடு (அன் கெட்டு முடிந்தது) |
| | | பாண்டியன் + நாடு > பாண்டிநாடு ( ,, ) |
| | | தொண்டைமான் + நாடு > தொண்டைமானாடு > தொண்டை நாடு (ஈற்றெழுத்துச் சிலகெட்டு முடிந்தது) |
| | | மலையமான் + நாடு > மலையமானாடு > மலாடு (முதலெழுத்தொழிந்தன பலவுங் கெட்டு முடிந்தது) |
| | | பொது + இல் > பொதுவில் > பொதியில் (உகரம் திரிந்து இகரமாய் அகரஉடம்படு மெய் பெற்று முடிந்தது) |
| | 237 | தஞ்சாவூர் > தஞ்சை |
| | | பனையூர் > பனைசை |
| | | சேந்தமங்கலம் > சேந்தை |
| | | ஆற்றூர் > ஆறை |

**வீரசோழியம்:** (காரிகை 51)

பட்டர்கள் + தெரு > பட்டர்கள் தெருவு
நாட்டார் + வாய்க்கால் > நாட்டார் வாய்க்கால்
ஆயிரத்தளியார் + வாசல் > ஆயிரத்தளியார் வாசல்

மேலே முன்மொழி பன்மை ஈறாய் முடிவதும், முன்றில், வாயில் என் பவற்றில் முன்மொழி பின்னாய் பின்மொழி முன்னாய் மாறாடி வந்தமை யும் வீரசோழிய உரையில் விளக்கப்படுகின்றன.

**நேமிநாதம்**

சூத்திர எண்

14 கரும்பு + வேலி > கருப்புவேலி
16 *அன் ஆர் ஆம்*
சாலியன் + குளம் > சாலியர் குளம்
கோலிகன் + குளம் > கோலிகர்குளம்
16 சோழன் + நாடு > சோழநாடு (அன்னென்னும் பதத்தைக்கெடுத்து முடிக்க).
பாண்டியன் + நாடு > பாண்டியநாடு
> பாண்டியநாடு (அன்னென்னும் பதத்தைக் கெடுத்து 'ஒற்றுப்போம்' என்பதனான் யகர வொற்றையொழித்து முடிக்க.)
19 பசுமை + பொழில் > ப + பொழில் > பை + பொழில் > பைம்பொழில்.

மேலே கண்டவற்றிலிருந்து தொல்காப்பியக் கோட்பாடுகளின் படி வேற்றுமைத் தொகையாய் அமையும் ஊர்ப்பெயர்களின் புணர்ச்சி அமைப்புக்களைப் பொதுவிதிகளால் அடக்கிவிடலாம். பண்புத்தொகை, வினைத்தொகையாய் அமையும் ஊர்ப்பெயர்களை அங்ஙனம் விளக்க இயலாது. ஆனால் பிற்கால த்திய இலக்கணக் கோட்பாடுகளின்படி எல்லா வகையான தொகையமைப்பில் காணப்படும் ஊர்ப்பெயர்களுக் கும் பொது விதிகளே பொருந்துவனவாகும். எனினும்(1) பல வரலாற்று ஒலித்திரிபுகள், நாடோடி சொற்பொருள் விளக்கங்கள் (Folk etymologies) முதலியவற்றால் மாற்றமடைந்துள்ள ஊர்ப் பெயர் களுக்கும் (எ-டு: மகுடஞ்சாவடி, காரணம் பேட்டை), (2) மரூஉ முடிபு பெற்றுக் காணப்படும் பல ஊர்ப்பெயர்களுக்கும் (எ-டு. கோவை, தஞ்சை முதலியன) பொது விதிகள் பொருந்தா; அவற்றிற்குச் சிறப்பு

விதிகளை உருவாக்குதல் வேண்டும். இச்சிறப்புவிதிகள் பொது ஒலி மாற்ற விதிகளை ஒட்டியே அமைக்கப் பெறுவது சாத்தியமாகலாம்.

எடுத்துக்காட்டாக, கோயம்புத்தூர் என்ற வடிவத்தைக் கோயன் + புத்தூர் > கோயம் + புத்தூர் > கோயம்புத்தூர் எனப் பிரித்து ஓரினமாதல் என்ற புணர்ச்சி விதி காட்டிவிடலாம். ஆனால் 'கோயமுத்தூர்' என்பதற்கு ஒலி மாற்ற விதியை வரலாற்று நிலையில் வரிசைப்படுத்திக்காட்டியே புணர்ச்சியை விளக்க இயலும்.

கோயமுத்தூர் < கோயம்முத்தூர் (ஒலி வீழ்ச்சி) < கோயம்புத்தூர் (ஓரினமாதல்) < கோயன்புத்தூர் (ஓரினமாதல்) < கோயன் + புத்தூர் < கோவன் + புத்தூர் (வ > ய மாற்றம்)

சிலசமயங்களில் நாடோடிச் சொற்பொருள் விளக்கங்கள் எழுந்ததன் காரணமாக, புதிய சொற்பிரிப்பும், அதை ஒட்டிய புணர்ச்சி விதிகளும் எழுந்து விடுகின்றன.

எ.டு: கங்கை கொண்டான் < கண் + கை + கொண்டான்
( < கங்கை + கொண்டான் )
மகுடஞ்சாவடி < மகுடன் + சாவடி < மாக் டொனால்டு சௌல்ட்டிரி
காரணம் பேட்டை < காரணன் + பேட்டை < கால்டன் பேட்டை

பூவிருந்தவல்லி < பூந்தமல்லி < பூந்தண்மல்லி
அமைந்தக்கரை < அமிஞ்சிக்கரை
பழைய சங்கடம் < பழைய ஜெயங்கொண்டம்

இவை எல்லாம் சிக்கல் தருபவை. இவை இன்னும் விரிவாக ஆராயத் தக்கவை.

இது போன்றே மருஉ என அழைக்கப்படும் கோவை, தஞ்சை முதலான பெயர்களுக்கும் ஒலிமாற்ற விதிகள், அழகுணர்ச்சி முதலிய வற்றை அடிப்படையாகக் கொண்டு சிறப்பு விதிகள் அமைக்கப்பட வேண்டும். (பார்க்க : மருஉ ஊர்ப்பெயர்கள் என்ற தனிக்கட்டுரை.)

---

## 3. மருஉ ஊர்ப் பெயர்கள்

சிக்கனம், எளிமை, வேகம், சோம்பல் போன்ற பல காரணங் களால் மொழியில் திரிபுகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. மொழி யிலுள்ள சொற்களிலும், பெயர்களிலும் ஒரே மாதிரியாக ஏற்படும் இத் திரிபுகள் சொற் சுருக்கத்தையே நோக்கமாகக் கொண்டிருக்கின்றன. நீண்ட இயற்பெயர்கள் அரைப்பெயர்களாக மருவுகின்றன. பார்வதி பாருவாகவும். கிருஷ்ணன் கிட்டு ஆகவும், சாம்பசிவம் சாம்பு ஆகவும் சாதாரணமாக மாறுகின்றன. இதே போன்று மருவும் இயல்பு ஊர்ப் பெயர்களிலும் காணப்படுகிறது. இக் கட்டுரை மருஉ ஊர்ப் பெயர் களைப் பற்றி ஆய்கிறது.

சங்க இலக்கியத்தில் மருவி வழங்கிய சில பெயர்களைப் பார்ப் போம். சங்க இலக்கியங்களில் முழுவடிவமும் மருஉ வடிவமும் காணப் படும் சில பெயர்கள்:

| | முழு வடிவம் | | மருஉ வடிவம் | |
|---|---|---|---|---|
| அ. | அழுந்தூர் | — | அழுந்தை | அகம். 196:11;246:15 |
| | ஈர்ந்தூர் | — | ஈர்ந்தை | புறம். 180:7 |
| | உறையூர் | — | உறந்தை | அகம். 26:14 |
| | மருங்கூர் | — | மருங்கை | நற். 358:10 |
| | நாலூர் | — | நாலை | புறம். 179:10, குறு. 15:3 |
| ஆ. | இருந்தையூர் | — | இருந்தை | குறு. 335 |
| | எருமையூர் | — | எருமை | அகம். 36:17 |
| இ. | பொறையாறு | — | புறந்தை | புறம். 391 |
| ஈ. | செல்லூர் | — | செல்லி | அகம். 90:9 |
| உ. | குடவாயில் | — | குடந்தை | அகம். 44:18 |
| ஊ. | கோவலூர் | — | கோவல் | புறம். 99:13 |

மேலே காட்டிய பெயர்களோடு ஒப்பிடும்பொழுது இருப்பை, கொற்கை துவரை, பெண்ணை, பொருநை (பொருந்தம்), போந்தை, மதுரை, மாந்தை (மாதோட்டம்), மையல், வீரை. வேம்பி (வேம்பற்றூர்) போன்ற பெயர்கள் எவற்றின் மரூஉக்களாயிருக்கும் என்ற ஐயத்தைத் தோற்றுவிக்கின்றன.

தேவார காலத்துச் சில பெயர்களின் மரூஉ வடிவங்களைப் பார்ப்போம்.

| | | |
|---|---|---|
| அதியரைய மங்கலம் | > | அதியரைய மங்கை > அதிகை |
| அரித்துவரா மங்கலம் | > | அரதை |
| கொடும்பாளூர் | > | கொடும்பை |
| சனகாபுரி | > | சனகை |
| செங்கண் மா | > | கண்ணை |
| தஞ்சாக்கூர் | > | தஞ்சை |
| நாகப்பட்டினம் | > | நாகை |
| மாமல்லபுரம் | > | மாமல்லை |

அக்கால கட்டத்தைச் சார்ந்த அஞ்சை, ஆடானை, இரும்பை, இலம்பை, கடந்தை, திருச்சோறை, தில்தை போன்ற பெயர்களும் மரூஉக்கள் என்று தோன்றுகின்றன.

இக்காலத்தும் அம்பை, ஆறை, கோவை, சிங்கை, புதுவை போன்ற எண்ணிறந்த மரூஉப் பெயர்களைப் பார்க்கிறோம்.

மரூஉக்களை இயல்பு வழக்கு என நன்னூல் (267) பேசுகிறது. மரூஉக்களுக்கு மலாடு, சோணாடு, தஞ்சை, ஆறை போன்ற பெயர்களை உதாரணமாகக் காட்டுவர் உரையாசிரியர்கள் (தொல். எழுத்து. 483). குடவாயில் குடந்தை ஆவதும், உறையூர் உறந்தை ஆவதும், செய்யுள் மரபொடுபட்ட மேலையோர் நெறி என்று பேராசிரியர் கருதுகிறார் (தொல். சொல். 392). நாகப்பட்டினம், தஞ்சாவூர், உறையூர் எனக்கிடந்த ஊர்ப்பெயர்கள் கடை குறைந்து நாகை, தஞ்சை, உறந்தை என ஐகாரத்தால் முடிவன, குறிப்பு வினைகள் என வீர சோழியம் கூறுகிறது (தத்திகம்: 5).

மேற்கண்ட செய்திகளை வைத்து நோக்கும்பொழுது இம் மருஉப் பெயர்கள் இயல்பான பேச்சு வழக்கில் தோன்றிய திரிபுகள் என்பதை விடப் பேராசிரியர் கூறுவதுபோல வேண்டுமென்றே தோற்றுவிக்கப் படும் ஓர் செய்யுள் அல்லது இலக்கிய மரபாகத் தோன்றுகிறது. இனி இதற்குரிய காரணங்களைப் பார்ப்போம்.

1. இம்மரூஉப் பெயர்கள் செய்யுளில் இனிமை, அழகுணர்ச்சி, புதுமை, சுருக்கம், யாப்பு போன்ற இலக்கியக் காரணங்களுக் காகத் தோற்றுவிக்கப் படுவதாகத் தோன்றுகிறது. இதனுல்தான் செய்யுளில் பெயர்களைக் குறைப்பது போல விரிப்பதையும் பார்க்கிறோம். நெல்லூர் அல்லது சாலியூர் சீர்சான்ற நெல்லின் ஊராகிறது (மதுரைக் காஞ்சி: 87,88). திருமாலிருஞ்சோலை 'சீர்கெழு திருவிற்சோலையொடு தொடர்மொழி மாலிருங்குன்றம்' ஆகிறது (பரிபாடல் 15:23).

2. ஆந்தை, பூந்தை போன்ற மரூஉப் பெயர்களின் முழுப் பெயர் களை விளக்க முனையும் தொல்காப்பியர் இவ்வகை மரூஉப் பெயர்களை விளக்கவில்லை (எழுத்து:348). ஆந்தை போன்ற மரூஉப் பெயர்களின் உண்மை வடிவங்கள் மறக்கின்றஅளவுக்கு அவை செல்வாக்குப் பெற்றதால் அவர் அவற்றைக் குறிப்பாக விளக்க முனைந்திருக்கலாம். ஆனுல் மரூஉப் பெயர்கள் இலக்கிய மரபாய் மட்டும் மூல வடிவங்களை மறைக்காத வண்ணம் காணப் பட்டதால், தெளிவு படுத்த வேண்டியதின் அவசியமின்மை கருதி விட்டிருக்கலாம்.

3. இன்று மக்கள் பேச்சுவழக்கில், கோவை, தஞ்சை, நாகைஎன்பன சாதாரணமாக வழங்கக் காணேும்.

4. பாடல்கள், கடிதங்கள், மேடைப்பேச்சுக்கள் போன்ற நிலைகளில் தான் இவ்வடிவங்கள் காணப்படுகின்றன.

இக் காரணங்களால் இம்மரூஉ ஊர்ப்பெயர்களை இலக்கிய மரபு எனக் கொள்ளலாம். இருந்தாலும் அதிகை, சென்னை போன்ற நில மரூஉக்கள்- முழுப் பெயர் மறைய நிலைபெற்றதையும் நினைவில் கொள்ளவேண்டும்.

இனி இம்மரூஉப் பெயர்களைப் பகுத்து நோக்கி இவற்றின் அமைப்பைப் பார்ப்போம்:-

1. மரூஉப்பெயர்களில் ஐ முடிக்கும் ஒலியாக வருகிறது. இடப் பெயர்களில் வரும் ஊர், புரி போன்ற விகுதிகள் மறைந்து விடுகின்றன

எ.கா: ஆற்றூர் > ஆறை
முகுந்தலூர் > முகுந்தை
நாலூர் > நாலை

துவராபுரி > துவரை

சனகாபுரி > சனகை

2. இ என்பதும் சில சமயங்களில் முடிக்கும் ஒலியாக வருகிறது.

எ.கா: செல்லூர் > செல்லி

3. எருமையூர், இருந்தையூர் போன்ற 'ஐ' உடைய பெயர்களில் ஊர் என்பது மட்டும் மறைகிறது.

4. 'ஐ' ஒலி இல்லாத பெயர்களிலும் ஊர் என்ற விகுதி மறைய எஞ்சிய பகுதி மரூஉவாக அமைகிறது.

எ.கா: கோவலூர் > கோவல்
கோழியூர் > கோழி

5. துறையூர், கறையூர் போன்ற பெயர்களில் ஊர் விகுதி மறைய 'சை' என்ற அசை சேர்கிறது

6. சில பெயர்களில் மரூஉ வடிவங்களுடன் பதி, நகர் போன்ற விகுதி களும் சேர்ந்து காணப்படுகின்றன.

எ.கா: இராசிபுரம் > இராசை நகர்
திலதை > திலதைப்பதி

7. சில பெயர்களில் பகுதியும் சில மாற்றங்களை அடைகிறது.

எ.கா: உறையூர் உறந்தை
பொறையாறு > புறந்தை

8. குடவாயில் > குடந்தை எனத்திரிவது சற்று மாறுபட்ட அமைப் பாகத் தோன்றுகிறது.

மொத்தமாகப் பார்க்கும் பொழுது பெரும்பாலான மரூஉப் பெயர்கள் ஈரசைகளாகவே அமைகின்றன. இதில் முதலசை மூல வடிவத்தில் உள்ளதாக அமைகிறது. இரண்டாம் அசையில் ஐ அல்லது இ என்ற இரண்டும் ஈற்றில் முடிக்கும் ஒலியாக அமைகின்றன. இரண்டாம் அசையில் இடைவெளி காணப்பட்டால் அதை சகரமோ, தகரமோ நிரப்புகின்றன.

இவ்வாய்விலிருந்து சில கருதுகோள்கள் நமக்குக் கிடைக் கின்றன. உரிய சான்றுகள் தற்சமயம் இல்லாதிருப்பினும் சில ஊர்ப்

பெயர்களை மரூஉப்பெயர்கள் என நாம் ஐயப்பட்டால், அவற்றின் மூல நிலைகளைப்பற்றி ஆராயவும், சான்று தேடுவதற்கும் உரிய சாத்தியங்கள் தோன்றுகின்றன. இவ்வடிப்படையில் வரலாற்றுத் தொடக்கக் காலத்தில் கிடைக்கும் மரூஉப் பெயர்களின் வரலாற்று முற்காலத்திய வடிவங்களை ஊகம் செய்யலாம். காட்டாக சங்கப்பெயர்களாகிய மதுரை, கொற்கை போன்றவைகளை மரூஉ என நினைத்தால், அவற்றின் முன் மூலவடிவங்களை ஊகிக்க முயலலாம்.[1]

---

1. *மரூஉவை மொழியியலில் அசைகெடல்* (Haplology) *என அழைப்பர்; தமிழில் இது செய்யுள் விகாரம் எனவும் அழைக்கப்படும். வடமொழியில் இத்தகைய பெயர்கள் நாமௌகதேசா* (Fractional names) = *குறைப் பெயர்கள் என அழைக்கப்படுகிறது.* (*எ.டு: பர்த்ர்* > *பத்தி*)



# 4. தமிழக ஆற்றுப்பெயர்கள்

காற்று மண்டலத்திலுள்ள நீர் மழையாகப் பொழிவதால் நில மட்டத்தின் மேல் ஏற்படும் இயற்கையான நீரோட்டங்களுக்கு ஓடைகள் என்றும், காட்டாறுகள் என்றும் சிற்ருறுகள் என்றும் அந்நீரோட்டங்களின் தரங்களுக்கேற்ப வேறு வேறு பெயர்கள் மொழியில் வழங்கி வருகின்றன. இதே போலச் செயற்கையாக ஏற்படுத்தப்படும் நீரோட்டங்களும், கால், கால்வாய், வாய்க்கால் வெள்ளக்கால் என அவற்றின் அளவுகளுக்கேற்ப மொழியில் வேறு படுத்தப்படுகின்றன.

உலகின் பல பகுதிகளிலும் தோன்றிய நாகரிகங்களுக்கெல் லாம் ஆறுகளே தொட்டில்களாக விளங்கி வந்திருக்கின்றன. அதனல் தான் மனித நாகரீகத்தின் படைப்பான இலக்கியத்திலும் ஆறுகள் முக்கிய இடம் பெறுகின்றன. ஒரு நாட்டை ஆறுகளே தாயாகிக் காக்கின்றன என்று இலக்கியங்கள் புகழ்கின்றன [காவிரி புரக்கும் நாடு (புறம்.393: 23), வளநாடு மகவாய் வளர்க்கும் தாய் காவிரி (சிலப்பு. கானல். 28)]. மக்கள் வாழ்க்கையின் பின்புலமாகி வருணணை நிலையிலும், ஆதாரமாகி வாழ்த்து நிலையிலும் ஆறுகள் இலக்கியங் களில் பாடப்பட்டன. இலக்கியங்களில் காணப்படும் ஆற்றுவரி, ஆற்றை ஒருறுப்பாகக் கொண்ட தசாங்கம், பள்ளு இலக்கியத்தில் வரும் ஆற்றுவரவு, ஓடப்பாட்டு ஆகியன ஆற்றைச் சார்ந்து எழுந் தனவாகும். இவையேயன்றி ஆறுகளைப் பற்றிய கதையை விரித் துரைக்கும் புராண நூல்களும் எழுந்துள்ளன.

சிற்றம்பல முனிவர் காவிரியாற்றைப் பற்றி (1) பிரமவை வர்த்த புராணம் என்னும் காவிரிப் புராணம் (2) பொன்னிச் சிந்து

மான்மிய புராணம் என்ற இரண்டு புராணங்கள் பாடியிருக்கிறார்[1]. காவிரி ஆற்றைப் பற்றி இன்னும் காவேரித் தீர்த்த மான்மியம், துலாகாவேரி புராணம், துலா காவேரி மகாத்மியம், காவேரியாற்றுக் கல்லணை ஆகிய நூல்களும் காணப்படுகின்றன[2]. இதே போலத் தாம்பிரபரணி நதியைப் பற்றித் தாமிரபரணி மகாத்மியம், பொருனை மாதாவின் ஸ்தலபுராணம், தாம்பிரபரணி ஸ்தலபுராணம், தாம்பிர

---

1. A Descriptive catalogue of Tamil Mss.,Dr. U. V. Swaminatha Iyer Library, Vol. II, No. 469, 470 (1961)
காவேரிப்புராணம் (பிரமகைவர்த்தம்). திருச்சிற்றம்பல முனிவர், 'காவேரி மான்மியம்', 'பிரமகைவர்த்த புராணம்' என்று நூலினுள் பெயர் தரப்பட்டுள்ளது. பாயிரப் பகுதியின் பின் 36 அத்தியாயம் கொண்டது.
சுப்பைய தேசிகர், பொய்கை நல்லூர். ' விவேக சந்திரோதய அச்சக் கூடம், தக்கோலம், 1871.

2. காவேரித் தீர்த்த மான்மியம். அருணசல சுவாமிகள், வேலமா நகரம். காவிரி நதியின் புராணப் பெருமையைச் சூத பௌராணிகர் நைமி சாரண்ய முனிவர்களுக்குச் சொல்லும் பாவனையாக இயற்றப்பெற்றது. காவிரியின் பெருமை குறித்து நாத நாமக் கிரியை இராகத்தில் அமைந்த கீர்த்தனை ஒன்றும், நொண்டிச்சிந்துப் பாடல் ஒன்றும் ஆக இரண்டு இசைப்பாடல்கள் இதில் உள்ளன.
சுந்தரராஜுலு நாயுடு, சென்டிரல் பிரஸ், ஈரோடு, 1910.
துலாகாவேரிப் புராணம்: சடகோபாசாரியார், கந்தாடை, துலாகாவேரி நீராடலின் சிறப்புக்களைக் குறித்து எழுந்த பல பழங்கதைகளின் தொகுப்பு. ரிப்பன் பிரஸ், திருச்சி, 1889.
துலாகாவேரி மகாத்மியம்: துரைச்சாமி ஐயர். எஸ்., திருநெல்வேலி. துலாகாவேரி மகாத்மியம் ஆக்கினேய புராணத்தில் உள்ளது. காவேரி ஸ்தானத்தால் பேறு பெற்றோர் வரலாறுகள் பல உள்ளன. 30. அத். பெசல. நம்மாழ்வார் செட்டியார், வெ. நா., ஜுபிலி பிரஸ், சென்னை, 1910.
காவேரியாற்றுக் கல்லணை: A Triennia Catalogue of Mss, (Tamil), Vol. III pt, 2R. No. 343-b (1922). Madras Govt. Oriental Mss. Library, Madras.

பரணிப் புராணம் ஆகியன காணப்படுகின்றன[3]. பெண்ணை நதி பற்றிப் பிநுகி என்னும் பெண்ணை நதிப் புராணம் என்ற நூல் இருப்பது குறிப்பிடத் தக்கது[4]. சுரபிநதி வரலாறு என்ற நூல் ஓர் ஆற்றைப் பற்றிய நூல் என்று தெரிகிறது[5].

தற்காலத்திலும் ஆறுகளைப் பற்றிய தனி நூல்கள் எழுந்த வண்ணம் இருக்கின்றன. கோபாலய்யருடைய காவேரி ரஹஸ்யம், டாக்டர். மா.இராசமாணிக்கனாரின் பொருநை, சரஸ்வதி ராமநாத்தின் காவேரியின் கதை (1967), உதகை பொன்னழகனின் ஆடிவரும் காவேரி (1969), சிட்டியும் ஜானகிராமனும் சேர்ந்தெழுதிய நடந்தாய் வாழி காவேரி (1971) ஆகியவை காவேரியைப் பற்றி இக்காலத்தில் எழுந்த நூல்களாகும்.

ஆறுகளின் வருணனைகளை இலக்கியத்திற்கு முன்பாக முதன் முதலில் அவற்றின் பெயர்களிலேயே காண்கிறோம். பழைய ஆற்றுப் பெயர்கள் பலவும் வருணனைப் பெயர்களாகவே இருக்கின்றன. மனித நாகரிக வரலாற்றில் மனிதன் பெயரிடத் தொடங்கிய முதல் வரிசைப் பொருட்களில் ஆறும் ஒன்று. எனவே தமிழக ஆற்றுப் பெயர்களை ஆராய்ந்தால், தமிழ் மக்கள் பண்டிருந்து ஆற்றை நோக்கியவிதத்தைக் கண்டறியலாம்.

---

3. தாமிரபரணி மகாத்மியம்: A Descriptive Catalogue of Tamil Mss Vol. VII, D. No. 2821, Madras Govt. Oriental Library, Madras
பொருனை மாதாவின் ஸ்தலபுராணம் – தாமிரபரணி ஸ்தல புராணம். பாட்டும் உரையும் குறுக்குத்துறைப்பதிகமும் இதில் உள்ளது. விசயலட்சுமி விலாச அச்சியந்திர சாலை, பாளையங் கோட்டை, 1895.

தாம்பிரபரணிப்புராணம்: சங்கரலிங்கம் பிள்ளை, 1868. தாம்பிர பரணி நதியின் சிறப்புக்களைக் கூறுவது.

4. பிநுகி என்னும் பெண்ணை நதிப் புராணம்; கனக சபை ஐயர். சாமிமலை. பெண்ணை மாநதிப்புராணம் என வழங்கும். 18 படலம். பச்சைக் கந்த சாமிகள். சென்ட்ரல் பிரஸ், சென்னை.

5. சுரபி நதி வரலாறு – A descriptive Catalogue of Tamil Mss. Vol XI. D. No. 3250 & 3863. Madras Govt. Oriental Mss. Library, Madras.

பண்டைக் காலத்தில் தமிழகத்தில் மக்கள் பேராறுகளின் கரைகளில் குடியிருந்ததால் பண்டைய இலக்கியங்கள் சில பேராறுகளையே குறிக்கின்றன[6]. பேராறுகள் தவிர்ந்த சிற்றாறுகள், ஓடைகள் முதலியன சிறப்புப் பெயர் எதுவும் இன்றிப் பொதுப் பெயராலேயே அழைக்கப்பட்டன. ஆனால் பிற்காலத்தில் மக்கட் பெருக்கத்தாலும், குடியேற்றங்களினாலும் புதிய பிரதேசங்களைக் கண்ட போது அங்கிருந்த புதிய ஓடைகள், ஆறுகள் எல்லாவற்றுச்கும் சிறப்புப் பெயர் கொடுத்தனர்.

ஒரே ஆற்றுக்குப் பல பெயர்கள் வழங்கி வருவதை நாம் பார்க்கிறோம். இதற்கு முதற் காரணம், ஆறுகள் பல மொழி, நாட்டுப் பிரதேசங்கள் வழியாகப் பாய்ந்து செல்வதால் அவை அவ்வப் பிரதேச மக்களால் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டமை; இரண்டாவது காரணம், அக்கால மக்களுக்கு விரிந்த பூகோள அமைப்பைப் பற்றிய அறிவின்மையால் ஒரே ஆற்றின் பல பகுதிகளுக்கும் ஒரே ஆறு என்ற அறிவின்றி, அவ்வவ்விடத்தின் இயல்பு நோக்கிப் பல பெயர்கள் கொடுத்திருந்தமை. ஆனால் காலப்போக்கில் ஏதாவது செல்வாக்கின் காரணமாக ஓர் ஆற்றுக்கு ஒரு பெயர் மட்டும் பெருவழக்குப் பெற்றது. செயற்கையான நீரோட்டங்களுக்குப் பிற்காலத்தில் புதிய பெயர்கள் சூட்டப்பட்டன. ஒலி மாற்றங்களாலும், பல பழைய பெயர்கள் புதிய வடிவமும் ஏற்று, புராண, நாடோடிக் கதைகளும் பெற்றன.

தமிழகத்தில் ஓடைகள், கால்வாய்கள் ஆகிய நீரோட்டப் பெயர்கள் சுமார் 340 தற்போது வழக்கிலிருக்கின்றன[7]. கல்வெட்டுக்கள், இலக்கியங்கள் ஆகியவைகளில் இன்னும் அதிகமான பெயர்களும் மாற்று வடிவங்களும் காணப்படலாம். இங்கு வழக்கிலிருக்கும் பெயர்கள் மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

---

6. ரிக்வேதம் 99 ஆற்றுப்பெயர்களையும் மகாபாரதம் 167 ஆற்றுப் பெயர்களையும், மார்க்கண்ட புராணம் 90 முக்கிய ஆற்றுப்பெயர்களையும் (இவைபோக ஆயிரக் கணக்கான சிற்றாறுகள்) குறிக்கின்றன. மெகஸ்தனிஸ் இந்தியாவில் 39 ஆறுகளையும், டாலமி 44 ஆறுகளையும் அறிந்திருந்தனர். சங்க இலக்கியம் சுமார் 18 ஆற்றுப் பெயர்களைக் குறிக்கிறது. அது போகச் சுமார் 8 ஊர்ப் பெயர்களும் ஆறு என்ற விகுதியோடு முடிகின்றன.

7. ஆற்றுப் பெயர்கள் திரட்டுவதற்கு ஆதாரமாயிருந்த நூல்களின் விவரத்தை நூலடைவில் காண்க.

தமிழ் நாட்டு ஆறுகள், ஆறு, நதி, மதி, மகாநதி, புழா, ஹள்ளா ஆகிய பொதுப் பெயர்களால் அழைக்கப்படுகின்றன. அடுத்த நிலையிலுள்ள சிறிய நீரோட்டங்கள் ஓடை, கரை, பள்ளம் என வழங்கப்படுகின்றன. ஏரி, தீர்த்தம் என்பனவும் சில ஆறுகளுக்குப் பெயராய் வழங்குகின்றன. செருநாதக் காவேரி, நரசிங்கக் காவேரி என்ற பெயர்களில் காவேரி என்ற சொல்லே ஆறு என்ற பொருளில் வழங்குகிறது[8]. செயற்கை நீரோட்டங்கள் கால், கால்வாய் வாய்க்கால் என வழங்கப்படுகின்றன.

ஆறுகளின் அடைகள் அல்லது சிறப்புக் கூறுகளை வகைப் படுத்தும்போது அவற்றிற்கு ஏற்பட்ட பெயர்களின் காரணத்தை அறிய முடிகிறது. சுமார் பதினேரு வகைக் காரணங்களின் அடிப் படையில் ஆறுகளின் பெயர்கள் ஏற்படுகின்றன.

*1. ஆறுகள் தோன்றுமிடத்தால் பெயர் பெறல்:* **(21)**

ஆறுகள் உற்பத்தியாகும் மலை, கயம், காட்டுப்பகுதி, அருவி ஆகிய காரணங்களால் பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. கால்வாய் அல்லது வாய்க்கால்கள், அவை பிரியும் ஆறுகளின் பெயரால் அழைக்கப் படுகின்றன.

(எ–டு):

அருவியாறு (திரு.)
இடமலை ஆறு (கோ.)
ஐந்தருவி ஆறு (திரு.)
கயத்தாறு (திரு.)
கஜநதி
கஜத்தார்
உப்போடை
கல்லணைக் கால்வாய் (தி.)
காட்டாறு (தி.)
கானல் ஓடை (இரா.)
குளக்கும்பை ஆறு (நீ.)
மலை
கொடமலையார் (திரு.)

கொள்ளிடம்
சுருளியார் (ம.)
சுவர்ணகிரி ஆறு (திரு.)
செஞ்சி ஆறு (தெ.ஆ.)
சோலையாறு (கோ.)
ஸ்வாமி முடியார் (கோ.)
நொய்யல்
புஞ்சைத் தலையார்
கால்வாய் (கோ.)
பெண்ணையார்
வாய்க்கால் (தர்.)
பைக்காரா ஆறு (நீ.)
போதமலையார் (வ.ஆ.)
(மேல்மலையனூறு ஏரி) (வ.ஆ.)

---

8. இதே போல வடமொழியிலும், சரஸ்வதி, கங்கை போன்ற ஆற்றுப் பெயர்களே ஆறு என்ற பொதுப் பொருளில் வழங்கு கின்றன.

வடமலையார் (திரு.)

வண்ணாற்றங்கரைப் பள்ளம் (கோ.)

## 2. ஆற்றின் இயல்பால் பெயர் பெறல் : (65)

ஆற்றின் அழகு, அதில் நீர் இல்லாமை, ஆற்று நீரின் சுவை நிறம் ஆகியவை காரணமாக ஆற்றுப் பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன.

### (அ) ஆற்றின் பொது இயல்பு: (4)

ஐயாறு (தி.), செய்யாறு (வ.ஆ.), நல்லாறு (கோ.), வைப்பாறு (த.) ஆகிய பெயர்கள் ஆற்றின் அழகு காரணமாகப் பெற்ற பெயர்களாகும்.

### (ஆ) ஆற்று நீரின் இயல்பு

#### (1) *நீரின்மை*; (6)

நீரில்லாத ஆறுகள் மலட்டார் (2. திரு., தெ. ஆ.), வரட்டாறு (3 சே., திரு., ம.), வரட்டுக்கரை (கோ.) போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டன. தமிழகத்தில் 2 மலட்டாறுகளும் 3 வரட்டாறுகளும் காணப்படுகின்றன.

#### (2) *நீரின் சுவையும் நிறமும்*; (38)

ஆற்று நீரின் சுவை காரணமாக ஓர் ஆறு அமுதநதி என்று அழைக்கப்பட்டது. உப்புச் சுவையுள்ள நீர் வரும்ஆறுகள் உப்பனாறு (4), உப்பாறு (3), உப்போடை (2) என்று அழைக்கப்பட்டன. ஆற்று நீரின் இயல்பு நோக்கிப் பால் ஆறு, வெண்ணெ ஆறு, நெய் ஆறு, தேன்ஆறு எனவும் ஆறுகள் அழைக்கப்பட்டன. ஆற்று நீரின் நிறம் நோக்கிக் கருப்பு, பச்சை, பொன், மஞ்சள் என வேறுபடுத்தப்பட்டன. ஆறுகள் கடந்து வரும் நிலம் அல்லது பாறைகளின் நிறம் காரணமாக ஆறுகளுக்கு இவ்வண்ணங்கள் ஏற்பட்டிருக்க வேண்டும். இவ்வகையில் பெயரமைந்த ஆறுகளின் பட்டியல் வருமாறு:

அக்கினியார் (தி.)

அமுதநதி (கோ., திரு)

பவானியின் அந்தர் வாகினி

அமுத கண்ணீர்ஆறு(திரு.)

உப்பனாறு (4.கோ.,த.,தெ.ஆ.2.)

உப்பாறு (3.இரா., கோ.2)

உப்போடை (2 இரா.,தி.)

கண்ணாடியார் (திரு.)
கருப்பாறு
கருவட்டார் (தி.)
காரியாறு (திரு.)
சுவேதநதி (சே.)
வெள்ளாறு
தெள்ளாறு (செ.)
தென்பெண்ணை
தேனார் (இரா.)
தேனியாறு (ம.)
நீராறு (கோ.)
நெய்யாறு (க.)

பச்சையாறு (திரு.)
பாலாறு (3 இரா.,திரு.)
பொன்னார் (சே.)
பொன்னி
காவேரி
பொன்னை (தெ.ஆ.)
பெண்ணை?
மஞ்சளார் (2.ம.)
வெண்ணாறு (த.)
வெள்ளாறு (3)
(சே.,த.,தி.)
வெள்ளியாறு (திரு.)
வெள்ளையாறு (செ.)

(3) *நீரின் அளவும் அலையும்* : (3)

நீரின் அளவைக் குறிக்கும் பஃறுளி என்பது பண்டு ஆற்றிற்குப் பெயராய் வழங்கிப் பின் அது பரளியார் (2.இரா.,க.) எனத்திரிந்தது. அலை பொங்கும் ஆறு, பொங்கும் அலை ஆறு (திரு.) என அழைக்கப்பட்டது.

**(இ) ஆற்றின் படுகையால் பெயர் பெறல்: (ஆழம், கரை, உள் நிலம், பாறை, மணல் முதலியன) : (15)**

ஆற்றுப் படுகையின் ஆழம், கரையின் இயல்பு, அதில் காணப் படும் பாறை, உள்நிலம், மணல் ஆகியவற்றாலும் ஆறுகள் பெயர் பெற்றிருக்கின்றன. ஆழமான ஆறு குண்டாறு (3) என அழைக்கப் பட்டது. ஆழமான ஓடை கெடிலம் எனப்பட்டது. இரட்டையாக வந்திணையும் கால்வாயும் பள்ளமும் முறையே இரட்டைக் கரைக்கால் இரட்டைப்பள்ளம் என அழைக்கப்பட்டன. ஆற்றுப்படுகை களராக இருந்ததால் களரியாறு என ஒர் ஆறு அழைக்கப்பட்டது. ஆற்று மணல் உமியைப்போல் இருந்ததால் உமியாறு என்று ஒன்று அழைக் கப்பட்டது. ஆற்றுப்படுகையில் கல் அல்லது பாறைகள் அதிகமாகக் காணப்படுகிற ஆறு கல்லாறு எனப்படுகிறது. தமிழகத்தில் 5கல்லாறு கள் காணப்படுகின்றன. இவ்வாறு ஆற்றுப் படுகையில் பாறைகளும் கற்களும் அதிகமாகக் காணப்படுவதற்கு ஆற்றின் அரிக்கும் ஆற்றலும் நிலத்தின் இயல்புமே காரணமாக அமைகின்றன. "கடினமான பாறைகளும் மிருதுவான பாறைகளும் உள்ளநிலத்தில் ஆற்றுநீர்

மிருதுவான பாறைகளை எளிதில் அரித்துவிடுகிறது. கடினமான பாறைகள் சிறிதே அரிக்கப்படுகின்றன. அரிக்கப்படாத கடினப் பாறைகள் தொடர் குன்றுகளாகத் தோற்றமளிக்கின்றன. ஆற்றினல் "அரிக்கப்படாமல் உயர்ந்து நிற்கும் கடினப் பாறைகளுக்கு 'அரிப்புக் குன்றுகள்'," எனப் பெயரிடுவர் புவியியலார் 9. தமிழகத்தில் காணப் படும் கல்லாறுகளில் இவ்வகை அரிப்புக் குன்றுகளையே காண்கிறோம்.

இரட்டைக்கரைக்கால் (க.)
இரட்டைப்பள்ளம் (கோ.)
(இருட்டு–)
உமியாறு (திரு.)
கல்புழா (நீ.)
கல்லாறு (5)
(கோ.,செ.,தி.,தெ.ஆ.,நீ.)
களரியாறு (திரு.)
குண்டாறு (3)
(இரா., தி., ம.)
சின்னக்கரை ஆறு (தி.)
பைக்காரா ஆறு (நீ.)
(வண்ணாற்றங் கரைப்பள்ளம்)
(கோ.)

(3) *ஆற்றின் போக்கால் பெயர் பெறல்:* (10)

வளைந்தும் நெளிந்தும், நேராகவும் செல்லும் ஆற்றின் போக்கிற் கேற்ப அவை பெயர் பெறுதலும் உண்டு. (1) ஆற்றில் வரும் நீரின் அளவு (2) வேகம் (3) நிலத்தின் வாட்டம் அல்லது சாய்மானம் (4) பாறையின் தன்மை (5) ஆற்று நீர் வண்டலின் அளவு ஆகிய வற்றைப் பொறுத்து ஆற்றோட்டத்தின் போக்கு அமையும். அரிக்கும் ஆற்றல் சிறிதே பெற்றுள்ள ஆறுகள் தம் போக்கினை வளைவுகள் பல கொண்டதாக மாற்றிக் கொள்கின்றன. பாம்பைப்போல நெளிந்து போவதால் நான்கு ஆறுகள் பாம்பாறு என அழைக்கப்படுகின்றன. வேகமான ஆறு வேகவதி எனப்பட்டது. (மேலும் விலங்குப் பெயரால் பெயர் பெறல் என்ற பகுதியைப் பார்க்கவும்.)

ஓடம்போக்கி (த.)
குடமுருட்டி (த.)
சுருளியார்? (ம.)
[சுள்ளன் (த.)]
[பம்பை (2.திரு.,தெ.ஆ.?)]
பாம்பாறு (4.சே.,தி.,திரு.,ம.)
[மத்தளப்பள்ளம் (சே.)]
முடங்கியார் (இரா.)
விரிசூலி ஆறு (இரா.)
விரிசுழி?
வேகவதி (செ.)

---

9. எஸ். வைத்தியலிங்கம், உலகமும் நமது நாடும் (புவியியல்), (1968) பக். 48 – 49.

(4) *ஆற்றில் விளையும் பொருளால் பெயர் பெறல்:* (24)

ஆற்றுப் படுகைகளிலும், கரைகளிலும் அதிகமாகக் காணப்படும் பொருள்களாலும் ஆறுகள் பெயர் பெறுதல் உண்டு. ஆற்றில் முத்தும் மணியும் காணப்பட்டதால் மணிமுத்தாறு என்றும், கிளிஞ்சல் காணப் பட்டதால் கிளிஞ்சியாறு என்றும் ஆறுகள் அழைக்கப்பட்டன. கரையில் காஞ்சி, பாலை, புன்னை, மருதம், வஞ்சி முதலிய மரங்கள் காணப்பட்ட தால் அவ்வாறுகள் முறையே காஞ்சியாறு, பாலையாறு, புன்னைப் புழா, மருதையார், வஞ்சியாறு என்று அழைக்கப்பட்டன. ஆற்றில் காணப் பட்ட தாமரை, முல்லை, முள்ளி, கோரை, சங்கஞ்செடி ஆகியவற்றாலும் ஆறுகள் பெயர் பெற்றன.

| | |
|---|---|
| கருமணியார் (திரு.) | திருமணிமுத்தார் (சே.) |
| காஞ்சி மகாநதி (கோ.) | நங்காஞ்சியாறு (கோ.) |
| காஞ்சியாறு (கோ.) | பூவானி (> பவானி) (கோ.) |
| கிளிஞ்சியார் (தெ.ஆ.) அல்லது சுண்ணும்பார் | பாலையாறு (சே.) |
| | புன்னைப்புழா (நீ.) |
| கீழ்மணிமுத்தார் (திரு.) | மணிமுத்தா நதி (சே) |
| குமுகிமணி ஆறு (த.) | மணிமுத்தார் (2.இரா.,திரு.) |
| கோரையாறு (4) (த.,தி.,திரு.,ம.) | மருதையார் (தி.) |
| | முல்லையாறு (ம.) |
| சங்கன் பள்ளம்? (கோ.) | முள்ளியாறு (த.) |
| தாமரையார் (திரு.) | வஞ்சியாறு (த.) |

(5) *ஒப்பு நோக்கால் பெயர் பெறல் :* (28)

ஆறுகள் அண்மையிலுள்ள ஆறுகளோடு ஒப்பிடப்பட்டு அவற் றின் சிறுமை, பெருமை, புதுமை, பழமை, இருக்கும் திசை இவை களின் அடிப்படையில் பெயரிடப்பட்டிருக்கின்றன. இவ்வகைப் பெயர்கள் பெரும்பாலும் பெயர்கொடுத்த மக்களின் குறுகிய பூகோள அறிவையே காட்டி நிற்கின்றன. உதாரணமாக ஒரே பகுதியில் பல சிற்றாறுகளும், பெரியாறுகளும் காணப்படுவதைப் பார்க்கலாம். தமிழகத்தில் 2 சிற்றாறுகள், 3 பெரியாறுகள் காணப்படுகின்றன. இரண்டு காஞ்சியாறுகளில் ஒன்று நங்காஞ்சி (நன்காஞ்சி) என அடை கொடுத்து வேறுபடுத்தப்படுகிறது. இப்பிரிவைச் சேர்ந்த ஆறுகளின் பெயர்கள்;

உள்ளாறு (2.த., திரு.)?
கீழாறு (Kilar) (திரு.)
கோடாறு? (கோ.)
(கல்வெட்டுப்பெயர்–
வெள்ளகோவில்)
சிக்மோயார் (நீ.)
சித்தார் (திரு.)
சிற்றாறு (2.கோ.,தி.)
சிற்றாறு பட்டணங்கால் (க.)
சின்னாறு (3.சே,கோ.,தி.)
தெற்கார் (இரா.)
தென் பெண்ணாறு (2.சே.,வ.ஆ.)
நங்காஞ்சியாறு (ம.)
நட்டாறு (த.)
நள்ளாறு (2.கோ.,த.)
பழங்காவேரி (த.)
பழவாறு (த.)
பழையாறு (2.க.,திரு.)
புத்தாறு (த.)
பெரியாறு (3)
(கோ.,2.ம.)
மேவானி (கோ.)
வடவார் (2.த.,தெ.ஆ.)

6. *விலங்கு, பறவைப் பெயரால் பெயர் பெறல்:* (16)

விலங்குகள், பறவைகளின் பெயராலும் சில ஆறுகள் பெயர் பெற்றிருக்கின்றன. ஆறுகளின் அமைப்பு, போக்கு முதலியவை சில விலங்குகளை ஒத்ததால் இப்பெயர் பெற்றிருக்கலாம்; அல்லது ஆறுகள் பாயும் பகுதிகளில் அதிகமாகக் காணப்பட்ட விலங்கு பறவைகளால் பெயர் ஏற்பட்டிருக்கலாம். பாம்பாறு (4) என்பது பாம்புபோல் நெளிந்தோடும் இயல்பால் பெற்ற பெயராக இருக்கலாம் என்பதை முன்னமே கண்டோம். (ஆற்றின் போக்கால் பெற்றபெயர் என்ற தலைப்பைக் காண்க.) இதேபோலக் குதிரைபோலக் குதித்து விரைந்து செல்லும் ஆறு குதிரையாறு எனப் பெயர் பெற்றிருக்கலாம். ஆ, எருமை, காகம், கிளி, நந்தி, மயூரம், வராகம் ஆகிய விலங்குகளாலும் ஆற்றுப் பெயர்கள் தோன்றியுள்ளன. வராக நதி என்ற பெயர் 4 ஆறுகளுக்குப் பெயராயமைகிறது.

ஆன்யாறு (கோ.)
ஆன்பொருநை (கோ.)
(அமராவதி)
ஏமெருமைப்பள்ளம் (கோ.)
(ஏழுமலைப்பள்ளம் (கோ.)
காகநதி (திரு.)
கிளியார் (செ.)
குதிரையார் (கோ.)
நந்தியார் (தி.)
பாம்பாறு (4)
(சே., தி., திரு., ம.)
மயூரநதி (சே.)
வராக நதி (4)
(திரு., தெ.ஆ.,ம.,வ.ஆ.)

## (7) ஆட்பெயரால் பெயர் பெறல்: (51)

தமிழகத்தில் ஆட்பெயரால் பெயர் பெற்ற ஆறுகளே அதிகம் காணப்படுகின்றன. அனுமன், அர்ஜுனன், இராமன், கோதண்டராமன், ஜம்பு, பாண்டவன், பீமன், விஜயன் போன்ற இதிகாச நாயகர் பெயர்களும், கௌடன்யர், சண்முகர், சனத்குமாரர், சொக்கர், (நிக்ஷேபன்), மகேந்திரன், மார்க்கண்டன், முசுகுண்டன், வசிட்டர் முதலிய புராணப் பெயர்களும், அனந்தன், உய்யக் கொண்டான், கண்ணன், கன்னடியன், காடுவெட்டி, கோதை, சோழசுதா, சோழ சிகாமணி, திருமலைராஜன், மதுராந்தகன், மந்திரி, முடிகொண்டான், விக்கிரமன், வீரசோழன் போன்ற வரலாற்றுத் தலைவர்கள் பெயர்களும் ஆறுகளுக்குப் பெயர்களாக இடப்பட்டிருக்கின்றன. இவற்றில் இதிகாச, புராணப் பெயர்கள் மக்களின் நாடோடிக்கதை, புராணக் கதை மரபுகளிலிருந்து கிளைத்த பெயர்களாகும். மூன்றுவது வகையைச் சேர்ந்த வரலாற்றுப் பெயர்கள், வரலாற்றுக் காலத்தில் செயற்கை நீரோட்டங்கள் முதலியனவற்றிற்கும், பழைய ஆறுகளுக்கும் வேண்டுமென்றே கொடுக்கப்பட்ட புதிய நினைவுப் பெயர்களாகும். எப்படியிருந்த போதும், இம்மூவகைப் பெயர்களும் ஆறுகளுக்கு முன்பிருந்த பெயர்கள் ஒலி மாற்றத்தாலும் பிற காரணங்களாலும் மாறிய பிறகு மாற்றுப் பெயர்களாகவோ அல்லது புதிய பெயர்களாகவோ பிற்காலத்தில் வழக்கிற்கு வந்தவையாக இருத்தல் வேண்டும்.

அனுமன் நதி (திரு.)
அர்ஜுனநதி (இரா.)
அனந்தனுர் கால்வாய் (க.)
இராமநதி (திரு.)
உய்யக்கொண்டான் ஆறு (தி.)
கண்ணனுறு (த.)
(கண்ணுறு?)
கரைப்போத்தனுர் (சே.]
கரைப்பத்தனுர்
கருவேட்டனுறு
கன்னடியன் கால் (திரு.)
காடு வெட்டியாறு (செ.)
காலியனோடை (த )
குழகனுறு (கோ.,தி.)
கொடகனுறு (ம.)
கொடவனுறு
கொரங்கன்பள்ளம் (கோ.)
கோதண்டராமநதி (திரு.)
கோதையாறு (க.)
கௌண்டநதி (இரா.)
கௌடன்ய நதி (வ.ஆ.)
கௌரி முலுஹள்ளா (நீ.)
(சங்கன் பள்ளம்) (கோ.)
சண்முகநதி (சே.)
சரபங்கநதி (சே.)
சனத்குமார நதி (சே.)
ஜம்புநதி (திரு.)
சேர்வையாறு (திரு.)

சொக்கன் ஓடை (இரா.)
சோழசுதா மள்ளாறு (த.)
திருமலைராஜன் (த.)
தெற்கு ராஜ வாய்க்கால் (த.)
நம்பியார் (திரு.)
நரசிங்கக் காவேரி (த.)
நல்லதங்காள் ஓடை (கோ.)
நாராயணக்காவேரி (இரா.)
நிக்ஷேப நதி? (திரு.)
பறவனாறு (தெ. ஆ.)
பாண்டவயாறு (த.)
பீமனோடை (த.)
மகேந்திர நதி (செ.)
மதுராந்தக வடவாறு (த.)
மந்திரி ஓடை (இரா.)
மார்க்கண்ட நதி (சே.)
முசுகுண்ட நதி (தெ.ஆ.)
முடிகொண்டான் (த.)
(மேல்மலையனூறு ஏரி) (வ.ஆ.)
வசிட்ட நதி (சே.)
வள்ளியாறு (2. க.,சே.)
விக்கிரமனூர் (த )
விக்கிரமசோழப் பேராறு
விஜயநதி (இரா.)
வீரசோழவடவாறு (த.)
வீரசோழனூர் (த.)
வைரவன் ஓடை (ம.)
(ஸ்வாமி முடியார்) (கோ.)

**8. ஊர்ப்பெயரால் பெயர் பெறல்: (48)**

முன்பே குறிப்பிட்டபடி ஆறுகள் பல பிரதேசங்கள் வழியாகச் செல்லும்போது அவ்வப் பிரதேச மக்கள் வெவ்வேறு பெயர்களால் அழைத்தனர். ஓர் ஊரைக் கடந்து செல்லும்போது ஓராறு அவ்வூரின் பெயரால் அப்பகுதி மக்களால் அழைக்கப்பட்டது. உதாரணமாகக் கன்னியாகுமரி மாவட்டத்தில் ஓடும் தாமிரபருணி என்ற ஆறு குழித்துறை ஆறு என்றும் ஊர்ப்பெயரைச் சார்த்தி அழைக்கப்படுகிறது. இதே போலச் சேலம் மாவட்டத்தில் சரபங்க நதியுடன் சேரும் கிளை ஆறு ஒன்று கூட்டாறு என்றும், மேற்காறு என்றும், பட்டிப்பாடி ஆறு என்றும், பறையங்குழி ஆறு என்றும் அது ஓடும் ஊர்களை ஒட்டி அழைக்கப்படுகிறது. அவ்வகையில் ஓர் ஆறு ஒவ்வொரு ஊரைக் கடந்து செல்லும் போதும் அவ்வூரை ஒட்டிப் பெயர் பெறும், அவ்வூரைக்கடந்தால் அப்பெயர் மாறிவிடும்.

அச்சன் கோயிலாறு (திரு.)
அரசலாறு (த.)
அரிசிலாறு
அரியாங்குப்பம் ஆறு (தெ.ஆ.)
ஆரணியாறு (செ.)
ஆளியார்
துணைக்கடவு ஆர் (கோ.)
ஏழூர் ஆறு (சே.)
கஞ்சம்பட்டி ஓடை (இரா.)
கட்டி ஓடை (நீ.)
கடுவாயாறு? (த.)
கடுவையாறு
கண்டைபள்ளம் (கோ.)
கம்பைய நல்லூர் நதி (சே.)

கயக்குடியார் (இரா.)
குசன் குழியாறு (திரு.)
(கூசன்)
குந்தா ஆறு (நீ.)
குளிரத்தி ஆறு (திரு.)
குன்னூர் ஆறு (நீ.)
கோட்டக்கரையாறு (இரா.)
கோம்பையாறு (திரு.)
கோவிலாறு (வ.ஆ.)
சங்கிலிப்பாளையம் ஆறு (திரு.)
சாந்தூர் ஆறு (சே.)
சீகூர் ஆறு (நீ.)
சூரப்பள்ளி ஓடை (சே.)
செஞ்சி ஆறு (தெ.ஆ.)
செந்தூரணி ஆறு (திரு.)
செல்லக்குட்டப்பட்டி ஆறு
கால்வாய் (சே.)
தர்மபுரி ஆறு (சே.)
திருத்தணி ஆறு (செ.)
தீர்த்தக்கரை ஆறு (திரு.)
தேனி ஆறு (ம.)
தொப்பூர் ஆறு (சே.)
வேப்பாடியாறு
நாகரி ஆறு (செ.) (நகரி)
பட்டிப்பாடி அல்லது பறையங்குழி
ஆறு அல்லது Ghat ஆறு அல்லது
மேற்கு ஓமலூர் ஆறு (சே.)
படவேட்டாறு (வ.ஆ.)
படவீட்டாறு
பத்மநாபபுரம் புத்தனூர்
கால்வாய் (க.)
பர்கூர் ஆறு (சே.)
பரம்பிக்குளம் சாலக்குடி ஆறு
(கோ.)
பரம்பிக்குளம் ஆறு (கோ.)
பாமணி ஆறு (த.)
பாம்பணி/பாமினி
புங்கப்பட்டி ஆறு
கால்வாய் (தா.)
பூண்டியாறு (கோ.)
பெரும்பாலையாறு (சே.)
மல்லியகர ஆறு (சே.)
மன்னார்கோட்டை நதி (இரா.)
மாத்தூர் ஆறு (சே.)
ராஜாமடம் வாய்க்கால் (த.)
வட்டமலை ஆறு (கோ.)
நிழலிக்கரை, வட்டமலைக்கரை
[வடமலையார் (திரு.)]
[வண்ணாற்றங்கரைப்
பள்ளம் (கோ.)]
ஸ்ரீவலப்பேரி ஆறு (இரா.)

(9) செயற்கையாக வெட்டப்பட்டதால் பெயர் பெறல்: (5)

ஆறுகளை இணைக்கின்ற முறையிலும், கால்வாய் வடிவத்திலும் செயற்கையாக வெட்டப்பட்டவையும் ஆறுகள் என்ற பெயரில் அழைக்கப்படுகின்றன. உள்ளாறு (3. த., தி., திரு.), கண்ணாறு (கண்ணாடியார்) (திரு.), கோட்டாறு, வெட்டாறு (த.) முதலியன இவ்வகையில் தோன்றிய பெயர்களாகும்.

**(10) புராணக்கதை நிகழ்ச்சிகளால் பெயர் பெறல் : (8)**

புராணக் கதை மாந்தர்களின் பெயர்கள் மட்டுமின்றி, புராணக் கதை நிகழ்ச்சிகளில் வரும் பொருட்களின் பெயர்களும், ஆற்றுப் பெயர்கள் தோன்றக் காரணமாய் அமைந்திருக்கின்றன. இவ்வகையில் சுமார் எட்டுப் பெயர்கள் காணப்படுகின்றன. இவற்றில் சில மூலத் தமிழ்ப் பெயரின் தவறுன சமஸ்கிருத மொழி பெயர்ப்பாக இருக்கலாம் (ஆட்பெயரால் பெயர் பெறல் என்ற பகுதியைப் பார்க்கவும்). எல்லாவகைப் பெயர்களிலும் பிற்காலத்தில் நிகழ்ந்த சமஸ்கிருத மாக்கல் என்ற நிகழ்ச்சி ஆற்றுப் பெயர்களில் மிக அதிகம் நடந் திருப்பதாகத் தோன்றுகிறது. ஆறுகள் புனிதம் வாய்ந்தவை என்று சமய நிலையில் கூறப்பட்டதால், சமயஞ்சார்ந்த சமஸ்கிருத மயமாக்கல் இங்கு அதிகம் நடந்திருக்க வேண்டும். அதனுல் தான் ஆற்றுப் பெயர்களில் பலவும் சமஸ்கிருதமாகவோ சமஸ்கிருத மயமாக்கப் பட்டவையாகவோ காணப்படுவதன்றி, அப் பெயர்களை விளக்கும் கதைகளும், நாடோடிக் கதைகளை விட சமய, புராணக் கதைகளை அதிகம் சார்ந்தனவாகக் காணப்படுகின்றன.

கடனு (திரு.)
கடானு
கருணை
கமண்டலநதி (ம.)
கமண்டலநாகநதி (வ.ஆ.)
கிருதமாலி ஆறு (இரா.)
கூசன் மதி (திரு.)
கோமுக நதி (சே.)
நிக்ஷேபநதி (திரு.)
ருத்திராட்சா (தி.)

**(11) பிற : (69)**

மேலே கண்ட பாகுபாடுகளுக்குள் அடங்காமல் கணிசமான தொகையில் ஆற்றுப் பெயர்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள் பல ஒலி மாற்றங்களால் திரிந்த வடிவங்கள் அல்லது உண்மைப் பொருள் விளங்காதவை. அதனுல் அவற்றின் மூல வடிவங்களைக் கண்டு உறுதி செய்யாமல் பாகுபாடு செய்ய இயலாததால், தற்சமயம் அவை எஞ்சி நிற்கின்றன.

அடப்பாறு (த.)
அடையார் (செ.)
அணையார் (கோ.)
அம்புலியார் (தி.)
அமராவதி (கோ., தி.)
அரியாறு (தி.,)
அவலாஞ்சி (நீ.)
ஆளியார் (கோ.)
எமரால்டு (நீ.)
ஓங்கார் (தெ.ஆ.)

ஓலவாய்க்கால் (த.)
கந்தாடைப் பள்ளம் (நீ.)
கம்பையார் (தி.)
கரைப் போத்தனூர் (சே.)
கருவத்தார்
கரைபோட்டனூறு
கருவேட்டனூறு
கல்லாய் நதி (நீ.)
ஊர்ப் பெயர்
கள்ளாறு (கல்லார்) (நீ.)
கரைஹள்ளா (நீ.)
காடுவெட்டியாறு (செ.)
காவேரி
கிரதஹள்ளா (நீ.)
கீர்த்தி மன்னூறு (த.)
குட்டஞ்சி (ம.)
குடுவையாறு (தெ.ஆ.)
குந்தா (நீ.)
குளிரத்தி ஆறு (திரு.)
கூவம் (செ.)
கொடமார் (தெ.ஆ.)
கொடிங்கால் (தி.)
கொத்தாறு (வ.ஆ.)
கொட்டாறு
கொரளியார் (இரா.)
கொற்றலையார் (செ.)
கொன்னையார் ஏரி (சே.)
கோடாறு (கோ.)
சருகணியார் (இரா.)
சருகணையார்
சுகனி ஆறு (இரா.)
சுள்ளன் (த.)
தண்டையார் (தெ.ஆ.)
தொண்டையார்
தாப்பார் (செ.)
தாம்பிரபருணி (2.க.,தி.)
திருஞ்சலார் (தெ.ஆ.)
துரிஞ்சலார்

தொட்டஹள்ளா (தர்.)
தொட்டஹள்ளி
நல்லதாங்கி (ம.)
நாரட்டாறு (திரு.)
நீராளிப்பள்ளம் (நீ.)
நொய்யல் (கோ.)
பம்பையார் (2.திரு.,தெ.ஆ.)
பரளியார் (2.இரா.,க.)
பாம்பணி (த.)
பாமினி
பாம்பன் (இரா.)
பாம்பனூர் (வ. ஆ.)
பார்சன்வேலி (நீ.)
புலஹரி ஆறு (கே.)
பெகும்பஹள்ளா (நீ.)
பெய்யார் (திரு.) பேயாறு
பெரிங்க பள்ளம் (கோ.)
பேரியங்கபள்ளம்
பெருவாரிப்பள்ளம் (கோ.)
போர்த்தி மண்டு (நீ.)
மத்தளப்பள்ளம் (சே.)
மாமுண்டியாறு (தி.)
முதுகாடு (நீ.)
மொட்டையார் (திரு.)
மோயாறு (நீ.)
வாரியார் (தி.)
வரியார்
வாணியார் (சே.)
காவிரிக்கிளை
வானியார் (சே.)
தெ. பெண்ணைக்கிளை
(விட்டாறு) (த.)
(விண்ணூறு) (த.)
விரிசுழி ஆறு (இரா.)
வெட்டாறு (த.)
வைகை
வைப்பாறு (2.இரா.,த.)
ஹள்ளர் ஹள்ளா (கோ.)

தனித்தனி நிலையில் ஆறுகள் பல்வேறு காரணங்களால் பெயர் பெற்றாலும், ஆறுகள் பல இணையும் போது அவை பெயர் பெறும் விதம் இருவகையானதாகக் காணப்படுகிறது. முதல் வகை: பல ஆறுகள் இணையும் பொழுது அதில் பெரிய ஆற்றின் பெயரே, இணைந்தபின் தோன்றும் புதிய ஆற்றுக்கும் பெயராய் அமைவது. இவ்வகையில்தான் காவிரி, வையை முதலிய பல தமிழக ஆறுகளின் பெயர்களும் காணப்படுகின்றன. இம்முதல் வகையில் இன்னொரு பிரிவும் உண்டு. அதாவது ஒத்த தன்மையுள்ள, ஒரே அளவான இரு ஆறுகள் இணையும் போது, எவ்வாற்றின் பெயரைப் புதிய ஆற்றுக்கு இடுவது என்பதில் குழப்பமும், தெளிவின்மையும் ஏற்படலாம். அப்போது இரு ஆறுகளின் பெயராலும் புது ஆறு அழைக்கப்படலாம். சுவாமி முடியாறு, காஞ்சியாறு என்ற இரண்டும் இணைந்து உண்டானபின் காஞ்சி ஆறு சுவாமி முடியாறு என்ற இருபெயரும் தொடக்கத்தில் பொதுப்பெயராகத் தெளிவின்றி வழங்கி வருகின்றன. இரண்டாவது வகையில் பல ஆறுகள் இணையும் போது, அவ்வாறுகளில் எவற்றின் பெயரும் புதிய ஆற்றுக்கு வழங்காமல், புதிய பொதுப் பெயர் ஒன்று ஏற்படுகிறது. இவ்வகைக்கு உதாரணமாக ஆனை மலையில் தோன்றும் ஆளியாற்றைக் குறிப்பிடலாம். இவ்வாறு பாலாற்றுடன் கேரள எல்லையில் சேர்ந்தவுடன் பாரதப்புழா என்ற புதிய பொதுப் பெயரைப் பெற்றுவிடுகிறது.

மொத்தத்தில் ஆறுகளின் பெயரமைந்த அடிப்படைகளை நோக்கும்போது ஆற்றின் பல்வேறு கூறுகளின் இயல்பு நோக்கி அமைந்த பெயர்களே (65) அதிகம் காணப்படுகின்றன. இதற்கடுத்த நிலையில் ஆட்பெயர்கள் (51), ஊர்ப் பெயர்களிலிருந்து (48) அதிகம் ஆற்றுப் பெயர்கள் தோன்றியிருக்கின்றன. நான்காவதாக ஒப்பு நோக்கால் பெற்ற பெயர்களும் (28), அடுத்த நிலையில் ஆற்றில் விளையும் பொருள்களால் பெற்ற பெயர்களும் அமைகின்றன. சுமார் 21 ஆறுகள் தோன்றுமிடத்தால் பெயர் பெற்றிருக்கின்றன. இங்ஙனமே விலங்குப் பெயர் பெற்றவை (15), ஆற்றுப் போக்கால் பெயர் பெற்றவை (10), புராணக்கதை நிகழ்ச்சிகளால் பெயர் பெற்றவை (8) ஆகியவை அடுத்தடுத்துக் காணப்படுகின்றன,

ஆறுகளின் ஒரு நிலையாகிய அருவிகளின் பெயர்கள் பற்றியும் இங்குக் குறிப்பிடவேண்டும். ஆனால் தற்சமயம் அருவிப் பெயர்கள் எல்லாம் கிடைக்காமையால், அவை பற்றி ஒன்றும் கூற இயலவில்லை.

ஆறுகளின் பெயர்களைப்பற்றிய ஆராய்ச்சியோடு தொடர்புடைய தாக ஆற்றிலிருந்து கிளைத்த ஊர்ப் பெயர்களைப் பற்றியும் குறிப் பிடலாம். வெள்ளாறு, கயத்தாறு, மூணாறு, செய்யாறு, அடையாறு, கயத்தாறு, பொறையாறு, இடையாறு போன்றவை இங்ஙனம் ஆற்றின் பெயரே ஊரின் பெயராக அமைந்தனவாகும். இவ்வகைப் பெயர்கள் தழுவு பெயர்கள் எனப்படும். இவ்வகை ஊர்ப்பெயர்களி லிருந்து, மாறிவிட்ட அல்லது மறைந்துவிட்ட ஆற்றுப் பெயர்களை அறிந்து கொள்ளலாம். இன்று கோதண்டராம நதி எனப்படும் ஆறு பண்டு கயத்தாறு என அழைக்கப்பட்டது 10. இதைக் கயத்தாறு என்ற ஊர்ப் பெயரால் தான் அறிகிறோம். கோட்டாறு என்ற ஊர்ப்யெயர், அப்பெயர் தாங்கிய ஆறு ஒன்று அப்பகுதியில் ஓடியதை நினைவூட்டுகிறது.

ஆற்றங்கரையில் தோன்றிய ஊர்கள் ஆற்றூர், ஆற்றங்கரை, ஆற்றுப்பாக்கம், ஆற்றுக் குறிஞ்சி என அழைக்கப்பட்டன. ஆற்றை ஒட்டித் தோன்றிய ஊர்கள் ஆற்றின் போக்கை ஒட்டியும் பெயர் பெற்றிருக்கின்றன. உதாரணம்: வலமுறி க்ஷேத்திரம், திருவலஞ்சுழி.

ஆறுகளை ஒட்டித் தோன்றிய பிற ஊர்ப் பெயர்விகுதிகள்: துறை, அரங்கம், துருததி, கூடல், அணை, கால், ஓடை, பள்ளம், கரை ஆகியன.

ஆறுகள், நாட்டு நிர்வாகப் பிரிவுகளை அமைப்பதற்கு இயற்கை யான எல்லைகளாகப் பண்டு தொட்டே வழங்கி வந்திருக்கின்றன. அதனால் நாட்டுப்பிரிவுகளும் ஆறுகளின் பெயரால் அமைகின்றன. அரிசி லுக்கும் காவிரிக்கும் நடுவான உய்யக் கொண்டார் வளநாடு, வடகடு வாயான க்ஷத்திரிய சிகாமணி வளநாடு, தென்கடுவாயான அருமொழி தேவ வளநாடு, வடகரைஇராசேந்திர சிங்க வளநாடு (S.I.I. Vol. II, No.4), தென் கரைத்திரை மூர்நாடு (S.I.I. Vol III. pt.3. No. 91) ஆகியவை உதாரணங்களாகும்.

---

10. ரா. பி. சேதுப்பிள்ளை, தமிழகம் — ஊரும் பேரும் (1956), பக்.16.

(2, 3, 4 ஆகிய அடிக்குறிப்பிற் காணப்படும் அச்சு நூல்கள் பற்றிய குறிப்புக்களைத் தமிழ்நூல் விவர அட்டவணைத் தொகுதிகளிலிருந்து திரட்டித் தந்த திரு. கிருஷ்ணசாமிக்கு என் நன்றி.)

### சுருக்கங்கள்

இரா. – இராமநாதபுரம்; க-. கன்னியாகுமரி; கோ.–கோயம்புத்தூர்; செ.-செங்கல்பட்டு, சே.-சேலம், த. தஞ்சாவூர்; தர்.– தர்மபுரி; தி.–திருச்சிராப் பள்ளி; திரு.–திருநெல்வேலி; தெ.ஆ.-தென் ஆர்க்காடு; நீ.–நீலகிரி; ம.-மதுரை; வ.ஆ.-வடார்க்காடு)

### நூலடைவு

இராசமாணிக்கனார். மா., **பொருநை**

கோபாலய்யர்., *காவேரி ரஹஸ்யம்*, திருவான்மியூர், சென்னை.

சரஸ்வதி ராமநாத்., **காவேரியின் கதை** (தெ. பெண்ணை, பாலாறு, வைகை, பொருநை நதிகளின் கதையும் இணைந்தது.) தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1967.

சிட்டி & ஜானகிராமன், தி., *நடந்தாய் வாழி காவேரி*, வாசகர் வட்டம், சென்னை, 1971.

சேதுப்பிள்ளை, இரா. பி., *ஆற்றங்கரையினிலே*, பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 1961.

சொக்கலிங்கம், ராய. சொ., *காவேரி* (முதல் கட்டுரைத் தலைப்பு) அழகுப் பதிப்பகம், காரைக்குடி, 1960.

சோமலெ., *கன்னியாகுமரி மாவட்டம்* (1961), *கோயம்புத்தூர் மாவட்டம்* (1961), *செங்கல்பட்டு மாவட்டம்* (1963), *சேலம் மாவட்டம்* (1961), *தஞ்சாவூர் மாவட்டம்* (1961), *திருநெல்வேலி மாவட்டம்* (1963), *வடார்க்காடு மாவட்டம்* (1961), பாரி நிலையம், சென்னை.

திருநயம். கிருஷ்ணபாரதிகள்., '*திருவையாற்றுக் கப்பல்*' (காவேரித் திருநதிச்சிறப்பு) விவேகசிந்தாமணி, 1902.

பொன்னழகன். உதகை., *ஆடிவரும் காவேரி*, நன்செய்ப் பசிப்பகம் சென்னை, 1969.

வைத்தியலிங்கம், எஸ்., *உலகமும் நமது நாடும்* (புவியியல்) என். சி. பி. எச்., 1968.

Law. B. C., Rivers of India, calcutta, 1944.

District Census Hand books (1961). All Districts of Tamil Nadu.

Gazetter of Coimbatore District, 1966.

Gazetter of Salem District, 1967.

Gazetter of Ramanathapuarm District, 1972.

## 5. நகர் என்ற சொல்லின் வரலாறு

இக்கட்டுரையில் நகர் என்ற சொல்லின் சொற்பொருள் வரலாற்று நிலையில் அடைந்த மாற்றங்களும், அது ஊர்ப்பெயர் விகுதியாகத் தமிழில் மாறிய வரலாறும், தொடர்புடைய பண்பாட்டுச் செய்திகளும் ஆராயப்படுகின்றன.

நகர் என்ற சொல்லோடு வடிவநிலையில் தொடர்புடையதாக நகரம், நகரி, நகரியம் ஆகிய சொற்கள் தமிழில் காணப்படுகின்றன. நாகரிகம், நாகரிகர், நாகரிகி, நாகரீகம், நாகரீகர், நாகரீகக்காரர் போன்ற பிற சொற்கள் நகர் என்ற சொல்லினடியாகத் தோன்றித் தமிழில் வழங்குபவை.

**பொருள்:**

நகர்: தமிழ் - 1. பேரூர் 2. வீடு, மாளிகை 3. கோயில், 4. அரண்மனை 5. சடங்கு செய்யுமிடம் 6. விசேடங்கள் நிகழும் மண்டபம் 7. மனைவி.

நகரம்: தமிழ் - 1. பேரூர் 2. அரண்மனை 3. கோயில் 4. வாழிடம் 5. வணிகர் ஊர்.

நகர்: மலையாளம் – பேரூர். நகரு; துளு - பேரூர். நகரு: தெலுங்கு - மாளிகை.

நகர: சமஸ் – பேரூர்.

**சங்க இலக்கியத்தில் :**

சங்க இலக்கியத்தில், நகர் என்ற சொல் (சுமார் 100 இடங்களில்) மாளிகை, வீடு, மனை, இல்லம், கடவுளின் கோயில், அரண்மனை ஆகிய பொருள்களையே மிகுதியாகக் குறித்தும், மிக அருகியே ஊர், பேரூர் என்ற பொருளைக் குறித்தும் வழங்கப்படுகிறது.

*சங்கப் பிற்காலம்* : சங்கப் பிற்காலத்தில் பேரூர் என்ற பொருளில் (சிலம்பு 29 இடம், பெருங்கதை 157, கம்பராமாயணம் 221) மிகுதியும் பிற பொருளில் மிகக் குறைந்துமே வழங்குகிறது.
நகரம் : மதுரைக் காஞ்சியில் நகரம் (484) ஓரிடத்தில் கோயில் என்ற பொருளில் வருகிறது. சிலம்பில் பேரூர்–8; கோயில்– 1 என்ற நிலையிலும் பெருங்கதையில் பேரூர் என்று மட்டும் 39 இடங்களிலும் பயன்படுகிறது. கம்பராமாயணத்தில் (26) பேரூர் என்ற பொருள் மட்டுமே உண்டு.

பெருங்கதை, கம்பராமாயணத்துள் நகரி என்ற (பெண் பாற் சொல்) வடமொழித் தன்மையுள்ள சொல் பேரூரைக் குறித்து வருகிறது. நாகரிகர், நாகரிகம் போன்ற சொற்கள் சங்க இலக்கியம், குறள் ஆகியவற்றிலேயே காணப்படுகின்றன. நாகரிகி என்ற சொல் பெருங்கதையில் காணப்படுகிறது.

**ஊர்ப்பெயர்களில் நகர் / நகரம்:**

சங்ககால ஊர்ப்பெயர்களுள் நகர்/நகரம் என்ற விகுதி காணப்படவில்லை. பல்லவர் காலப் பக்தி இலக்கியங்களிலிருந்து தினைநகர், விளநகர், தஞ்சையாளி நகர், திருப்பேர்நகர் ஆகிய சில பெயர்களையே பார்க்கிறோம்.

பல்லவர் காலத்தில், நகரம் என்ற சொல் நிர்வாகக் கலைச் சொல்லாக, வணிகர் வாழ்ந்த ஊர்களைக் குறித்தது.
எ-டு : நகரம் திருத்தெங்கூர், பால்குணமங்கைபுரம் என்று ஏறிய நகரம். நகரத்தில் வாழ்ந்ததால், வணிகர்கள் நகரத்தார் என அழைக்கப்பட்டனர். எ-டு : குமார மார்த்தாண்டபுரத்துப் பெரு நகரத்தோம், திருவிடைமருதூர் நகரத்தோம். நகரம் என்பது வணிகர்சபையைக் குறித்ததாகவும் தோன்றுகிறது. சில சமயங்களில் இந்நகரங்கள் புரம் என்ற விகுதி கொடுத்தும் பெயரிடப்பட்டன. எ-டு : வெண்மணிப்பாடி என்ற ஊர் நகரமாக மாற்றப்பட்டபோது அது தாயிலுநல்லபுரம் எனப் பெயர் மாற்றப்பட்டது. சோழராட்சிக் காலத்தில் சோழ நாட்டில் சுமார் 26 நகரங்கள் இருந்தனவாகத் தெரிகிறது. (Subbarayalu, (1973), pp. 90-91.)
எ. டு : கஞ்சாற நகர்

நாயக்கர் காலத்தில் நகர் / நகரம் என்பன ஊர்ப் பெயர் விகுதிகளாகப் புதிதாகத் தோன்றும் ஊர்ப்பெயர்க்குப் பரவலாகக் கையாளப்

படுகின்றன. இக்காலத்தில் தோன்றும் புதிய ஊர்களும், குடியிருப்புப் பகுதிகளும் மிகுதியும் நகர் என்ற விகுதியையே பெறுகின்றன.

உருவாகும் பெயர்கள் (evolved names) சூட்டுப்பெயர்கள் (bestowed names) என்ற இருவகையில் நகர், நகரம் இரண்டாவது வகைப் பெயர்களிலேயே அதிகமாகப் பயன் படுத்தப் படுகிறது.

**நகர்—மூலமொழி:**

பேராசிரியர் பர்ரோ அவர்கள், நகர், நகரம் என்ற சொற்கள் திராவிட மொழிகளிலும், வடமொழியிலும் காணப்பட்டாலும், தமிழில் பழைய இலக்கியங்களில் வழங்குவது காரணமாகவும், பொருள் வேறுபாடு இருப்பதாலும், சமஸ்கிருதத்தில் இந்தோ ஐரோப்பியச் சொற்பொருள் இன்மையாலும், இது திராவிட மொழியிலிருந்து கடன் பெற்றதாகலாம் என்று கருதுகிறார். உறைவிடம் என்ற பொதுப் பொருளிலிருந்து மாளிகை என்றும் பேரூர் என்றும் பிற சிறப்புப் பொருள்கள் வளர்வது இயற்கையே. திராவிட மொழியில் மொழி முதல் நகர ஊசலாட்டம் இருப்பதால் (நீர் ~ ஈர்) சமஸ்கிருதத்தி லுள்ள agara, agara house, abode என்ற சொற்கள் திராவிட நகர் / நகரம் என்பதிலிருந்து பெறப் பட்டிருக்கலாம். மேலும் தமிழில் அகம் (உள்ளிடம்) என்ற சொல் வீடு என்ற பொருளையும் அகநிலை (பேரூர்) அகப்பா (மதில்) என்ற தொகைச் சொற்களில் நகர் போன்ற பொருள் வழங்குவதும் குறிக்கத் தக்கது என்கிறார் பர்ரோ (Burrow, (1968.), pp. 270–71).

**நகரம் சொல் வரலாறு:**

தென்னிந்தியாவில் கி. மு. 800—200 அளவில் நகர நாகரிகம் தொடங்கி, சங்ககாலம், சங்கப் பிற்காலம் ஆகியவற்றில் நகரங்கள் வளர்ந்தோங்கியதை வரலாற்றில் காணலாம்.

வடமொழியில், பாணினி நகர்என்ற ஊர்ப் பெயர் விகுதியைக் குறிப்பதால், அக்காலத்திலேயே நகர், ஊர்ப்பெயர் விகுதியாக மாறியிருக்கிறது என்று தெரிகிறது.

தமிழில் சங்க காலத்தில், இச்சொல், ஊர்ப்பெயர் விகுதியாக முற்றுக மாறவில்லை என்பது இலக்கியச் சான்றுகளிலிருந்து தெரிகிறது.

நகர் என்பதன் பொருள் விரிவு முதலில் தமிழில் நடைபெற்றுப் பின் அச்சொல் அப்பொருளோடு வடமொழியில் கடன் பெறப் பட்டிருக்கலாம். ஆனால் இச்சொல், தமிழில், வடமொழியைப்

போலன்றிப் பேரூரைக் குறிப்பதாகத் தொடக்ககால ஊர்ப் பெயர்களில் மிகுதியாகக் குறிக்கப்படவில்லை. அதற்குப் பதிலாகப் பேரூர், மூதூர், தொல்பதி, பட்டினம் போன்ற தமிழ்ச் சொற்களை நகரம் என்ற பொருளைக் குறித்தன. ஆனல் பிற்காலத்தில் இச்சொற்களை விடப் பேரூர் என்ற பொருளைக் குறிக்க நகரம் என்ற சொல்லே பெரு வழக்குப் பெறுவதையும், மேற்கண்ட சொற்கள் குறைந்து காணப் படுவதையும் பார்க்கிறோம். இவ்வழக்கு மாற்றம் சிலம்பு மேகலை பெருங்கதை முதலிய காப்பிய காலத்தும் அவற்றிற்குப் பிற் காலத்தும் ஏற்பட்டிருக்க வேண்டும். இது, வடக்கிலிருந்துதொடங்கிய அனைத் திந்திய நகர மயமாதல், பண்பாட்டுத் தொடர்புகள், பின் இங்கு ஏற்பட்ட வளர்ச்சிகள் ஆகியவற்றின் உந்துதலால் ஏற்பட்டதாகத் தோன்றுகிறது.

நகர், நாகரிகத்தின் இருப்பிடமாக இருப்பது போலவே, நகர் என்ற ஊர்ப்பெயர் விகுதியும் இன்று ஒரு நாகரிகச் சின்னமாக விளங்குகிறது. விருதுபட்டி, விருதுநகர் ஆன வரலாறு இதையே எடுத்துரைக்கிறது.

---

## நூலடைவு

1. Burrow, T., **Collected Papers on Dravidian Linguistics**, 1968, Annamalai nagar.
2. Subbarayalu, Y., **Political Geography of the Chola country**, 1973, Madras.
3. கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைச் சொற்பொழிவுகள்.

—— :0: ——

# 6. கோவை மாவட்ட இடப்பெயர்களும் கொங்கு வேளாளர்களும்

கொங்கு வேளாளர் மிகுதியாக வாழும் கொங்கு நாடு என்பது கோயம்புத்தூர், பெரியார் மாவட்டங்கள் முழுவதும் சேலம், தர்மபுரி, திருச்சிராப்பள்ளி, மதுரை முதலிய மாவட்டங்களின் பாகங்களும் அடங்கிய பகுதியாகும். கொங்கு நாட்டிலுள்ள இடப் பெயர்களில் கொங்கு வேளாளரின் செல்வாக்கைக் காண முடியும்.

கி. பி. 18 அல்லது 19 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த கொங்கு மண்டல ஊர்த் தொகை கொங்கு நாட்டைச் சேர்ந்த சுமார் 675 ஊர்ப் பெயர்களைக் குறிப்பிடுகிறது. பெரியார் மாவட்டம் தனியாகப் பிரிவதற்கு முன் இருந்த கோவை மாவட்டத்தில் சுமார் 6934 ஊர்ப் பெயர்கள் இருந்தன. இக்கட்டுரை பழைய கோவை மாவட்டத் திலிருந்த ஊர்ப் பெயர்களில் கொங்கு வேளாளர்களுடைய செல்வாக்கைச் சுருக்கமாக எடுத்துரைக்கிறது.

கோவை மாவட்டத்தில் கொங்கு வேளாளர் சுமார் 30-35% இருக்கலாம் என மதிப்பிடப்படுகிறது. தாராபுரம், பல்லடம், ஈரோடு, பொள்ளாச்சி வட்டங்களில் இவர்கள் மிகுதியாக வாழ்கின்றனர். இவர்களிடையே சுமார் 75 குலப்பிரிவுகள் காணப்படுகின்றன.

**கொங்கு வேளாளர் மிகுதியாக வாழும் இடங்களின் பெயர் விகுதிகள்:**

கொங்கு வேளாளர் மிகுதியாக வாழும் ஊர்களின் விகுதியாக. காடு (94), சாலை (லை) (22), தொழுவு (11), தோட்டம் (46), தோப்பு (2), படுகை (2), பண்ணை (1), பரப்பு (6), பாளையம் (2888), மடை (23), வலசு (504) ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

இவற்றின் வலசு விகுதிபெற்ற ஊர்களில் கொங்குவேளாளர் அதிகம் குடியிருக்கின்றனர். இப்பெயர்கள் கோவை மாவட்ட ஊர்ப் பெயர்களில் 7% ஆகும். ஈரோடு (241), தாராபுரம் (224) வட்டங் களில் இது அதிகமாகவும் கோபி (18), பவானி (10), பல்லடம் (6), பொள்ளாச்சி (3), உடுமலைப்பேட்டை (3) ஆகியவற்றில் இது குறை வாகவும் காணப்படுகிறது. அவிநாசி, கோவை வட்டங்களில் இது அறவே இல்லை. இது கோவை மாவட்டத்தின் தென் கிழக்குப் பகுதியிலேயே நிறைந்து காணப்படுகின்றது. இதையொட்டிய திருச்சி, மதுரை மாவட்டப்பகுதிகளிலும் இது காணப்படுகிறது. இப்பெயர்கள் காணப்படும் பரப்பை நோக்க, இவ்விகுதி மேற்கு நோக்கி மக்கள் குடியேறியதைக் காட்டுகிறது. இது கொங்கு வேளாளர் கீழ்ப்பால் சோழநாட்டிலிருந்து குடியேறியவர்கள் என்ற நம்பிகையை உறுதி செய்கிறதாகக் கருதலாம்.

அது போலவே காடு (194), சாலை (லை) (22), தோட்டம் (46) விகுதிபெற்ற ஊர்ப்பெயர்களுக்கும் கொங்கு வேளாளர்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நிலவுடைமையாளர்களாகிய கொங்கு வேளாளர்கள் தங்களின் வேளாண் நிலத்தின் மையத்தில் தங்கள் வீடுகளைக் கட்டிக் கொண்டு வாழ்வதில் பெருவிருப்பம் உடையவர்கள். இவ்வாறு தோன்றிய ஒருவரின் வீடு, காலப் போக்கில் விரிவடைந்து பலவீடுகளாக மாறி ஓர் ஊராக வளர்ச்சியடைந்தது. முதலில் வீட்டைக் கட்டிக் கொண்டு வாழ்ந்தவரின் பெயரும் அவ்விவசாய நிலமும் (காடு, தோட்டம் முதலியவை) இணைந்து பெற்ற பெயரே காலப் போக்கில் அவ்வூருக்குப் பெயராக அமைந்தது. காடு, தோட்டம் முதலிய பெயர்களிற் பல அவ்வகையிற் தோன்றியனவே. அலகுமலைக் குறஞ்சி (18 நூ.) என்ற நூலில் பாட்டுடைத் தலைவனை பெரிய பெருமாளின் பின் சந்ததியார் இவ்வாறு பிரிந்து சென்று ஊர்களை உண்டாக்கியதை எடுத்துப்பாடும். சாலைகளும் தோப்பு களும் இவ்வாறு தோன்றியனவே. கொங்குவேளாளரின் ஆகாத் தோம்பும் தொழிலை தொழுவு, பட்டி முதலிய விகுதிகள் காட்டு கின்றன. இதில் பட்டி என்ற விகுதி பெற்ற ஊர்கள் தமிழ் பேசும் கொங்கு வேளாளரைவிடத் தெலுங்கு கன்னடம் பேசும் மக்களுட னேயே அதிகம் தொடர்பு பெற்று விளங்குகின்றன. படுகை, பண்ணை, பரப்பு, மடை முதலிய விவசாயத்தோடு தொடர் புடைய சில ஊர்ப்பெயர் விகுதிகளுக்கும் கொங்கு வேளாளருக்கும் தொடர்பு இருப்பதாய்த் தோன்றுகிறது.

**ஊர்ப் பெயர் முன்னெட்டுக்களில் கொங்கு வேளாளர் செல்வாக்கு:**

முன்பே குறிப்பிட்டபடி காடு, தோட்டம் முதலியவை விகுதி களாக அன்றி ஊர்ப் பெயரின் சிறப்புக் கூறுகளாகவும் காணப்படு கின்றன (எ-டு: இச்சிக்காட்டுவலசு — தாராபுரம் வட்டம்). அவை போக கொங்குவேளாளருக்குரித்தான சாதிப்பெயர், குலப்பெயர்கள், இயற்பெயர்கள் ஆகியன ஊர்ப் பெயர்களில் மிகுதியாகக் காணப் படுகின்றன.

கவுண்டன் அல்லது கவுண்டச்சி (கவுண்டன் புதூர் — பல்லடம் வட்டம்; கவுண்டச்சி வலசு – தாராபுரம் வட்டம்) என்ற அடையுடன் மட்டும் சுமார் 45 ஊர்ப் பெயர்கள் காணப்படுகின்றன. மேற்கண்ட சாதி அடை கன்னடம், தமிழ் பேசும் சில பிரிவினர்க்கும் வழங்குகிறது; எனினும் இவற்றில் பெரும்பான்மை கொங்கு வேளாளருடன் தொடர் புடையது என்பதில் ஐயமில்லை.

**கீழ்க்கண்ட கொங்கு வேளாளர் குலப் பெயர்களிலிருந்தும் ஊர்ப் பெயர்கள் தோன்றியுள்ளன:**

... 111

| கொங்குவேளாளர் குலப்பெயர் | ஊர்ப்பெயர் | வட்டம் (கிராம எண்) சிறு கிராமமாயின் முதல் எழுத்து |
|---|---|---|
| ஆதி | ஆதியூர் | கோபி 20G |
| ஈஞ்சன் | ஈஞ்சம்பாளையம் | ஈரோடு 24V |
| கண்ணன் | கண்ணங்கோவில் | தாராபுரம் 47 |
| காடை | காடையூர் | தாராபுரம் 27 |
| கீரன் | கீரனூர் | அவிநாசி 4 தாராபுரம் 7 |
| கூரன் | கூரனூர் | அவிநாசி 4K |
| கோதை | கோதைப்பாளையம் | கோபி 42T |
| செம்பன் | செம்பவலசு | ஈரோடு 154M () |
| | செம்மம்பாளையம் | தாராபுரம் 355 |
| செம்புலிச்சான் | செம்புலிச்சாம்பாளையம் | பவானி 19–0 |
| செம்புலியான் | செம்புலியாம்பாளையம் | ஈரோடு 195N |
| செம்பூத்தான் | செம்பூத்தாம்பாளையம் | பவானி 49P |
| செல்லன் | செல்லப்பாளையம் | பல்லடம் 33A |
| சேகன் | சேகம்பாளையம் | அவிநாசி 42H |
| சேனத்தலையான் | சேனத்தலையாம்பாளையம் | தாராபுரம் 54 |
| தூரன் | தூரம்பாடி | தாராபுரம் 52 |
| தோரன் | தோரம்பாளையம் (புதூர்) | ஈரோடு 109N |
| தோலன் | தோலம்பாளையம் | அவிநாசி 5 |
| பவழர் | பவழக்குட்டை | கோபி (20)G |
| பனையன் | பணையம்பள்ளி? | ஈரோடு 175C |
| புங்கன் | புங்கம்பள்ளி | கோபி 52 |
| புள்ளர் | புள்ளம்பாளையம் | ஈரோடு 126V? |
| பூசன் | பூச்சம்பள்ளி? | ஈரோடு 34aK |
| பூதன் | பூதப்பாடி | பவானி 12 |
| பொன்னன் | பொன்னுபுரம் | தாராபுரம் 13M |
| மணியன் | மணியம்பாளையம் | பல்லடம் 22P |
| மயிலன் | மயிலங்கிணத்துப்பாளையம் | ஈரோடு 21K |
| முத்தன் | முத்தம்பாளையம் | ஈரோடு 77 |

அத்துடன் கவுண்டர் என்ற சாதிப் பெயர் இணைந்த இயற்பெயர் களும் மிகநிறையக் காணப்படுகின்றன. (எ-டு:சுந்தரகவுண்டன்பாளையம்-ஈரோடு வட்டம்). மேலும் கொங்கு வேளாளரிடையே சிறப்பாக வழங்கும் இயற்பெயர்களால் (எ-டு: நாச்சிபாளையம் - பல்லடம் வட்டம்) அமைந்த ஊர்ப் பெயர்களும் எண்ணிலடங்கா.

கொங்குநாட்டு ஊர்ப்பெயர்களிலிருந்து கொங்கு வேளாளரின் வாழ்வையும் வரலாற்றையும் சிறப்பையும் அறிய முடியும். மேலே கூறப்பட்டவைகள் சட்டென்று பட்டவைகளில் ஒரு சிலவே. இந்த வகையில் மேலும் ஆழமான ஆராய்ச்சிகள் மேற்கொண்டால் இன்னும் பல அரிய செய்திகள் வெளியாகும்.

---

# 7. ஊர்ப் பெயர் அமைப்பு முறைகள்

ஊர்ப்பெயர் ஆய்வின் பயன்களுள் ஒன்று ஊர்ப்பெயரமைப்பு முறைகளை அறிவதாகும். ஊர்ப்பெயரமைப்பு முறைகள், அவ்வம் மக்களின் வாழிடம், வாழ்க்கை முறை போன்ற பண்பாட்டுக் கூறுகளைப் பொறுத்து அமையும். உலகம் முழுவதும் உள்ள ஊர்ப்பெயர்களை மேலோட்டமாகப் பார்க்கும்போது, சிலகுறிப்பிட்ட அடிப்படைகளே ஊர்ப்பெயரமைப்புக்குக் காரணமாக இருப்பதை அறிய முடியும்.

ஊர்ப்பெயர்களில் பெரும்பாலானவை இரு கூறுகளை உடையதாக இருக்கும். ஒன்று *பொதுக்கூறு*. இரண்டாவது *சிறப்புக்கூறு* எனப்படும்.

பொதுக்கூறு என்பது பெயரின் விகுதியாக அமையும். பாளையம், பட்டி, ஊர் போன்றவைகள் பொதுக்கூறுகள் ஆகும். இவைகளையே ஊர்ப்பெயர் விகுதிகள் என்றும் அழைக்கிறோம். இப்பொதுக் கூறுகள் தான் ஓர் ஊருக்குப் பெயராக முதலில் அமைகின்றன. நாளடைவில் ஒரே பொதுக்கூறுள்ள பல ஊர்கள் தோன்றும் பொழுது அவைகளை வேறுபடுத்த அடைகளைச் சேர்க்கின்றோம். இவ்வாறு ஒரே பொதுக் கூறுள்ள பலபெயர்களை வேறுபடுத்த அமையும் அடைகளே *சிறப்புக் கூறுகள்* எனப்படும்.

கோவை மாவட்டத்தில் மொத்தம் சுமார் 170 பொதுக்கூறுகள் அல்லது விகுதிகள் காணப்படுகின்றன. கோவில், புத்தூர், நல்லூர் போன்ற தொகைகளைத் தவிர மற்ற விகுதிகள் எல்லாம் ஒருசொல் விகுதிகளாகவே காணப்படுகின்றன. இவ்விகுதிகளை மேலோட்டமாக நோக்கும்பொழுது எவ்வெக்கூறுகள் பெயர்த் தோற்றத்திற்குக்

காரணமாயின என்பதை அறிய முடிகிறது. மலையும், ஆறும், காடும், அளமும், சுரமும், முதலாய ஐந்திணை நில அமைப்புகளும், கோவில், குளம், கிணறு, அணை, சாலை, களம், குப்பை, சத்திரம், சாவடி, சந்தை, தொழுவு, பட்டி, தொட்டி, பந்தல், முதலாய செயற்கை அமைப்பு களும், கிராமம், மங்கலம், ஊர், அக்கிரகாரம் முதலிய குடியிருப்பு களும் ஊர்ப்பெயர்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைகின்றன,

கோவைமாவட்டத்தில் மொத்தம் சுமார் ஏழாயிரம் ஊர்ப் பெயர்களில் பாளையம் விகுதி 2888 பெயர்களிலும், 'ஊர்' என்ற விகுதி, 880 பெயர்களிலும், 'புதூர்' என்ற விகுதி 816 பெயர்களிலும், 'வலசு' விகுதி 504 பெயர்களிலும், 'பட்டி' விகுதி 339 பெயர்களிலும், 'புரம்' விகுதி 230 பெயர்களிலும், 'கரை' 54 பெயர்களிலும், 'காடு' விகுதி 94 பெயர்களிலும், 'குட்டை, 'தோட்டம்' விகுதிகள் முறையே 46 பெயர்களிலும் வருகின்றன. மற்ற விகுதிகளையுடைய பல்வேறு பெயர்களும் காணப்படுகின்றன.

பொதுக்கூறுகளை வேறுபடுத்த அமையும் சிறப்புக் கூறுகள் ஓரடையிலிருந்து பல அடைகள் வரை அமைகின்றன. மலைப்பாளையம் என்ற பெயரில் ஓரடை (மலை) மட்டுமே சிறப்புக்கூருக அமைகிறது. ஆனால் (1) எட்டி - (2) மலைப் – (3) பட்டி புதூர் என்ற பெயரில் 3 அடைகள் வரை அமைவதைப் பார்க்கிறோம். இவ்வடைகளின் பொருளை நோக்கினால் எவ்வெவை ஊர்ப்பெயரமைப்புக்குக் காரண மாகின்றன என்பதை அறியலாம். இச்சிறப்புக்கூறுகளின் அடிப் படையில் : (1) விளக்கப்பெயர்கள், (2) நிகழ்ச்சிப்பெயர்கள், (3) உடமைப் பெயர்கள், (4) நினைவுப்பெயர்கள், (5) மங்கலவழக்குப் பெயர்கள், (6) உருவாக்கப் பெயர்கள், (7) தழுவு பெயர்கள், (8) வழக்குத்திரிபு — விளக்கப்பெயர்கள் போன்று பலவகையாகப் பெயரமைப்பு முறைகளைக்கூறுவதுண்டு (பிரிட்டானிகா கலைக்களஞ் சியம் (1967), தொகுதி : 15, பக். 1160—1162). இவை எல்லா வற்றையும் அமைப்புவிளக்கப் பெயர்கள், இயற்பெயர் தொடர்பெயர் கள் என்ற இருபெரும் பிரிவில் அடக்கலாம்.

கோவைமாவட்டத்திலுள்ள பெயர்களின் சிறப்புக்கூறுகளை ஆராய்ந்ததில் (இயற்கை) அமைப்பு விளக்கப்பெயர்களும், இயற் பெயர்களும் எங்ஙனம் பெயரமைப்புக்குக் காரணமாக அமைந்தன என் பதைக் காணமுடிந்தது. இவ்விரண்டிலும் இயற்பெயர் தொடர்

பெயர்களே, இயற்கை அமைப்புவிளக்கப் பெயர்களைக் காட்டிலும் அதிகமாக இருக்கின்றன. ''உலக வரலாற்றுத் தொடக்கத்தில் ஏற் பட்ட பெயர்கள் இயற்கை அமைப்புக்களைப் பின்பற்றி பெரும்பான்மை யும் எழுந்தன — வரலாற்றின் மிகப் பிற்காலங்களில் இயற்பெயர் தொடர் பெயர்களாகவே மிகப் பெரும்பாலும் காணப்படுகின்றன'' என்ற கருத்தோடு ஒப்பிடும் பொழுது கோவை மாவட்டத்தில் மிகுதி யாகக் காணப்படும் இயற்பெயர் தொடர் பெயர்கள் வரலாற்றின் மிகப்பிற்காலத்தில் எழுந்தன என முடிவு செய்யலாம். இக்கருத்தை பிற்காலத்தனவாகிய இவ்வியற்பெயர்களும் உறுதி செய்கின்றன.

இனி எவ்வகை இயற்கை அமைப்புகளும், இயற்பெயர்களும் பெயரமைப்பிற்குக் காரணமாக அமைந்தன என்பதைப் பகுத்துக் காணலாம்.

1. **இயற்பெயர் தொடர் பெயர்கள் :-** இப்பெரும் பிரிவில் சில உட்பிரிவுகள் காணப்படுகின்றன.

அ. *தனி ஆட் பெயர் அடையாக அமைதல் :-*
(எ—டு:) குப்பன் துறை, குப்பன்பாளையம், குப்பனூர்

ஆ. *ஆட்பெயரும் சாதிப்பெயரும் அடையாக அமைதல் :-*
(எ-டு:) அய்ய கவுண்டன்புதூர், அய்யகவுண்டன் வலசு, அய்யப்ப நாயக்கன்பாளையம், அய்யப்ப ரெட்டி புதூர், அழகிரி செட்டி பாளையம், இராமய்யன்பாளையம்.

இ. *சாதி அல்லது தொழிற்பெயர் இயற்பெயர் அடையாக அமைதல் :-*
அய்யன்பாளையம், அய்யன்சாலை, அய்யன்தோட்டன், அய்யன் புதூர், அய்யன்வலசு, சேர்வைக்காரன் பாளையம், சேர்வைக் காரன் வலசு, கணக்கன் பாளையம், கவுண்டன் பாளையம், கவுண்டன்புதூர், கவுண்டன்வலசு .

ஈ *சாதிப்பொதுப்பெயர் அடையாக அமைதல் :-*

(எ.டு.) ஆண்டி பாளையம் / பட்டி / குளம் / புதூர்,
செட்டிபாளையம் / பட்டி / குளம் / புதூர்.

கோவை மாவட்ட ஊர்ப்பெயர்களில் சுமார் 100 வகைசாதி, இன, மொழி, குலப்பிரிவுகளின் பெயர்கள் காணப் படுகின்றன. இவற்றிலிருந்து கோவைமாவட்ட சமூக அமைப்புப்

பற்றிய ஏராளமான செய்திகளை அறிய முடிகிறது. உதாரணத்திற்குச் சில : ஆயர், இருளர், உப்பிலி, ஒக்கில், உட்டர், கம்மாளர், குருக்கள், குறும்பர், கோடாங்கி, கோனார், சங்கிலி, சிவியார், சேடன், துலுக்கர், துரை, துளுவர், தெலுங்கர், தொட்டியர், நாகர், நாயக்கர், வலையர், வளையக்காரர், வேடர், வேட்டுவர், பணிக்கன், பாம்பான், புலவர், போயன், மறவன், மன்னன், முதலி, மூப்பன், மொடவாண்டி, ரெட்டி, வடுகர், ராயர்.

2. **(இயற்கை) அமைப்பு விளக்கப் பெயர்கள்:-**

*அ. இயற்கை அமைப்புக்கள் அடைகளாக அமைதல் :*

(எ-டு.) கள்ளிமடைப்பாளையம், கரட்டுப்பட்டி, ஆற்றுப்புதூர், குளத்துப்புதூர், மாமரத்துப்பட்டி, நடக்காவேரி பாளையம்.

*ஆ. செயற்கை அமைப்புகள் அடைகளாக அமைதல்:-*

சாவடிப் பாளையம், கோட்டைப்புதூர், தண்ணீர்ப்பந்தல் புதூர், கோவில் பாளையம்.

*இ. தொடர்புண்மைகள் அடைகளாக அமைதல்:-*

மேலப்பாளையம், மேட்டுப்பட்டி, பெரியபாளையம், புதுப்புதூர்.

*ஈ. ஊர்ப்பெயர்களே அடைகளாக அமைதல்:-*

தொண்டாமுத்தூர் புதூர், எல்லைப்பாளையம் புதூர், எட்டிகுட்டை புதூர்.

சிறப்புக்கூறு, பொதுக்கூறு என்று பிரிக்க இயலாத நிலையில் காணப்படும் மதுரை, குயிலை, களந்தை, காகம், முசிறி, உழலை, நிகமம், கொழுமம், பிரமியம் போன்ற பெயர்கள் முன்பு இரு கூறுகளை உடைய பெயர்களாக இருந்து பின் திரிபுகளால் ஏற்பட்ட மரூஉப் பெயர் களாகும். இவ்வகைமரூஉப் பெயர்கள் மிகத் தொன்மை உடையன வாகும்.

---

# 8. சங்க கால ஊர்ப்பெயர்கள் — சில பொதுச் செய்திகள்

சங்க இலக்கியங்கள் தமிழருடைய பழங்கால வாழ்க்கையைப் பற்றி அறிய இன்று இருக்கின்ற அரிய மூலங்களில் ஒன்றாகும். அந்த இலக்கியங்களிலிருந்து அக்கால அரசு, சமூகம், பொருளாதாரம், பண்பாடு போன்ற பலவகையான துறைகளைப் பற்றிய செய்திகளைச் சேகரிக்க முடிகிறது. அதே போல அந்தக் காலத் தமிழகத்தின் பூகோள நிலை, ஊரமைப்பு நிலை போன்றவற்றைப் பற்றியும் பல செய்திகளைக் காணமுடியும். அவ்வகையில் ஊர்ப்பெயர்களைப் பற்றி மேற்கொண்ட ஆய்வு முயற்சியின் முதல் வெளியீடே இக்கட்டுரை.

அக்காலத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து நிலப்பாகுபாடு புலனெறி வழக்கிலும் சரி, உலகியலிலும் சரி நன்றாகவே உணரப்பட்டிருந்தது. இப்பாகுபாடு, மக்கள் பண்பாடு, ஒழுகலாறுகள், ஆட்பெயர்கள், ஊர்ப்பெயர்கள் எல்லாவற்றிலும் ஊடுருவியிருந்தது. எனவே நிலத்தின் பூகோள அமைப்பு மக்கள் வாழ்க்கையைப் பெருமளவில் பாதித்து வேறுபடுத்தியது எனலாம். அன்று எழுந்த ஊர்ப்பெயர்கள் பலவும் இயற்கை அமைப்புக்களை — நில அமைப்புக்களை விவரிக்கும் முறையில் அமைந்த ஊர் விளக்கப்பெயர்களாகவே இருந்தன.

ஒவ்வொரு நிலத்திற்கும் இன்னவகையில் ஊர்ப்பெயர்கள் விகுதி பெறவேண்டும் என்று பிற்காலத்தில் இலக்கண வரையறைகள் காணப்படுகின்றன. குறிஞ்சி நிலத்து ஊர்கள் குறிச்சி, சிறுகுடி என்றும், முல்லை நிலத்து ஊர்கள் பாடி, சேரி என்றும், பாலை நிலத்து ஊர்கள் பறந்தலை, குறும்பு என்றும், நெய்தல் நிலத்து ஊர்கள் பாக்கம்,

பட்டினம் எனவும் வகைப்படுத்தப்பட்டன; ஆனால் இவ்வரையறை சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் மிகத் தெளிவாக உருப்பெற வில்லை என்று தோன்றுகிறது. பாக்கம் நெய்தல் நிலத்து ஊர்க்கும் வருகிறது.

'புன்னையங் கொழு நிழல் முன்னுய்த்துப் பரப்பும்
துறை நனி இருந்தபாக்கமும்' (நற். 101:4–5)

இதே விகுதி குறிஞ்சி நிலத்து ஊர்க்கும் வருகிறது.

'சிலம்படைந்திருந்த பாக்கம்' – மலைபடு:162

'சிறுகுடி' குறிஞ்சியிலும், நெய்தலிலும் வருகிறது.

'குன்றச் சிறுகுடி' (குறு.332:5) (குறிஞ்சி)

'குறுகல் ஓம்புமின் சிறுகுடிச் செலவே, (குறு.184:2) (பரதவர்குடி)

இவ்வரையறைகள் மயங்கிக் கிடந்தமைக்குக் காரணம் நில அமைப்பே அவ்வாறு ஒன்ரோடு ஒன்று கலந்து காணப்பட்டதுதான். ஐந்திணை நில அமைப்புக்களும் மூவேந்தர் நாட்டிலும் தலைமயங்கிக்கிடக்கும் செழிப்பைப் புலவர்கள் பல இடங்களில் பாடுகிறார்கள். (மதுரைக்காஞ்சி : 238—326, பெரும்பாணாற்றுப்படை : 39—42, பொருநராற்றுப்படை 178—226 , பதிற். 30)

சேர அரசனைப்பற்றிப் பாடும் பாடலில் புலவர் பொய்கையார் சேரநாட்டின் திணைமயக்கத்தைச் சுட்டிக்காட்டுகிறார்.

''நாடன் என்கோ ஊரன் என்கோ
பாடிமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ
யாங்கனம் மொழிகோ ஓங்குவாட் கோதையைப்
புனவர் தட்டை புடைப்பின் அயலது
இறங்குகதிர் அலமரு கழனியும்
பிறங்கு நீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங்கெழுமே.''[1] (புறம். 49)

இப்படிப்பட்ட கலப்பு நிலையில் தெளிவான வரையறைகள் ஊர்ப்பெயர் களில் ஏற்படுவது அருமையே.

சங்க இலக்கியங்களில் ஊர்கள் இருவகையில் இடம்பெறு கின்றன. முதலாவதாக அக இலக்கியங்களில் சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார் என்ற வரையறை இருப்பதால் அவற்றில் தலைவன் தலைவருடைய கற்பனையான பொது ஊர்ப்பெயர்களே திணை மரபுக்கேற்பச் சுட்டப்படுகின்றன.

---

1. 'புனவர் தட்டை புடைப்பின்' எனக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்பக் கூறினமையான், நாடனென்பதூஉம் அவ்விரண்டு நிலத்துக்கும் கொள்ளப்படும்; எனவே முல்லைநிலமும் உடையன் என்றவாறும்.

'நறவுமலி பாக்கத்துக் குறமகள்' (குறு. 394 : 2)
'சிறுகுடிக் குறவன்' (குறு . 95 : 1—3)
'தண்துறை ஊரன் (குறு. 91 : 3; நற் . 300 : 4)
'குறுந்தொடி தந்தை ஊர்' (குறு. 233 : 7)
'குன்றுசேர் சிறுகுடி' (குறு : 108 : 1)

இரண்டாவதாக உண்மையான ஊர்ப்பெயர்கள் பல வருகின்றன. அவை பல்வேறு காரணங்களின் அடிப்படையில் இடம் பெறுகின்றன.

1. அரசர் குறுநில மன்னர்களின் புகழ்பாடும் புறப்பாடல் களில் அவர்களுடைய நகரங்களும், ஊர்களும் கூறப்படுகின்றன (பத்துப் பாட்டில் பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, எட்டுத் தொகையில் புறநானூறு).

2. ஆற்றுப்படையில் பாட்டுடைத் தலைவனின் நாட்டிலுள்ள ஊர்களைப் பற்றி விளக்கமான செய்திகள் காணப்படுகின்றன. (திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம்.)

3. அகப்பாடல்களில் தலைவியை நகரங்களோடு ஒப்பிடுவது மிகுதியாகக் காணப்படுகிறது. இதனாலும் பல ஊர்களின் பெயர்கள் நமக்குத் தெரியவருகின்றன. (ஐங். 54 : 3; 55 : 2; 56 : 2; 57: 2; 58 : 2; 171 : 3; 175: 4; 177: 4; 178: 3; 179: 3; 180: 4; அகம். 10: 13; 44: 13; 60: 7.)

மேலும் போர்க்களங்கள், அரசர்களுடைய நகரங்கள் போன்ற புறச் செய்திகள் மிகுதியும் அகப்பாடல்களில் காணப்படுகின்றன. ஒருவகையில் நமக்குத் தெரிய வருகின்ற சங்ககால ஊர்களில் பலவும் அகப்பாடல்களில் மட்டுமே காணப்படுவனவாகும்.

சங்க இலக்கியப்பாடல்களிலிருந்து மொத்தம் சுமார் 200 ஊர்ப் பெயர்கள் தெரியவருகின்றன. பலபாடல்களின் கொளு அல்லது பதிகம் ஆகியவற்றில் சுமார் 100 ஊர்ப்பெயர்கள் உள்ளன 2.

---

2. சங்ககால ஊர்ப்பெயர்களைப் பற்றிய என்னுடைய ஆய்வு இன்னும் முற்றுப்பெறவில்லை. எனவே இதில் கொடுக்கப்பட்டுள்ள ஊர் களின் எண்ணிக்கையும், முடிவுகளும் தோராயமானவை; தற்காலிகமானவை.

சங்க இலக்கியம் என்பதில் கலி, பரிபாடல், திருமுருகாற்றுப் படை ஆகியவைகளையும் (தற்போது) உள்ளடக்கி இருக்கிறேன். பதிகங்களும், கொளுக்களும் – நம்பிக்கைக்கு உரியன என மெய்ப் பிக்கப்பட்டிருப்பதால் இவைகளிலிருந்தும் பெயர்களை எடுத் திருக்கிறேன்.

இவைகள் சங்ககால ஊர்ப்பெயர் எண்ணிக்கையில் குறிப்பிடத் தகுந்தவையாக இருந்திருக்கலாம். மொத்த எண்ணிக்கையில் இவை எத்தனை விழுக்காடு வரும் என்பதும் தெரியவில்லை.

பாரியின் நாடு முந்நூறு ஊர்களை உடையதாக இருந்தது (முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு. புறம்.110 : 3) இமயவரம்பன். நெடுஞ்சேரலாதன் தன்னைப் பாடிய குமட்டூர்க் கண்ணனாருக்குப் பிரமதாயமாகக் கொடுத்த பரிசில்உம்பற்காட்டு ஐஞ்ஞூற்றூர். கபிலருக்கு செல்வக் கடுங்கோ வாழியாதன் மலைமேல் ஏறி கண்ணுக்குத் தெரிந்த ஊர்களை எல்லாம் பரிசிலாக வழங்கியிருக்கிறான் (பதிற். 85: 12—13; பதிற். 7—ஆம் பதிகம்). ஓரி என்ற வள்ளல் குறும்பொறை நன்னாடு என்ற பகுதியைக் கோடியர்க்கு ஈந்திருக்கிறான்3. இக்குறிப்புகள் எல்லாம் அக்கால ஊர்களைப் பற்றிய ஒரு பொது எண்ணத்தை நமக்குத் தருகின்றன.

இலக்கியங்கள் ஊர்களை இருமுறையில் சுட்டுகின்றன.

1. புகழ்பெற்ற பழமையான மூதூர்களாகிய பேரூர்கள்.

2. சிறுமையுடைய சிற்றூர்கள். முதல்வகையைச் சேர்ந்த ஊர்களை 'தொல்திணை மூதூர்' (மலை. 40) 'பழவிறல் மூதூர்' (பெரும்பாண். 402) .தொல்பதி, (பொருநர். 122) என்ற அடைமொழிகளுடன் புலவர்கள் குறிப்பிடுகின்றனர். இரண்டாவது வகையைச் சேர்ந்த சிற்றூர்கள் புகழிலும் பெருமையிலும் சிறுமையுடையன. 'புல்வேய் குரம்பை ஊரென ஊராச் சிறுமை' (அகம். 200: 2—3) உடையதென இச்சிறு குடிகள் கூறப்படுகின்றன. இதைப்போன்ற சிற்றூர்கள் பண்டைத் தமிழகத்தில் மிகுதியாக இருந்தன.

கரிகாலனுடைய நாடு நன்பல்லூர்களை உடையதாக இருந்தது என்று முடத்தாமக்கண்ணியார் பாடுகிறார். (பொருநர் : 170). சோணாட்டைப் புலவர் உருத்திரங்கண்ணனார்.

கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ்சோணாடு (பட்டி: 27—28)

---

3. கரிகாலன் பாணர் பாடிச் சென்றால் 'நன்பல்லூர் நாட்டோடு வேழமும் தருவான்' என்ற முடத்தாமக்கண்ணியார் கூற்று நினைத்தற் குரியது (பொருநர்: 169-173).

என்று அதன் மிகுதியான சிறிய ஊர்களைக் குறிப்பிடுகிறார். தலைவன் தலைவியர் உடன்போக்குச் செல்லும் கானம் குறும்பல்லூர்களை உடைய தாக இருந்தது என்று கூறப்படுகிறது. (நற். 9: 11-12). இவ்வாறு மலிந்திருந்த இச்சிற்றூர்களின் பெயர்கள் எவை என்பது இன்று நமக்குத் தெரியவில்லை.

இனி, கிடைக்கின்ற ஊர்ப்பெயர்களைப் பல படிநிலைகளில் ஆராய வேண்டியிருக்கிறது. முதலாவதாக அப்பெயர்கள் இன்றும் தொடர்ந்து வழக்கில் இருக்கின்றனவா, அப்பெயர்தாங்கிய ஊர்களின் தற்கால இருப்பிடங்கள் எவை, பெயர்கள் என்ன மாற்றங்களைப் பெற்றிருக்கின்றன என்பன போன்ற செய்திகள் ஆயப்படவேண்டும்.

இக்காலத்தில் போரில் ஊர்கள் அழிக்கப்பட்டன (மதுரைக் காஞ்சி: 158, பட்டி: 269—70). அதனால் பல ஊர்ப்பெயர்கள் மறைந்திருக்கலாம். சங்ககாலத்திலேயே அரையம் என்ற நகர் அழிந்து விட்டது (புறம். 202). பிற்காலத்தில் புகார் கடலால் அழிந்தது. ஆனால் அதற்குப் பக்கத்திலிருந்த சாய்க்காடு (நற். 73: 9) இன்றும் இருக்கிறது.

ஊர்ப்பெயர்களில் தற்கால வடிவங்களையும், இருப்பிடத்தையும் கண்டு பிடிப்பது கடினமானது. ஏனெனில் காலப்போக்கில் மொழி மரபுக்கேற்ப ஒலி நிலையில் பெயர்கள் மிகவும் திரிந்து காணப்படுகின்றன. சங்க காலத்தில் 'நன்றா' (பதிற். 8. பதிகம்) என்ற குன்று நண்ணா, திருநணா என்று மாறி இன்று பவானி என்று வழங்குகிறது. சங்ககால ஒய்மான்' களின் புலியூர் இன்று ஓமாம்புலியூர் (சிதம்பரத் திற்கு அண்மையில்) என்று மாறிப்புராணக்கதை பெற்றுவிட்டது. மேலும் ஒரே பெயர்தாங்கிய பல ஊர்கள் தமிழகத்தில் ஆங்காங்கே காணப்படுவது 'உண்மையான' பெயரைக் கண்டு பிடிப்பதைக் கடின மாக்குகிறது. சேரர் தலைநகரமாகிய 'வஞ்சி' என்ற பெயர் மலை நாட்டிலும், கொங்குநாட்டிலும் காணப்பட்டதால் எது உண்மையானது என்று கண்டுபிடிப்பதில் ஏற்பட்ட விவாதம் தமிழ் ஆராய்ச்சி உலகிற்குப் பழங்கதை. இதைப்போலவே ஆலங்காடு என்ற பெயர் கேரளத்தில் (கோழிக்கோட்டிற்குக் கிழக்கே பத்தாவது கல்லில் ஒன்றும், ஆல் வாய்க்கு மேற்கே நான்கு கல்லில் ஒன்றும்) இரண்டும், சோழநாட்டில் ஒன்றும் (தலையாலங்காடு), தொண்டை நாட்டில் ஒன்றும் (பழையனூர் ஆலங்காடு) காணப்படுகின்றது. இப்பெயரில் 'தலை' என்ற அடை

மொழி ஒரே மாதிரியான பல பெயர்களிலிருந்தும் வேறுபடுத்துவதற் காக அக்காலத்திலேயே அமைந்திருந்தது குறிப்பிடற்குரியது.

சங்க காலத்தில் இருந்து இன்று மறைந்து போன பெயர்கள் பல இடைக்காலக் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. எனவே கல்வெட்டுக்களையும், செப்பேடுகளையும் அலசி ஆராய்ந்தால் பல ஊர்ப் பெயர்களின் இருப்பிடங்களைக் கண்டறிய முடியும். காட்டாக, பவ்வத்திரி (அகம். 40:7) என்ற சங்ககாலப் பெயரைக் கல்வெட்டுக் களிலேயே அறிகின்றோம் (இது–இன்று நெல்லூர் மாவட்டம் கூடூர் வட்டத்தில் - ரெட்டிபாளையம் எனப்படுகிறது. பார்க்க: Topographical list of Inscriptions of the Madras Presidency, Nellore No. 237.238,759) இவ்வாறு பல பழைய ஊர்ப்பெயர்கள் கல்வெட்டுக் களால் கண்டறியப்பட்டிருக்கின்றன.[4] சங்க இலக்கியப்பதிப்பாசிரியர் டாக்டர் உ. வே. சாவும் உரையாசிரியர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையும் பல பழைய ஊர்களின் தற்கால இருப்பிடத்தைக் கண்டு காட்டியிருக்கிறார்கள்.

ஊர்ப்பெயர் ஆய்வின் இரண்டாவது நிலை பொருள் விளக்க மாகும். அதாவது ஒவ்வொரு பெயரின் பொருளையும் விளக்கி அதன்

---

4. பார்க்க :

அ. 'சேரர் வஞ்சியும் சிலாசாசன வழக்கும்'

ஆ. 'தேவாரம் பெற்றதலங்களும் சிலாசாசன வழக்கும்'

ஆராய்ச்சித்தொகுதி (1964)

மு. இராகவஐயங்கார், பக்கம் — 244 — 263 ; 280—293.

இ. 'நன்னனது மலை நாடு' டாக்டர். மா. இராசமாணிக்கனார்

பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை மணிவிழாமலர் (1961).

பக்கம் 243 — 252.

ஈ. 'பத்துப்பாட்டும் கல்வெட்டுக்களும்' பக். 101—127

புறநானூறும் கல்வெட்டுக்களும் பக். 128—133

இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும் (1961)

தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்

பொருட் பின்னணியைத் தெளிவுபடுத்துவதாகும். குன்றூர் (நற். 280:8) என்றால் மலையை ஒட்டிய ஊர். வேள் + ஊர் = வேளிர் களுடைய ஊர். (அகம் 166:4) என்று பெயரின் பொருளை விளக்கிக் காட்டவேண்டும்.

சங்கப்பாடல்களிலேயே ஊர்ப்பெயர்களின் பொருள் விளங்கு மாறு-நேர்முகமாகவும், மறைமுகமாகவும் புலவர்கள் பாடியிருக்கிறார் கள். நல்லியக்கோடனுடைய 'எயிற்பட்டினத்தைக்' குறிக்கும் பொழுது அதன் பொருள் விளங்கும் படி 'மதிலொடு ...... பெயரிய பட்டினம்' (சிறுபாண்: 152-3) என்று பாடுகிறார் புலவர். மதுரைக் காஞ்சியில் வரும் 'சீர் சான்ற உயர் நெல்லின் ஊர்' (அடி: 87-88) என்பதை நச்சினார்க்கினியர் சாலி என்னும் நெல்லின் பெயரால் வந்த சாலியூர்' என்று கூறுகிறார். இவ்வாறு ஊர்ப் பெயர்களையே அன்றி மற்றப் பெயர்களையும் இவ்வாறு வேறு விதமாகக் கூறும் மரபு சங்க இலக்கியம் முழுதும் காணப்படுகிறது.5

---

5. ஒப்புநோக்குக:

அ. 'குருகொடு பெயர் பெற்ற மால்வரை'
—பரிபாடல் 5:9 (கிரௌஞ்சம்)

ஆ. 'தொன்மா இலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா இலங்கை' சிறுபாண். 119—20

இ. 'கருவொடு பெயரிய காண்பினல்லில்'நெடுநல்.144(கருவறை)

ஈ. 'நாளொடு பெயரிய கோளமை விழுமரம்'
நெடுநல். 82. (உத்தரம்)

உ. 'பறவைப் பெயர்ப்படு அத்தம்' பெரும்பாண். 305
— இரசான்னம் அல்லது மின்மினி நெல்

ஊ. 'நாவலோடு பெயரிய பொலம்புனை அவிரிழை'
முரு. 18 (சாம்பூநதம்.)

எ. 'செழியன் பெயர்மாண் பெருங்குளம்' நற். 340 : 2—3

ஏ 'பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்' — பதிற். 67 : 2

ஐ. 'கடவுட் பெயரிய கானம்' = (விந்தாடவி) பதிற். 9 : 8 : 2—6

ஒ. 'இருபாற்பெயரிய உருகெழு மூதூர்'
(சிற்றரையம். பேரரையம்) புறம். 202:6—8

ஓ. 'பெரும்பெயர்க்கள்ளூர்' அகம் ; 15

ஔ. 'மறுவொடு பெயரிய மதலை' — (இலட்சு) பெருங்.3, 24, 90—4

சில இடப்பெயர்களைக் கூருது அண்மையிலுள்ள ஓரிடத்தைச் சுட்டும் முறையும் காணப்படுகிறது. திருச்சிராப்பள்ளி மலையின் பெயர் கூருது 'உறந்தைக் குணஅது குன்றம்' (அகம். 4:13-15) என்று பாடுகிருர் புலவர். திருப்பரங்குன்று 'கூடற் குடவயிற்குன்று' (திருமுருகு. 71, அகம். 149: 14—17) என்றே சில இடங்களில் கூறப் படுகின்றது. இதற்குக் காரணம் அவ்விடங்களுக்குப் பெயர்கள் ஏற்பட வில்லையா ? அல்லது ஏற்பட்டுப் பரவலானவழக்கிற்கு வரவில்லையா என்பது தெரியவில்லை.[6]

பிற்காலத்தைப் போலப் புராணக் கதைகளைக் கூறி ஊர்களின் பெயர்க்கு விளக்கம் கூறும் மரபு சங்ககாலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. எனினும் 'திறல் வேல் நுதியில் பூத்த கேணி விறல் வேல் வென்றி வேலூர்' (சிறுபாண்: 172—3)என்ற அடிக்கு நச்சினர்க் கினியர், "முருகன் கையில் வலியினை உடைத்தாகிய வேலின் நுதி போலக்கேணி பூக்கப்பட்ட வெற்றியையுடைய வேலாலே வெற்றியை உடைய வேலூர் என்றது, நல்லியக் கோடன் தன் பகை மிகுதிக்கு அஞ்சி முருகனை வழிபட்ட வழி அவன் இக்கேணியிற் பூவை வாங்கிப் பகைவரை எறியென்று கனவிற் கூறி அதில் பூவைத் தன் வேலாக நிருமித்ததொரு கதை கூறிற்று. இதனனே வேலூரென்று பெய ராயிற்று" என்று விளக்குவதை நோக்கும் போது சங்க காலத்திலேயே இக்கதை இருந்திருக்குமா ? அல்லது நச்சினர்க்கினியர் தன் காலக் கருத்தை (14-ஆம் நூற்.) இங்கு ஏற்றுகிருரா என்ற ஐயம் நமக்கு எழுகிறது. பொதுவாகப் புராணக்கதைகள் பெருவீரர்கள் இறந்த பின்னர்தான் அவர்களை மையமாகக் கொண்டு புனையப்படும். ஆனல் இங்கு நல்லியக் கோடன் வாழ்ந்த காலத்திலேயே வேலூர் இருந் திருக்கிறது. அவனுக்கு முன்பும் அவ்வூர் இருந்திருக்கலாம். எனவே நல்லியக் கோடன் இறந்ததன் பின் வெகுகாலத்திற்குப் பின்னர்தான் இப்புராணக் கதை தோன்றியிருக்கவேண்டும். அக்கதையையே

---

6. பெயருள்ள ஊர்களைக் கூடப்புகழ்வாய்ந்த ஓர் இடத்தைக் குறிப்பிட்டுக் கூறும் மரபு காணப்படுகிறது. பார்க்க :
   நறும்பூஞ்சாரற் குறும்பொறைக் குண அது
   ..................................................
   ..................................................
   சேண்விளங்கு சிறப்பின் ஆமூர் (அகம். 159 : 14 — 19)

நச்சினார்க்கினியர் இங்கு பொருத்திக்காட்டினாராதல் வேண்டும். இருந்தபோதிலும் இதைப்போன்ற நம்பிக்கைகளும் கதைகளும் சங்க காலத்தில் இருந்திருக்கவே முடியாது என்று தள்ளி விடவும் முடியாது. ஏனெனில் அந்தக் காலத்தில் கோயில்களைப் பூதங்கள் காக்கின்றன (பூதம் காக்கும் புகலருங் கடிநகர் – பூதங்கள் வாசலிலே காத்திருக்கும் புகற்கரிய அச்சத்தையுடைய காளிகோட்டம் - பட்டி: 57) என்பது போன்ற நம்பிக்கைகள் இருந்திருக்கின்றன. ஒவ்வொரு ஊரிலும் அந்தணர்கள் இருந்திருக்கின்றனர். (அந்தணர் அருகா அருங்கடி வியனகர் அந்தணகிடங்கின் அவன் ஆமூர். சிறுபாண்: 187-8). அந்தணர்கள் தனி ஊர்களிலும் வசித்தனர் (மறை காப்பாளர் உறைபதி—பெரும்பாண்: 301). இவ்வாறு வைதிக நெறியினர் செல்வாக்குடன் வாழ்ந்திருந்ததைப் போலவே வைதிகப் புராண நம்பிக்கைகளும் அக்காலத்தில் இருந்திருக்கலாம். இது இன்னும் ஆழ்ந்த ஆராய்ச்சிக்குரியது.

# 9. சங்ககால ஊர்ப்பெயர்கள் — ஒரு பகுப்பாய்வு

சங்க இலக்கியப் பாடல்களின் அகத்திலிருந்து சுமார் 200 ஊர்ப் பெயர்களும், பாடல்களின் கொளு அல்லது பதிகம் ஆகியவற்றிலிருந்து சுமார் 100 ஊர்ப்பெயர்களும் தெரிய வருகின்றன. சங்ககாலப் பகுதியில் தமிழகப் பகுதியில் இருந்த மொத்த ஊர்களின் எண்ணிக்கை பற்றி தற்கால ஆராய்ச்சி முடிவுகளிலிருந்து மதிப்பீடு செய்ய இயலவில்லை. பாரியின் நாட்டில் முன்னூறு ஊர்கள் இருந்தன (புறம்.110:3). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னைப்பாடிய குமட்டூர்க் கண்ணனுருக்குப் பிரமதாயமாகக் கொடுத்த பரிசில் உம்பற்காட்டு ஐஞ்னூற்றூர். கபிலருக்குச் செல்வக் கடுங்கோ வாழியாதன் மலைமேல் ஏறிநின்று கண்ணுக்குத்தெரிந்த ஊர்களை எல்லாம் பரிசிலாக வழங்கியிருக்கிறான் (பதிற். 85:1-13; பதிற். 7ஆம் பதிகம்). ஓரி என்ற வள்ளல் குறும்பொறை நன்னாடு என்ற பகுதியைக் கோடியர்க்கு ஈந்திருக்கிறான். கரிகாலன் பாணர் பாடிச் சென்றால் நன்பல்லூர் நாட்டோடு வேழமும் தருவான் என்ற முடத்தாமக் கண்ணியார் கூற்று நினைத்தற்குரியது (பொருநர். 169-173); இதே புலவர் கரிகாலன் நாட்டை 'கொழும் பல்குடிச் செழும் பாக்கத்துக் குறும்பல்லூர் நெடுஞ்சோணாடு' (பட். 27-28) என்று பாடுகிறார். இதிலிருந்து பெரியனவாய தொல்பதிகளான ஊர்களும், சிறியனவாய 'ஊரென உணராச் சிறுமையுடைய' சிற்றூர்களும் (அகம். 200: 2-3) அக்காலத் தமிழகத்தில் நிறைய இருந்தன என யூகிக்கலாம். இலக்கியத்தில் அக்காலத்திருந்த மிகச்சில ஊர்களே இடம் பெற்றிருக்க வாய்ப்புண்டு என்றாலும், அவற்றை வகை மாதிரிகளுக்குரிய பிரதிநிதிகளாகக் கொண்டு, பகுப்பாய்வு செய்து அக்கால ஊர்ப்பெயரமைப்பு முறை, பழக்க வழக்கம் ஆகிய பிற செய்திகளை அறியமுயலலாம்.

மொத்தமுள்ள 300 பெயர்களும் அகரவரிசைப் படுத்தி பொதுக் கூறு, சிறப்புக்கூறு என்று வகை செய்யப்பட்டன. அவற்றில் சுமார் 67 பொதுக் கூறுகள் காணப்படுகின்றன.

(1. எண்ணின் கீழ்வருபவை பாடலுள் வரும் பெயர்கள். 2. எண்ணின் கீழ் வருபவை கொளு, பதிகம் முதலியவற்றில் காணப் படுபவை. பிறைக் குறிக்குள் உள்ள எண்கள் பொதுக்கூறு அமையும் மொத்த ஊர்களின் எண்ணிக்கையைக் குறிக்கும்)

**பொதுக்கூறுகள் :**

*அகம்* (3)
ஏரகம்
(காழ்-அகம்)
உரோடகம்
ஒரோடகம்
*அடி* (1)
நல்லடி
*அத்திரி* (1)
பவ்வத்திரி
*அம்பலம்* (2)
வெள்ளியம்பலம்
கொ (கோ)ட்டம்பலவனர்.
*ஆரணியம்*(1)
தண்டாரணியம்
*ஆறு* (10)
இடையாறு
காப்பியாறு
காரியாறு
சிலம்பாறு
சேயாறு
தலையாறு
பேராறு
பொறையாறு
வாட்டாறு
வேலாறு

*இல்* (15)
1) அரிசில்
அழும்பில்
இடும்பில்
(எயில்)
ஏழில்
கள்ளில்
செந்தில்
நாஞ்சில்
பொதியில்
(முது வெள்ளில்-ஐ)
விளங்கில்
2) அஞ்சில்
கிடங்கில்
பொதும்பில்
பொருந்தில்
*ஊர்* (87)
1) அழுந்தூர்–அழுந்தை
அள்ளூர்
ஆதிஅருமன் மூதூர்
ஆமூர்
ஆவூர்
இடைக்கழி நாட்டு நல்லூர்
இரணியமுட்டத்து பெருங்குன்றூர்
இருந்தையூர்

ஈர்ந்தூர்—ஈர்ந்தை
உறத்தூர்
உறையூர்—உறந்தை
ஊணூர்
ஓகந்தூர்
கட்டூர்
கரும்பனூர்
கருவூர்
கள்ளூர்
காட்டூர்
காமூர்
குமட்டூர்
குழுமூர்
குறும்பூர்
குன்றூர்
கொடுகூர்
கொடுங்கால்லூர்
கொன்னூர்
கோட்டூர்
கோவலூர்
சாலியூர்
செல்லூர்—செல்லி
தகடூர்
தேனூர்
நல்லூர் (இரணியமுட்டம்)
நன்பலூர்
சிறுநல்லூர்
நாலூர்
நீடூர்
பருவூர்
பாமுளூர் (பாமுள் + ஊர்)
பிடவூர் — (சோணாட்டுப்)
பூஞ்சாற்றூர் — (,, )
பெருங்குன்றூர்
(இரணியமுட்டத்துப்)
பேரூர்
மருங்கூர் (பட்டினம்)
முத்தூர் (முத்தூறு)
முள்ளூர் (க் கானம்)
மையலூர்
மையூர்
மோகூர்
வியலூர்
வெள்ளூர்
வேலூர்
வேளூர்
2) ஆலத்தூர்
ஆமூர் (முக்காவல் நாட்டு)
இடைக்குன்றூர்
இளம்புல்லூர்
உமட்டூர்
உவர்க்கண்ணூர்
எருக்காட்டூர்
எறிச்சலூர் — (கோனாட்டு)
ஐயூர்
ஒக்கூர்
ஒல்லையூர்
கடம்பனூர்
கடலூர் (கூடலூர்)
கடியலூர்
கம்பூர்
கயத்தூர்
குறுங்கோழி(ளி)யூர்
கூடலூர்
கொடியூர் (கோடியூர்)
கோட்டியூர்

கோவூர்
கோளியூர்
செயலூர்
(துறையூர் ஓடை)
தொண்டி ஆமூர்
நல்லாவூர்
படுமரம் (படுமாற்றூர் - பா.பே.)
புதுக்கயத்துக் கம்பூர்
புல்லாற்றூர்
மாடலூர்
மாற்றூர்
முக்காவல் நாட்டு ஆமூர்
முகையலூர் — சோணாட்டு
முரஞ்சியூர்
முள்ளியூர்
விரிச்சியூர்
விரியூர்
வேம்பற்றூர்
*ஊற்று* (2)
முத்தூர்க் கூற்றம்
முத்தூற்றுக் கூற்றம்
விற்றூற்று (மூதெயினனார்)
*எயில்* (5)
(எயில்–பட்டினம்)
ஏழெயில்
கானப்பேர் – எயில்
தூங்கெயில்
மூவெயில் { முதுபுரிசை / புரிசைநாடு }
பேர் எயில்
*கடம்* (1)
வேங்கடம்
*கடை / கடையம்* (3)
மதுரை ஓலைக்கடை
மதுரை ஓலைக்கடையம்

மதுரை கள்ளிற்கடையம்
*கணி* (1)
காமக்கணி
*கயம்* (2) (கயத்தூர்)
புதுக்கயம்
பொதுக்கயம்
*கல்*–(2)
கொடுங்கால் + ஊர்
தங்கால்
முக்கல்
*கழி* (1)
இடைக்கழி–நாடு
*கா* (1)
திருவெஃகா
*காடு*-(5)
ஆர்க்காடு
உம்பற்காடு
சாய்க்காடு (கானம்)
மாங்காடு
இடைக்காடு
*கால்*–(1)
கொடுங்கால்-ஊர்
தங்கால்
*கானம்* — (7)
ஆலங்கானம் — தலை
ஓரிகானம்
கடவுட்பெயரியகானம்
— விந்தாடவி
கொண்கானம்
சாய்க்கானம்
நள்ளிகானம்
முள்ளூர் –க் கானம்
*கானல்* (1)
(கானலம் பெருந்துறை
கானலந் தொண்டி)
நெய்தலங் கானல்

*குடி* (11)
ஆவிநன்குடி
—ஆய்க்குடி
கள்ளிக்குடி
சிறுகுடி
மணக்குடி (அகம்-பாயிரம்)
மாங்குடி
ஆல்ங்குடி
இறங்குகுடி
உகாய்க்குடி
குறுங்குடி
சிறைக்குடி
வெள்ளைக்குடி
*குன்றம் / குன்று (ஊர்)* (12)
அரலைக்குன்றம்
ஆன்குன்று
இருங்குன்றம்
ஏழிற் குன்றம்
குன்ற நாடு
சேய் குன்றம்
தேமுது குன்றம்
பரங்குன்றம்
பல்குன்றம் (பல்குன்றக் கோட்டம்)
மாலிருங்குன்றம்
முதுகுன்றம்
வென்வேலான் குன்று
பூங்குன்று
*கூற்றம்* (3)
மிழலைக் கூற்றம்
முத்தூர்க் கூற்றம்
முத்தூற்றுக் கூற்றம்

*கோட்டம்* (2)
பல்குன்றக் கோட்டம்
(கோட்டம்பலவன்)
குடவாயில் கோட்டம்
*கோடு* (1)
கோண்மா நெடுங் கோட்டனார்?
*கோழி* (5)
கோழி
பெருங்கோழி
கருங்கோழி
குறுங்கோழியூர்
கோளி-யூர்
*சிலம்பு* (1)
(சிலம்பாறு)
பாழிச்சிலம்பு
*சிறை* (1)
ஒருசிறைப் [பெரியனார்]
*சிறைக்/குடி*
*சேரி* (1)
ஏணிச்சேரி
*ஞாழல்* (1)
அளக்கர் ஞாழல்
குமிழி ஞாழல் (ஞாழல்வாயில்)
*தலை* (10)
1) கழாத்தலை/கழாஅர்த்தலை
குராலம் பறந்தலை
குறுக்கைப் பறந்தலை
கூடற் பறந்தலை
மருவூர்ப் பறந்தலை
பாழிப் பறந்தலை
பெருந்தலை
வாகைப் பறந்தலை
2) இரும்பிடர்த்தலை
*சீத்தலை*-

*துறை* (8)
1) கானலம் பெருந்துறை
குமரியம் பெருந்துறை
திருமருத முன்றுறை
திருமருத நீர்ப் பூந்துறை
தொண்டி முன்றுறை
புன்றுறை?
வாகைப் பெருந்துறை
வீரை முன்றுறை
2) ஆடுதுறை
(துறைக் குறுமா)
(துறைக்குடி)
துறையூர்
*நகர்* (1)
கபிலநகர்
*நத்தம்* (1)
இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தம்
*நல்லூர்* (3)
இடைக்கழி நாட்டு நல்லூர்
நல்லூர் நன்பலூர்ச் சிறுமேதாவி[யார்
சிறுநலூர்
நாலை
நல்லூர்
நாலூர்
*நாடு* (12)
இடைக்கழி நாடு
இடையள நாடு
எருமை நன்னாடு
ஓய் மானாடு
காட்டு நாடு
கோனாடு
சோனாடு
துளு நாடு
பாணநன்னாடு
மழ நாடு
முக்காவல் நாடு
வல்வேற் கட்டி நன்னாடு
இறங்கு குடிக்குன்ற நாடு
பறநாடு
*நியமம்* (1)
கோசர் நியமம்
நொச்சி நியமம்
*பட்டினம்* (3)
எயில் பட்டினம்
காவிரிப் பூம்பட்டினம்
மருங்கூர்ப் பட்டினம்
*படப்பை* (1)
காவிரிப் படப்பை
*பதி* (1)
முதுபதி
*பள்ளி* (3)
இலவந்திகைப் பள்ளி
குராப் பள்ளி
சிக்கற் பள்ளி
*பறந்தலை* (6)
குராலம் பறந்தலை
குறுக்கைப் பறந்தலை
கூடற் பந்தலை
பருவூர்ப் பந்தலை
பாழிப் பறந்தலை
வாகைப் பறந்தலை
வெண்ணிப் பறந்தலை
*பாக்கம்* (2)
பாக்கம்
பெரும்பாக்கன்
*பாகை* (1)
மருங்கூர்ப் பாகை

*பாரம்* (1)
நெடும் பாரம்
*பாழி / ஆழி* (2)
செருப்பாழி (செருப்பு)
பாழி
பாழிச் சிலம்பு
பாழிப் பறந்தலை
*புரம்* (1)
திரிபுரம்
*புலம்* (2)
குடபுலம்
மழபுலம்
*புறம்* (2)
திருப்போர்ப்புறம்
வண்ணப்புறம்
*பெயற்று* (1)
நீர்ப்பெயற்று
*பேடு* (1)
கச்சிப் பேடு (காஞ்சி)
*பேர்* (1)
கானப்பேர் + எயில்
பேரெயில்
முப்பேர்
*பேரி* (2)
ஆலம் பேரி
பேரி [சாத்தனார்]
*பொறை* (1)
குறும்பொறை
[பொறையாறு]
*மங்கலம்* (2)
கிள்ளி மங்கலம்
கொடி மங்கலம் }
கோடி மங்கலம் }
*மணம்* ( 2 + 2)
அரிமண (ம்) வாயில்

கொடுமணம்
(மணக்குடி)
(பெரு) மணவாயில்
*மணி* (2)
வெண்மணி வாயில்
வெண்மணி - பூதியார்
*மலை* (3)
கன் மாமலை
குதிரை மலை
சிறு மலை
*மா* (3)
கோண்மா நெடுங் கோட்டனார்
செங்கண்மா
பல்குன்றக் கோட்டத்து
துறைக்குறுமா
துறைக்குடி
*மாடம்* (1)
சித்திரமாடம்
*மிளை* (2)
வல்லத்துப் புறமிளை
மிளை
*முட்டம்* (1)
இரணியமுட்டம்
*முற்றம்* (3)
ஆலமுற்றம்
குளமுற்றம்
கோக்குளமுற்றம்
*வாய்* (2)
அலைவாய்
ஆலவாய்
பேராலவாய்
(மதுரை)
*வாயில்* (8)
அட்டவாயில்
அரிமண வாயில்

| | |
|---|---|
| கடம்பின் பெருவாயில் | (பெரு) மணவாயில் |
| குடந்தைவாயில் | —உறத்தூர் |
| குடவாயில் | வெண்மணி வாயில் |
| குடவாயில் கோட்டம் | (வாயிலான் வாயில்) |
| பெருவாயில் | வைப்பு(!) |
| | காவிரி வைப்பு |

**பொதுக் கூறுகளின் எண்ணிக்கை :**

மிக அதிகமான எண்ணிக்கையில் காணப்படும் பொதுக்கூறு ஊர் (87) என்பதாகும். இதை அடுத்து இல் (15), குன்றம் (12), நாடு (12), குடி (11), ஆறு (10), தலை (10) ஆகியவைகள் காணப்படுகின்றன. இவற்றை அடுத்து இறங்கு வரிசையில் துறை (8),, வாயில் (8), கானம் (7), பறந்தலை (6), எயில் (5), காடு (5) கோழி (5), முதலியவை அமைகின்றன. சுமார் 9 கூறுகள் மும்மூன்ருகவும், சுமார் 17 கூறுகள் ஈரிரண்டாகவும், சுமார் 28 கூறுகள் ஒன்றே ஒன்ருகவும் அமைகின்றன.

**பொதுக் கூறுகளின் வகைகள் :**

பொதுக் கூறுகளை கீழ்க் காணுமாறு வகைப்படுத்தலாம்.

**1) இயற்கை அமைப்பை விளக்கும் பொதுக் கூறுகள் (17) :**

| | |
|---|---|
| அத்திரி | கோடு |
| ஆரணியம் | சிலம்பு |
| கடம் | படப்பை |
| கல் | பறந்தலை |
| கா | புலம் |
| காடு | பொறை |
| கானம் | மலை |
| கானம் | வைப்பு |
| குன்றம் / குன்று | |

**2) நீர்நிலைகளோடு தொடர்புடைய பொதுக் கூறுகள் (8) :**

| | |
|---|---|
| ஆறு | |
| ஊற்று | சிறை |
| கயம் | துறை |
| கழி | (பட்டினம்) |
| கால் | படப்பை |

3) செயற்கை அமைப்புக்களை விளக்கும் பொதுக்கூறுகள் (6)

| | |
|---|---|
| அம்பலம் | (பள்ளி) |
| இல் | மாடம் |
| எயில் | மிளை |
| கடை | |

4) தொடர்புண்மைகளைச் சுட்டும் பொதுக்கூறுகள் (7) :

| | |
|---|---|
| (அகம்) | முற்றம் |
| அடி | வாய் |
| தலை | வாயில் |
| புறம் | |

5) குடியிருப்புப் பகுதிகளைச் சுட்டும் பொதுக் கூறுகள் (20):

| | |
|---|---|
| அகம் | பட்டினம் |
| அம்பலம் | பதி |
| இல் | பள்ளி |
| ஊர் | பாக்கம் |
| குடி | பாகை |
| சேரி | புரம் |
| நகர் | புறம் |
| நத்தம் | பேடு |
| நல்லூர் | மங்கலம் |
| நாடு | முற்றம் |

6) தெருப் பெயர்ப் பொதுக் கூறுகள் (2) :

| | |
|---|---|
| சேரி | நியமம் |

7. நாட்டுப் பிரிவுப் பொதுக் கூறுகள் (4) :

| | |
|---|---|
| கூற்றம் | நாடு |
| கோட்டம் | பாகை |

8. பிற பொதுக்கூறுகள் (12) :

| | |
|---|---|
| கணி | பேடு |
| கோழி | பேர் |
| ஞாழல் | பேரி |
| பாரம் | மணம் |
| பாழி | மணி |
| பெயற்று | மா |

இவற்றில் அத்திரி, ஆரணியம், புரம், மங்கலம், மாடம் இவைகள் ஐந்தும் வடமொழிச் சொற்கள் ஆகும்.

*சிறப்புக் கூறுகள் :*

பொதுக் கூறுகளுக்கு முன் அடையாக வரும் கூறுகளையே சிறப்புக் கூறுகள் என்கிறோம். இவற்றில் முதல்நிலைச் சிறப்புக்கூறு, இரண்டாம் நிலைச் சிறப்புக்கூறு என்றெல்லாம் பிரித்தாலும் இங்கு பொதுவாகவே சிறப்புக் கூறுகளைப் பற்றிப் பேசப்படும். பொதுக்கூறு களைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

**1. விளக்கப் பெயர்கள் ;**

**(அ.) இயற்கை அமைப்புக்கள் :**

1. *தாவரங்கள்* (31) : அரலை, ஆர், ஆல், இருப்பை (ஏழில்), கடம்பு, கரும்ப(ன்), கள்ளி, குரா, சாய், சாலி, (தோன்றி), மருதம், (பிடவம்), மரா, முள், வஞ்சி, வாகை, வேல், இளம்புல், உகாய்,, எரு, கடுகு, காஞ்சி, குறுங்கோளி, கோளி, நொச்சி, படுமரம், புல் பூ, முள்ளி, வேம்பு.

2. *விலங்குகள்* (11): ஆ (ஆன்), உம்பல், எருமை, ஏறு, குதிரை, குராலம் (பசு), (கோட்டான்), குறுக்கை (புலி), கோழி, தகடு, காக்கை, குறுங்கோழி.

3. *நீர்நிலைகள்* (13) ; அலை, காவிரி, குமரி, குளம், கூடல், நீர் (ப்பெயற்று) (பெண்ணை), பொருநை, கடல் (கூடல்—பா. பே.), கயம், கோக்குளம், சிறை, துறை, புல்லாறு, பேரால (ம்) வாய்.

4. *நிலஅமைப்பு* (18) ; இடைக்கழி, இடையளம், கல் (மாமலை), காடு, கானல், கானம், குன்று, கோடு, சிலம்பு, நெய்தல் பல்குன்றம், பெருங்குன்று, பொறை, மணல், இடைக்குன்று, உவர்க் கண், எருக்காடு, கிடங்கு.

**(ஆ) செயற்கை அமைப்புக்கள் (8) :**

எயில், குடவாயில், செருப்பு, வெண்மணி, ஏணி, கொட்டு, போர், கொடி.

**இ) தொடர்புண்மைகளும் பிற அடைகளும் (40) :**

(1) *தொடர்புண்மை* (23): இடை, இரும், உறை, ஊண், கரு, குட, குறும், கொடு, கோடு, சிறு, செம், தலை, தேமுது, நல், நெடும், பல், பெரும்/பேர், முத்து/முது, இளம், புது, பொது, மாறு, வட (க்கு)

(2) *பிற அடைகள்*

*எண்கள்* (4) : மூன்று, அஞ்சு (அஞ்சில்?) ஐயூர்? அட்டம் (எட்டு?)

*பிற* (13): ஏர், கட்டு, கபிலம், கரு, சேய், தூங்கு(தல்) வாட்டம், வெள்ளி, வேம், போ, தண், வெள், வண்ணம்.

**(ஈ) ஊர்ப்பெயர் அல்லது நாட்டுப்பிரிவுகள்**

1. *ஊர்ப்பெயர்கள்* (23): அரிமணம், கழாஅர், கானல், குடந்தை, குடவாயில், குமரி, கூடல், திருப்போர், தொண்டி, சிக்க(கி)ல், பருவூர், பாழி, அரிமணவாயில், மருங்கூர், முள்ளூர், வல்லம், வாகை, வீரை, வெண்மணி, இறங்கு குடி, துறையூர் (ஓடை), தொண்டி, (நொச்சி), மதுரை.

2. *நாட்டின் உட்பிரிவுகள்* (10): இடைக்கழிநாடு, இரணிய முட்டம், பல்குன்றக் கோட்டம், சோணாடு, மிழலைக் கூற்றம், இறங்கு குடிக்குன்ற நாடு, காட்டு நாடு, கோணாடு, பறநாடு, முக்காவல் நாடு

**(உ) ஆட்பெயர்கள்**

1. *தனி ஆட்பெயர்கள்* (11): எருமை, ஓரி, கரும்பன், காரி, சேய், நள்ளி, மால், வல்வேற்கட்டி, வென்வேலான், கடம்பன், கிள்ளி.

2. *சாதிப்பொதுப் பெயர்-தனி ஆட்பெயராய் அமைதல்* (5): அதி அருமன், ஆவி, (இரணியன்), ஓய்மான், பாணன், கோ.

3. *சாதிப்பொதுப் பெயர்* (2): குறும்பு, மழ(வர்)

**(ஊ) பிற** (2) :

சித்திரம் (சித்திரமாடம்), தேன் (தேனூர்)

திரு என்ற அடைமொழியும் திருப்போர்ப்புறம், திருமருத முன்றுறை (திருமருத நீர்ப்பூந்துறை), திருவெஃகா போன்ற பெயர்களில் காணப்படுகிறது.

**ஒரு கூற்றுப்பெயர்கள் :**

பொதுக்கூறு, சிறப்புக்கூறு என்று பிரிக்க இயலாவண்ணம் சுமார் 84 பெயர்கள் காணப்படுகின்றன. இவைகளில் பலவும் தொடக்கத்திலேயே ஒரு கூற்றுப் பெயர்களாய் அமைந்தவையாயும் (அம்பர், குச்சி, தொண்டி, நன்று, பிசிர், முசிறி, வேம்பி போன்றன),

மருஉ வடிவம் தாங்கியவையாயும் (போந்தை, மாந்தை போன்றன), புலவர்களால் கடை குறைத்துப் பாடப்பட்டனவுமாய் (கோவல் - கோவலூர்) அமைகின்றன. சிறப்பு, பொது என்ற கூறுகள் இல்லாத ஒரு கூற்றுப் பெயர்கள் பலவும் மிகவும் பழமையானவையாகப் பெயராராய்ச்சி அறிஞரால் கருதப்படுகின்றன.

பாடலின் அகத்து வருபவை

அகப்பா
அம்பர்
அயினர்
அரங்கம்
அரையம்
  சிற்றரையம்
  பேரரையம்
இருப்பை
இலங்கை
  மாவிலிங்கை
ஈர்ந்தை
ஈழம்
எயில்
ஏறு–ஏறை
கச்சி
கடவுட் பெயரிய கானம்
  —விந்தாடவி
கண்டீரம்
கவிரம்
கழாஅர்
கழுமலம்
குடந்தை
குடுமி
(குண்டுகட்பாலியாதன்)
குமரி
குருகொடு பெயர்பெற்றவரை
கூடகாரம்
கூடல்

கொல்லி
கொற்கை
கோவல்–லூர்
கோழி
பெருங்கோழி
செல்லி–செல்லூர்
சையம்
தாமான் தோன்றி
துவரை
தொண்டி
  கானலம் தொண்டி
தொண்டை
தோட்டி
  பெரும்பெயர்த்தோட்டி
நவிரம்
நறவு
நன்று
நாலை
  நல்லூர்
  நாலூர்
நீழல்
நேரி
(பஃறுளி)
பந்தர்
பறம்பு
பாடலி
பாரம்
பாலை

| | |
|---|---|
| பாழி | மையல் |
| பிசிர் | மையோடக் கோவன் |
| பிரம்பு | மையலூர் |
| புகாஅர் | மோசி |
| புறந்தை | வஞ்சி |
| பூழி | வல்லம் |
| பெண்ணை | வல்லார் |
| பொத்தி | வலாஅர் |
| பொருநை | வாகை |
| போந்தை | வானி |
| மரந்தை | விச்சி |
| மாந்தை | வெண்ணி |
| மல்லி | வெதிரம் |
| மிழலை | வெளி-வெளியம் |
| முசிறி | வேம்பி |
| முதிரம் | வேம்பின் பொருப்பன் |

**கொளு, பதிகம் முதலியவற்றில் வருபவை**

| | |
|---|---|
| அந்தி | குளம்(பனூர்) |
| அல்லம் | படுமரம் |
| ஆலி | (படுமாற்றூர்) |
| (ஐயாதி) | மதுரை |
| கடுகு | (மாரேுக்கம்) |
| (கல்லாடம்) | மிளை |
| காக்கை | மோசி |
| காரி | வடமோதம் |

**பெயரமைப்பு முறைகள் :**

மேற்கண்ட பகுப்பாய்வால் அறியலாகும் பெயரமைப்பு முறை, பிற செய்திகள் ஆகியவற்றைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துரைக்கலாம்.

1) இயற்கை அமைப்புக்கள் நீர்நிலைகள் ஆகியவற்றைக் கொண்டு அதிகம் பெயர்கள் தோன்றியுள்ளன (பொதுக்கூறு 25, சிறப்புக்கூறு–73). மக்கள் வாழ்க்கையில் இயற்கையின் செல்வாக்கை இது உணர்த்துகிறது.

2) அடுத்த நிலையில் குடியிருப்புப் பெயர்களும் ஊர்ப்பெயரின் பொதுக் கூற்றுக்குக் காரணமாயிருந்தன (20).சங்க காலத்தில் ஊர்(87)

இல் (12), நாடு (12) ஆகிய விகுதிகள் பெற்றிருந்த செல்வாக்கு இதை உறுதிப்படுத்துகிறது.

3) ஊர்ப்பெயர்களே பல ஊர்களுக்கு (23) அடையாக வருவதால் புதிய ஊர்களை ஒட்டிக் காணப்பட்ட பழைய ஊர்களை அறிய முடிகிறது.

4) நாட்டு நிர்வாகப் பிரிவுகளாகக் கோட்டம், கூற்றம், நாடு முட்டம் ஆகியன அக்காலத்திலேயே வழங்கிவந்தமை தெரிகிறது.

5) மங்கலம் (2) – நல்லூர் (3) ஆகிய ஊர்ப் பெயர் விகுதிகள், அக்காலத்திலிருந்தே பார்ப்பனக் குடியிருப்புக்கள் மங்கலம், நல்லூர் என்ற பெயர் விகுதிகள் பெறும் முறை தோன்றிவிட்டது என்பதைத் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியம், ஒவ்வொரு ஊர்களிலும் அந்தணர் வசித்ததையும் (சிறுபாண்: 187–188), தனி ஊர்களில் வசித்ததையும் (மறைகாப்பாளர்உறைபதி – பெரும்பாண்: 301) தெரிவிக்கிறது. அச்செய்திகளை இவ்வூர்ப்பெயர்ச்சான்று ஆதார பூர்வமாக உறுதிப் படுத்துகிறது. மேலும் வடமொழியிலிருந்து ஐந்து ஊர்ப்பெயர்ப் பொதுக்கூறுகள் இருப்பதும், வடமொழியிலிருந்து பெயர்க்கப்பட்ட பெயர் வடிவங்கள் காணப்படுவதும் (உதாரணம் : 'கடவுட்பெயரிய கானம் – விந்தாடவி' – பதிற். 9:8:2–6; குருகொடு பெயர்பெற்ற மால் வரை – கிரௌஞ்சம்' – பரி. 5:9) பண்டைத் தமிழகத்தில் வடமொழி வாணர் செல்வாக்கைக் காட்டி நிற்கின்றன.

6) ஒரே ஊருக்குப் பல பெயர்கள் காணப்படுகின்றன. (செந்தில் – அலைவாய்; கச்சி (ப்பேடு) - காஞ்சி). இதேபோல ஒரே பெயர் பல்வேறு நாடுகளிலும் காணப்படுகிறது (அழும்பில், ஆலங் கானம், ஆய்குடி).இவை ஒரே சமயத்தில் பல இடங்களிலும் தோன்றி யவையாக இருக்கலாம் அல்லது குடிப்பெயர்ச்சியின் விளைவாகலாம். இதனால் இலக்கியம் கூறும் உண்மையான இடத்தைக் கண்டறிவதில் இடர்ப்பாடுகள் நேருகின்றன. இதனால் தான் அக்காலத்தவர் நாடு, கோட்டம், கூற்றம் என அடை கொடுத்து வேறுபடுத்தியிருக்கின்றனர்.

7) சங்க இலக்கியப் புலவர்கள் பலரும் – மரூஉப் பெயர் வடிவங்களை அதிகம் செய்யுளில் பயன்படுத்துகின்றனர் (காட்டு : அழுந்தூர் - அழுந்தை; பொறையாறு – புறந்தை). இது அக்காலச் செய்யுள் மரபென்று தோன்றுகிறது. ஆனால் மரூஉ வடிவங்களை

ஒத்த பெயர் வடிவங்களும் காணப்படுகின்றன. (வீரை, போந்தை, வேம்பி). இவற்றின் மூலவடிவங்கள் எவை எவை என்பது ஆராயத் தக்கது.

8) அக்காலப் புலவர்கள் பெயர்களின் பொருள் விளங்கச் சில இடங்களில் பாடியிருக்கின்றனர். 'உழாநாஞ்சில்' (புறம். 139:8) ஊராக் குதிரை (புறம்.168:14), 'சூடாவாகை' (அகம். 125:19).

9) அக்கால இயற்பெயர்கள் பலவும் ஊர்ப்பெயர்களை அடுத்து வருகின்றன. சங்க காலத்தை அடுத்த தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக் களில் காணப்படும் பெயர்களில் 25 சதவீதமும் சங்க இலக்கியப் புலவர் பெயரில் 40 சதவீதமும் ஊர்ப்பெயரோடு தொடங்குகின்றன.

10) ஊர்ப்பெயரின் பரப்புநிலையை (Distribution) அறியும் முயற்சி தற்சமயம் செய்ய முடியவில்லை. பல பெயர்களின் உண்மை யான இருப்பிடங்களைக் கண்டு உறுதி செய்யப்பட்டபின் தான் இம் முயற்சியைப் பயனுள்ள முறையில் செய்ய முடியும்.

11) ஆவூர்/ஆமூர், கழாஅர்த்தலை/கழாத்தலை போன்ற பாடபேதங்கள் ஊர்ப்பெயர்களில் ஏற்பட்ட ஒலி மாற்றங்களைக் குறிப் பனவாக இருக்கலாம்.

## பின்னிணைப்பு

### 1. சங்கப் பாடல்களின் அகத்து வரும் ஊர்ப்பெயர்கள்

அகப்பா
அட்டவாயில்
அம்பர்
அயிரை
அரங்கம்
அரலைக்குன்றம்
அரிசில்
அரிமணவாயில்
அரையம்
　சிற்றரையம்
　பேரரையம்
அலைவாய்
அழுந்தூர்
　அழுந்தை
அழும்பில்
அள்ளூர்
அளக்கர் ஞாழல்
ஆதி அருமன் மூதூர்
ஆமூர்
ஆர்க்காடு
ஆலங்கானம்
　தலையாலங்கானம்
ஆலமுற்றம்
ஆவிநன்குடி
　ஆய்குடி
ஆவூர்

குடவாயில்
குடவாயில்கோட்டம்
குடுமி
[குண்டுகட் பாலியாதன்]
குதிரை (மலை)
குமட்டூர்
குமரி
குமரியம் பெருந்துறை
குராப்பள்ளி
குராலம் பறந்தலை
குருகொடு பெயர்பெற்றவரை
குளமுற்றம்
(கோக்குளமுற்றம்)
குழுமூர்
குறுக்கைப்பறந்தலை
குறும்பூர்
குறும்பொறை
குன்றூர்
கூடகாரம்
கூடல்
கூடற்பறந்தலை
கொடுகூர்
கொடுங்கால்லூர்
கொடுமணம்
கொண்கானம்
கொல்லி
கொற்கை
கொன்னூர்
கோட்டூர்
கோடி
கோடை
கோவல்
கோவலூர்
கோழி
பெருங்கோழி
சாய்க்காடு
சாய்க்கானம்
சாலியூர்
சிக்கற்பள்ளி
சித்திரமாடம்
சிலம்பாறு
சிறுகுடி
சிறுமலை
செங்கண்மா
-பல்குன்றக்கோட்டத்து
செந்தி
செந்தில்
செருப்பாழி
செருப்பு
செல்லி
செல்லூர்
சேயாறு
சேய்குன்றம்
சையம்
ஞாழல்
(ஞாழல் வாயில்)
குமிழி ஞாழல்
தகடூர்
தண்டாரணியம்
தலையாறு
(தாமான்)தோன்றி
திரிபுரம்
திருப் போர்ப்புறம்
திருமருதமுன்றுறை
-திருமருதநீர்ப்பூந்துறை
துவரை
துளுநாடு
தூங்கெயில்
திருவெஃகா
தேமுதுகுன்றம்
தேனூர்

தொண்டி
 தொண்டி முன்துறை'
 கானலம் தொண்டி
தொண்டை
தோட்டி
 பெரும்பெயர்த்தோட்டி
நல்லடி
நல்லூர்
 —நன்பலூர்ச்சிறு மேதாவியார்
 சிறுநல்லூர்
நவிரம்
நள்ளிகானம்
நறவு
நன்ரு
நாஞ்சில்
நாலே
 நல்லூர்
 நாலூர்
நியமம்
நீடூர்
நீழல்
நீர்ப்பெயற்று
நெடும்பாரம்
நெய்தலங்கானல்
நேரி
பஃறுளி
பந்தர்
பரங்குன்றம்
பருவூர்ப் பறந்தலே
பல்குன்றக் கோட்டம்
பவத்திரி (பாவித்திரி)
பறம்பு
பாக்கம்
பாடலி
பாண (ன்)நன்ருடு
பாமுளூர்
பாரம்
பாலே
பாழி
பாழிச்சிலம்பு
 பாழிப்பறந்தலே
பிசிர்
பிடவூர்
 —சோணுட்டுப்-
பிரம்பு
புகாஅர்
புறந்தை
புன்றுறை
பூஞ்சாற்றூர்
 —சோணுட்டு
பூழி
பெண்ணே
பெருங்குன்றூர்
 இரணியமுட்டம்
பெருந்தலே
பெருவாயில்
பேராறு
பேரூர்
பொத்தி
பொதியில்
 —(பொதினி)
பொருநை
பொறையாறு
 — புறந்தை
போந்தை
மணக்குடி
(பெரு) மணவாயில் உறத்தூர்
மரந்தை
 மாந்தை

மருங்கூர்ப்பட்டினம்
  மருங்கை
  மருங்கூர்ப்பாகை
மல்லி
மழபுலம்
  மழநாடு
மாங்காடு
மாங்குடி
மாலிருங்குன்றம்
மிழலைக் கூற்றம்
(முக்கூடல்)
முக்காவல்நாடு
முசிறி
முத்தூறு
  முத்தூர்க்கூற்றம்
முதிரம்
முதுகுன்றம்
  தேமுது குன்றம்
முதுபதி
முதுவெள்ளிலை
முள்ளூர்
  முள்ளூக்கானர்ம்
மூவெயில்
  மூதுபுரிசை
  புரிசை நாடு
மையல்
  மையோடக் கோவன்
  மையலூர்
மையூர்
மோகூர்
மோசி
வஞ்சி
வல்லம்
  வல்லத்துப்புறமிளை
வல்லார்
வல்வேல் கட்டிநன்னாடு
வலாஅர்
வாகை
  வாகைப் பறந்தலை
  வாகைப் பெருந்துறை
வாட்டாறு
வாணி
விச்சி
வியலூர்
விளங்கில்
வீரை (முன்றுறை)
வீரை வெளி (யன்)
வெண்ணி
வெண்மணி (வாயில்)
வெதிரம் — (மலை)
வெள்ளியம்பலம்
வெள்ளூர் (ப.)
வெளி – வெளியம்(ப.)
வெண்வேலான் குன்று
வேங்கடம்
வேம்பி
  [வேம்பின் பொருப்பன்]
வேலாறு
வேலூர்
வேளூர்

## 2. பதிகம், கொளு முதலியவற்றிலுள்ள புலவர் பெயருடன் காணப்படும் ஊர்ப்பெயர்கள்

அஞ்சில்
அந்தி
அல்லம்
ஆடுதுறை
ஆலங்குடி
ஆலத்தூர்

ஆலம்பேரி
ஆலவாய்
ஆலி
இடைக்காடு
இடைக்குன்றூர்
இரும்பிடர்த்தலை
இளம்புல்லூர்
இறங்குகுடிக்குன்றநாடு
உகாய்க்குடி
உமட்டூர்
உரோடகம்
ஒரோடகம்
உவர்க்கண்ணூர்
எருக்காட்டூர்
(எழூஉப்பன்றிநாகன்குமரனார்?)
எறிச்சலூர்
—கோனாட்டு
ஏணிச்சேரி
ஐயாதி (ச்சிறுவெண் தேரையர்)
ஐயூர்
ஒக்கூர்
ஒல்லையூர்
ஒருசிறை (ப்) பெரியனார்
கச்சிப்பேடு (காஞ்சி)
கடம்பனூர்
கடலூர் (கூடலூர்)
கடியலூர்
கடுகு (பெருந்தேவனார்)
கதுவாய்
கம்பூர்
கயத்தூர்
கல்லாடன்(ம்)
காக்கை
காரி?
காவிரிப்பூம்பட்டினம்
கிடங்கில்

கிள்ளிமங்கலம்
குடபுலம்
(குளம்பனார்)
குறுங்குடி
குறுங்கோழி (ளி)யூர்
கூடலூர்
கொட்டம்பலம்
கோட்டம் பலவனார்
கொடிமங்கலம் } த்து வாதுளி
கோடிமங்கலம் } நற்சேந்தனார்
கொடியூர் (கோடியூர்)
கோக்குள முற்றம்
கோட்டம்பலம்
கோட்டியூர்
கோண்மா
—நெடுங்கோட்டனார்
கோவூர்
கோளியூர்
சிறைக்குடி
(சீத்தலை?)
செயலூர்
தங்கால்
துறைக்குறுமா
(துறைக்குடி)
துறையூர் ஓடை
தொண்டி ஆமூர்
நல்லாவூர்
நொச்சிநியமம்
படுமரம்
—படுமாற்றூர்(பா.பே.)
பறநாடு
புதுக்கயம்
—புதுக்கயத்து வண்ணக்கண்—
—கம்பூர் கிழான்
புல்லாற்றூர்
பூங்குன்று

# 10. தமிழ் இடப்பெயர் விகுதி ஒன்றின் புணரியல் மாற்றங்களும் அவற்றின் கால வரிசையும்

புது ஊர் ஒன்றினைக் குறிக்கத் தமிழில் பூதூர், புத்தூர், புதுவூர், புதூர் ஆகிய நான்கு வடிவங்கள் வழங்குகின்றன 1. புது + ஊர் என்ற இரு சொற்கள் புணரும் முறை வேறுபாட்டால் மேற்கண்ட தொகைச் சொற்கள் தோன்றியுள்ளன 2. இவ்வடிவங்கள் அவ்வப் புணர்ச்சி முறைகள் பெரு வழக்கிலிருந்த வேறு வேறு காலகட்டங்களில் தோன்றினவாதல் வேண்டும். புணர்ச்சி விதிகள் காலந்தோறும் மாறி அதனடிப்படையில் புதுவிதப் பெயர்கள் வழக்கிற்கு வந்த போதும் பழைய புணர்ச்சி விதிப்படி அமைந்த இடப்பெயர்

---

1. தொடக்கத்தில் இந்நான்கு வடிவங்களும் தனித்து நின்றே இடப்பெயர்களாக வழங்கின. ஆனால் பல புது ஊர்கள் புது + ஊர் (> பூதூர்/ புத்தூர்/ புதுவூர் புதூர்) என அழைக்கப்பட்ட போது புது + ஊர் என்ற தொகை வடிவத்தின் முன் சிறப்புக் கூறுகள் பல சேர்க்கப்பட்டன. எனவே காலப் போக்கில் இத் தொகை வடிவம் இடப் பெயர் விகுதியாயிற்று.

2 தொல்காப்பியப்படி புது + ஊர் என்ற பண்புத் தொகை மரூஉப் புணர்ச்சி அகப்புணர்ச்சியாய் புணரியலில் கூறப்படாது (எழுத்து 482. நச்சர்,). எனினும் பிற்கால இலக்கணப்படி புதுமை + ஊர் = புதிதாகிய ஊர் என விளக்கம் கொடுக்கலாம்.

களும் நிலைத்திருந்தன 3. எனவே பிற்காலத்தில் மேற்கண்ட நால் வகைப் பெயர்களும் வழக்கிலிருக்கக் காண்கிறோம். எழுத்துச் சான்று களின் மூலம் இந்நால்வகைப் பெயர்களிலும் காணப்படும் புணர்ச்சி மாற்றங்கள் அல்லது விதிகள் வழக்கிலிருந்த காலத்தை இன்று நாம் கண்டறியவும், அதன் மூலம் இவ்வடிவங்களைக் கால முறைப்படி வரிசைப்படுத்தவும் இயலும். இக்கால வரிசைப்படி பூதூர், புத்தூர், புதுவூர், புதூர் என்ற நான்கு வகை விகுதிகள் பெற்ற இடப்பெயர்கள் தோன்றிய காலகட்டத்தை உறுதியாகக் கூறி விடலாம்4. அத்தகைய ஒரு முயற்சியே இக்கட்டுரையில் மேற்கொள் ளப்படுகிறது.

*புணர்ச்சி விதி 1* மெஉ மெஉ + உ உமெ > மெஉஉமெஉஉமெ 5.

— ஒலி இழப்பை ஈடு செய்யும் உயிர்நீட்சி

புது + ஊர் > பூதூர் (புத் + ஊர் > பூதூர் )
சிறு + ஊர் > சீறூர் ( புறம். 308 : 4 )
சிறு + யாழ் > சீறியாழ் (புறம். 147 : 2)
சிறு + இல் > சீறில் (புறம். 319 : 2)
முது + ஊர் > மூதூர் (சிறுபாண் : 201)
முது + இல் > மூதில் (புறம் . 277 : 2)
முது + ஆலம் > மூதாலம் (அகம் . 251 : 8)

---

3. ஒலிமாற்ற விதிகளுக்கு இது மாறுனதாயினும், இடப்பெயர்கள் 'நிலைத்த குறியீடுகளாக' இருப்பதால் இடப் பெயர்கள் சில இந் நிலைபேற்றுத்தன்மை என்ற சிறப்புப் பண்பைப் பெற்று விளங்கு கின்றன. இதனல் இடப்பெயர்கள் ஒலிமாற்றமே பெரு என்பது பொருளன்று.

4. இந்த நான்கு மாற்று வடிவங்களும் மொழியில் நிகழ்ந்த பொதுப் புணர்ச்சி மாற்றங்களைக் காட்டும் மாதிரி எடுத்துக் காட்டு களாக இருக்கலாம்; அல்லது இவை அருகிய சிலவாகவும் இருக்க லாம்; இங்கு நாம் இப்புணர்ச்சி மாற்றங்களை இடப் பெயர்களை மட்டும் வைத்து ஆய்ந்துள்ளோம்.

5 மெ = மெய்
உ = உயிர்

இத்தகைய புணர்ச்சி அமைப்புகள் சங்க இலக்கியத்தில் காணப் படுகின்றன. இவ்வாறு அமைந்த இடப்பெயர்கள் குறைவே. பூதூர் விகுதி அமைந்த பெயர்களாகத் திருக்கொள்ளம் பூதூர் (சம்பந்தர் தேவாரம் கி. பி. 7 ஆம் நூற்றுண்டு) திருப்பனம் பூதூர (ARE 176 of 1907) , ஸ்ரீ பெரும் பூதூர் முதலியன காணப்படுகின்றன. பூதூர் என்று மட்டும் அமைந்த இடப்பெயர்கள் காணப்படவில்லை

*புணர்ச்சி விதி 2*

மெஉ மெஉ + உஉமெ > மெஉ மெமெ உஉ மெ
— உயிர்கெடலும் மெய் இரட்டித்தலும் 6.

புது + ஊர் > புத்தூர்
சிறு + இல் > சிற்றில் (புறம். 86: 1)
சிறு + ஆறு > சிற்ருறு (கலி. 108 : 27)
சிறு + ஊர் > சிற்றூர் (கலி. 109 : 6)
புது + அகல் > புத்தகல் (புறம் . 269 : 4)
முது + உடும்பு > முத்துடும்பு (தக்கயாகப் பரணி : 123)

இப்புணர்ச்சி விதி தமிழில் பெருவழக்கினது. புத்தூர் என்ற தொகைச் சொல் வடிவம் கி. பி. 7 ஆம் நூற்றுண்டிலிருந்து தொடர்ந்து கிடைக்கிறது.

அரசிற் கரைப் புத்தூர் — திருநாவுக்கரசர்
திருப்பத்தூர் — திருஞானசம்பந்தர் } கி. பி. 7

சாந்தம் புத்தூர் — திருவாசகம், கீர்த்தி. 31. கி. பி — 8
நந்திக்கரைப்புத்தூர் (ARE 7 of 1912) ; பெரியபுராணம் — தடுத்தாட். 23

புத்தூர் (ARE 739 of 1905) கி. பி. 10

வாகைப்புத்தூர் (ARE 569 of 1905) கி. பி. 14

'புத்தூர்' என்றவடிவம் பெருவழக்கில் பயின்றதால் இடைக்காலத்தில் தென்னிந்தியா முழுதும் நிறைய ஊர்கள் சிறப்படை பெற்றும் பெருதும் இப்பெயரோடு வழங்கின.

---

6· தொல். சொல். 482. நச்சர் உரை. "வெற்றிலை ......வெறுவிதாகிய இலையெனப் பண்புணர்த்து மீறு தொகுதலின் மருவின் பாத்தியவாய் நின்று ...... ஈறு குன்றலின் ஒற்றடுத்தது."

புத்தூர் : 1. ஆரணி வட்டம் வ. ஆ. மாவட்டம்
2. இராமநாதபுரத்திற்கு அருகில்
3. கொல்லம் மாவட்டம், கேரளம்
4. தென்கன்னட மாவட்டம்
5. சித்தூர் மாவட்டம், ஆந்திரம்.

விதி: 3

மெஉமெஉ + உஉமெ > மெஉமெஉமெஉஉமெ

— உடம்படுமெய் பெறல் 7

புது + ஊர் > புதுவூர்

தொல்காப்பியம், நன்னூல்படி உயிரும் உயிரும் புணரும்போது தோன்றும் உடம்படு மெய்யை இங்குப்பார்க்கிறோம். தொல்காப்பியர் கருத்துப்படி இதுவும் அகச்சந்தியாய் – மருவின் பாத்தியவாம். ஆனல் இடப்பெயர்களில் இத்தகைய புணர்ச்சி விதிபெற்ற ஊர்ப்பெயர்கள் 13-ம் நூற்றுண்டுக் கல்வெட்டுக்கள் சிலவற்றில் காணப்படுகின்றன. (ARE 680 of 1903 & 73 of 1913)

(மேலும் பார்க்க: புதுவூர்குளம் —
T.A.S. Vol· VII P. 130 புள்ளாலங்காடு கல்வெட்டு–கி.பி 13-14?

விதி: 4

மெஉமெஉ + உஉமெ > மெஉமெஉஉமெ

— உயிர் கெடல்8

புது + ஊர் > புதூர்

---

7. எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபு கொளல் வரையார்.
– தொல். எழுத். 140 (நச்சர்.)

இ ஈ ஐ வழி யவ்வும் ஏனை
உயிர் வழி வவ்வும் ஏமுன் இவ்விருமுறையும்
உயிர்வரின் உடம்படுமெய் என்ருகும். — நன். 162.

8. சுட்டு முதலுகரம் அன்னெடு சிவணி
ஒட்டிய மெய்யொழித் துகரங் கெடுமே
— தொல். 176 (நச்சர்.)

ஒட்டிய என்றதனல் சுட்டுமுதல் உகரமன்றிப் பிற உகரமும் உயிர் வருவழிக் கெடுவன கொள்க. தொல்காப்பியர் கருத்துப்படி இதுவும் அகச்சந்தியாய் மருவின் பாத்தியவாம்.

இத்தகைய புணர்ச்சி வடிவங்கள் பிற்காலத்தில் மிகுதியும் காணப்படுகின்றன. பதினாறும் நூற்றாண்டுக்கு முன் புதூர் என்ற இவ்வடிவம் சேர்ந்து வரும் இடப்பெயர்கள் கிடைக்கவில்லை. ஆந்திர மாநிலம், கடப்பை மாவட்டம் - கடப்பை வட்டம் புஷ்பகிரியிலுள்ள 16-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்றுள் காணப்படும் 'புதூர்' தான் மிகப்பழையதாகத் தெரிகிறது. இருநூற்றாண்டுகளாகத் தான் புதூர் என்ற இவ்வடிவம் சிறப்புக் கூறு பெற்றும் பெருதும் இடப்பெயர்களில் மிகுதியும் இடம் பெறுகிறது.

எ-டு: புதூர் (கோவை மாவட்டம், சௌரிபாளையம் கிராமம்)
இரவிபுதூர் (கன்னியாகுமரி மாவட்டம்)
வீரகேரளம்புதூர் (திருநெல்வேலி மாவட்டம்)
பாலக்குட்டைப்பட்டி புதூர் (கோவை மாவட்டம்)

மேலே கண்ட பூதூர், புதுவூர், புத்தூர், புதூர் என்ற நான்கு வடிவங்களில் பூதூர்தான் மிகப் பழமையானது; வரலாற்றில் இதன் கீழெல்லை கி. பி. ஏழாம் நூற்றாண்டாகலாம். புத்தூர் என்ற வடிவம் கி. பி. 7–16 நூற்றாண்டுகளுக் கிடைப்பட்ட காலத்தில் பெருவழக்கி லிருந்தது; இத்தகைய பெயர்கள் தமிழ்நாட்டில் மட்டுமின்றிக் கேரளம், கருநாடகம், ஆந்திரம் முதலிய பல இடங்களிலும் நிறையக் காணப் படுகின்றன. புதுவூர் என்பது கி. பி. 13ல் மட்டும் காணப்படும் அருகிய வடிவமாயிருக்கலாம். புதூர் என்ற வடிவத்தின் பழமையைக் காட்ட வரலாற்றுச் சான்று ஒன்றும் இல்லை; இது காலத்தால் மிகப் பிற்பட்ட வடிவம் 9. இது கி.பி. 16–க்குப் பிறகுதான் வழக் கிற்கு வந்துள்ளது. 'புதூர்' என்ற பெயர் தாங்கிய எண்ணிறந்த பெயர்களை இன்று தமிழகத்தின் எல்லா இடங்களிலும் காணலாம்.

மேலே ஒவ்வொரு வடிவத்தின் காலத்தையும் வரையறுத்தது ஒரு உத்தேசமான கணக்கே அன்றி அறுதியானது அன்று; சில வேளை சிலவடிவங்கள் முன்பின்னாக மாறியும் அமையலாம். சில வற்றில் ஒரு வடிவம் மற்றொரு வடிவமாகத் திரிந்தமையவும் வாய்ப்

9. 'புதூர்' விகுதிபெற்ற ஊர்களின் வரலாறும் பெயராய்வும் 'புதூர்' வடிவம் பிற்காலத்தில் தோன்றியதையே காட்டுகிறது, பார்க்க : Nachimuthu, K., **place names of Coimbatore District**, (ph. D., Dissertation), Kerala university, 1973, pp. 229—337, 339—383.

புண்டு. எனினும் இங்கு நாம் செய்யும் யூகங்கள் முற்றுகப் பிழைபட வாய்ப்புக்கள் மிகக்குறைவே.

இனி இவ்வாறு இவவடிவங்களைக் காலக்கணிப்புச் செய்தால் நாம் பெறும் பயன் என்ன என்பதை ஆராயலாம். ஒரே மாதிரி வடிவங்களை உடைய இடப்பெயர்களை ஒரே வகையைச் சேர்ந்தன என அடக்கலாம். அதாவது, 'ஒரே வகையைச் சேர்ந்தன' என்ற நிலையில் அவையெல்லாம் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் தோன்றியனவாதல் வேண்டும். காலம் வரையறுக்கப்பட்ட இந்த ஒரே வகையைச் சேர்ந்த இடப்பெயர்களை மேலும் பகுத்தாய்வதன் மூலம் ஒரு பிரதேசத்தில் தோன்றிய குடியிருப்புக்கள் அல்லது ஊர் களின் வளர்ச்சிக் கட்டங்கள், வளர்ச்சிப் பாங்குகள் ஆகியவற்றை உய்த்துணர முடியும்.

இதற்குக் கோவை மாவட்ட இடப்பெயர்களிலிருந்து உதாரணம் காட்டி விளக்கலாம். கோவை மாவட்டத்திலுள்ள ஏழாயிரம் ஊர்ப்பெயர்களில் 17 மட்டுமே புத்தூர் விகுதி பெற்றன; சுமார் 816 ஊர்ப்பெயர்கள் புதூர் என முடிகின்றன. கி.பி. 16க்குப் பிறகு கோவை மாவட்டத்தில் நிறையக் கிராமங்கள் தோன்றி வளர்ந்ததை இது காட்டுகிறது. இந்த யூகத்தைப் பிற வரலாற்றுச் சான்றுகளும் பெயர்ச் சான்றுகளும் உறுதி செய்கின்றன. 10

இறுதியாக பூதூர், புதூர், புதுவூர், புதூர் என்ற நான்கு வடிவங்களும் அடைந்த சிலமுக்கிய ஒலிமாற்றங்களை எடுத்துரைக் கலாம்.

1. பூதூர்> புதூர் எனத் திரிந்திருக்கிறது.
   திருக்கொள்ளம் பூதூர் > திருக்கொள்ளம் புதூர்.

ஆனல் பிற்காலத்தில் காணப்படும் புதூர்கள் எல்லாம் பூதூர் என்பதன் திரிபாகக் கொள்ள இயலாது என்பது தெளிவு. (எ-டு : புதூர் என்ற பெயர்களில் உள்ள முன்னொட்டுக்கள் பலவும் பிற் காலத்தன என்பதைக் காட்டும்)

---

10. Nachimuthu. K., 'place Name Suffix palaiyam,' **Journel of the Department of Tamil**, Kerala university Vol. II. pp 29-41 (1971). Nachimuthu, K., **'place Names of Coimbatore District'** **opt. cit.**

2. 1. திருவாளொளிபுத்தூர் என்பது சிலசமயம் திருவாளொளி புற்றூர் என மிகைத்திரிபு, சொற்பொருள் விளக்கம் முதலியவற்றால் திரிகிறது; எனினும் ஒரு புத்தூராவது புற்றூர் என்பதன் பல்லினத் திரிபு என்று கூறத்தக்க சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை.

2.2. புத்தூர் விகுதிக்கு முன் திரு, மேல் முதலிய பெயரடைகள் அமையும் போது பத்தூர் எனத்திரிகிறது.

எ-டு: திருப்புத்தூர் > திருப்பத்தூர்
மேல்புத்தூர் > மேல்பத்தூர்

2.3. னகர ஈற்று இயற்பெயர்களின் பின்னர் புத்தூர்வருமொழி யாக அமையும் போது புத்தூர் > முத்தூர் ஆக ஓரினமாதல் விதியால் பெரும்பாலும் மாறுகிறது.

எ-டு: கோவன் + புத்தூர் > *கோவம்புத்தூர் > *கோயம்புத்தூர்
> *கோயம் முத்தூர் > கோயமுத்தூர்

தொண்டைமான் + புத்தூர் > *தொண்டைமாம் புத்தூர்
> *தொண்டாம் புத்தூர் > *தொண்டாம்முத்தூர் >
தொண்டாமுத்தூர்

துலுக்கன் + புத்தூர் > *துலுக்கம்புத்தூர் > * துலுக்கம்
முத்தூர் < துலுக்கமுத்தூர்

இவ்விதியின் அடிப்படையில் கோவை மாவட்டத்தில் முத்தூர் எனமுடியும் பல ஊர்ப்பெயர்களின் முன்வடிவத்தை வரலாற்றுச் சான்றுகள் இன்றியே மீட்டுருவாக்கம் செய்யலாம்.

எ-டு: இலையமுத்தூர் < *இலையம்முத்தூர் < இலையம்புத்தூர்
<இலையன்முத்தூர்

கலையமுத்தூர் < ... < *கலையன்புத்தூர்

குனியமுத்தூர் < ... <* குனியன்புத்தூர்

சுண்டக்காமுத்தூர் < ... < * சுண்டக்காயன் புத்தூர்

புங்க முத்தூர் < ... <* புங்கன்புத்தூர்

3. புதுவூர் என வழங்கிய பெயர்கள் சில புதூர் என மருவவும் வாய்ப்பு உண்டு. எ-டு: கருவூர் > கரூர் ஆனல் அதற்குச் சான்றுகள் ஒன்றுமே இதுவரை கிடைக்கவில்லை.

## 11. இரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் தமிழகம் ஊரும் - பேரும் - ஒரு மதிப்பீடு

பேராசிரியர் டாக்டர் இரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் 1896-ஆம் ஆண்டில் பிறந்தார்; வளர்ந்து கல்விபெற்று சில காலம் பச்சையப்பன் கல்லூரியில் பயிற்றாசிரியராக இருந்தார்; வழக்கறிஞராகவும் தொழில் நடத்திய அவர் திருநெல்வேலி நகராட்சித் துணைத் தலைவராகவும் சிலகாலம் இருந்திருக்கிறார்; 1930—36-ல் அவர் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராக இருந்தார்; பின் தொடர்ந்து 1936–1952 கால இடைவெளியில் சென்னைப்பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகவும், தமிழ்ப்பேராசிரியராகவும், துறைத் தலைவராகவும் இருந்து பணியாற்றி 1961-ல் காலமானார்.

சொல்லின் செல்வர் என்று பெயர் பெற்ற அவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் சுமார் 25 நூற்களும், நூற்றுக்கு மேற்பட்ட தலைப்புக்களில் பொதுநிலையிலும் ஆராய்ச்சி நிலையிலும் கட்டுரைகளும் எழுதியுள்ளார். இவருடைய மொத்த எழுத்துக்கள் சுமார் 4000 பக்க அளவுக்கு வரும்.

டாக்டர் இரா. பி. சேதுப்பிள்ளையின் தமிழ் நூற்களை (1) ஆராய்ச்சிக் கட்டுரைகள் (2) வாழ்க்கை வரலாறுகள் (3) பதிப்புக்கள் என்று பாகுபடுத்தி ஆய்கிறார் டாக்டர் ந. சஞ்சீவி. ஆராய்ச்சிக் கட்டுரைகள் என்ற வகையை (1) இலக்கியம் பற்றி எழுதப்பட்டவை (2) மொழி (யியல்) பற்றி எழுதப்பட்டவை என இருபெரும்பிரிவாகப் பாகுபடுத்தலாம். இரா. பி. சேதுப்பிள்ளை மொழித்துறையில் சொல்லாராய்ச்சி (Semantics), ஊர்பெயராய்ச்சி, வட்டார வழக்கு ஆகிய துறைகளில் ஆய்வுக்கட்டுரைகளும் நூற்களும் எழுதியுள்ளார்.

டாக்டர் இரா. பி. சேதுப்பிள்ளையின் வாழ்க்கை நூல் என்று போற்றப்படும் "தமிழகம் ஊரும் பேரும்" என்ற நூல் இத்துறையில் தமிழில் வெளிவந்த முதல் நூல் என்று சொல்லலாம்.

பேராசிரியர் அவர்களுக்கு ஊர்ப்பெயர் ஆராய்ச்சியில் கவனம் செல்ல அவருக்கு இயல்பாகவே சொல்லாராய்ச்சியில் இருந்த ஈடுபாடு காரணமாக இருந்திருக்கும் என்று தோன்றுகிறது.

டாக்டர் இரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய சில தொடக்க ஆய்வுக் கட்டுரைகளை விரித்து, ஆராய்ச்சியும், அழகு நடையும் தழுவிச் சுவைபட இந்நூலை எழுதியிருக்கிறார்.

இந்நூலில் ஆறு அதிகாரக் கட்டுரைகளும் இணைப்பாகத் தமிழ் நாட்டுத் தலங்கள் பற்றிய பல விவரங்கள் அடங்கிய பட்டியலும் அமைந்திருக்கின்றன. கடைசியாகப் பெயரகராதி ஒன்றும் கொடுக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு அதிகாரங்களின் கீழும் பல உட்கட்டுரை களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கு அடிக்குறிப்புகள், சான்று விளக்கம், செய்தி விளக்கம் ஆகியவற்றோடு அமைத்திருக் கிறார்; சுமார் 1300 ஊர்ப்பெயர்களை விகுதி அடிப்படையிலும், பகுதி அடிப்படையிலும் பொதுவாகப் பொருள் அடிப்படையிலும் பகுத்து விளக்க முனைகிறார்; செய்திகளைத் தொடர்பு அறுமலும், நயமும் சுவை யும் குன்றாமலும், ஆராய்ச்சி அம்சத்தைத் தழுவியும் இந்நூலை ஆசிரியர் எழுத முயன்றிருக்கிறார். நூலுக்குத் திரு. வி. க. வின் முகவுரை காணப்படுகிறது.

**நூலமைப்பு**

**1. தமிழகமும் நிலமும் (பக் *1—46*)**[1]

தமிழகத்திலுள்ள ஐந்து வகை நிலங்களையும், அவற்றின் அமைப்பிற்கேற்ப அவ்வந்நிலங்களில் எழும் ஊர்கள் பெறும் விகுதி கள் சுமார் 70 பற்றித் தனித்தனி விளக்கமும் இதில் காணப்படு கின்றன.

**2. நாடும் நகரமும் (பக்: *47—54*)**

தமிழ் நாட்டுப் பிரிவுகள் சில, நாடு என வழங்கும் ஊர்ப் பெயர்கள், சில தலைநகரங்களின் பெயர்கள் முதலியன இதில் விளக்கப் படுகின்றன.

---

*1. பக்கங்கள் மூன்றும் பதிப்பில் (1956) உள்ளபடி கொடுக்கப் பட்டுள்ளன.*

### 3. குடியும் படையும் (பக்: 55—85)

தமிழ் நாட்டில் ஆதிகாலத்தில் வாழ்ந்த குடியிருப்புப் பெயர்களும் அதைப்பாதுகாக்க எழுந்த படையிருப்புப் பெயர்களும் விவரிக்கப் படுகின்றன.

### 4. குலமும் கோவும் (பக்: 86—151)

இதில் தமிழ் நாட்டில் வாழ்ந்த பல வகுப்பார், பல குல மன்னர் பெயரால் எழுந்த பெயர்கள் விரித்துரைக்கப் படுகின்றன.

நாகர் முதலிய 12 குடிகள், சோழர், பாண்டியர், பல்லவர், விஜய நகர மன்னர், மராட்டியர், பாரி முதலாகிய குறுநில மன்னர், மகமதியர், கிருஸ்தவர், சான்றோர், புலவர் ஆகியவர்களால் உருவாக்கப்பட்ட ஊர்ப்பெயர்கள் விகுதி, பகுதி அடிப்படையில் விளக்கப் படுகின்றன.

### 5. தேவும் தலமும் (பக்: 152—345)

இப் பெருந்தலைப்பில்

17. இறையும் அறையும் (பக் : 308—316)
18. திருமாலும் திருப்பதிகளும் (பக். 317—331)
19. சமணமும் சாக்கியமும் (பக். 332—345)

என்ற பத்தொன்பது உட்தலைப்புக்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன. ஒவ்வொரு தலைப்பின் கீழும், சிவன், திருமால், முருகன், சமணர் கோயில்கள் குறித்து விளக்கப்படுகின்றன.

**6. தமிழகம் — அன்றும் இன்றும்**(பக். 346—349)

தமிழ் பேசும் எல்லைகள் மாறியது பற்றிய ஒரு சிறு கட்டுரை இது.

**நூலிலுள்ள குறிப்பிடத்தக்க சில செய்திகள் :**

1. பட்டி — பாண்டி நாட்டில் மிகுதி. (பக். 13).
2. ஆற்றுப் பெயர் மாறினாலும் ஊர்ப் பெயரால் அறியலாம். எ.டு. கயத்தாறு (பக். 16)
3. நெல்லைநாட்டில் செக்கச் சிவந்த மணற்பாங்கான இடங்கள் தேரி எனப் பெயர் பெற்றுள்ளன. (பக். 37)
4. பழுஞ்சி — பழ இஞ்சி என்பதன் சிதைவு (பக். 73)
5. சோழாந்தகன் > சோழ வந்தான். அதன் பழம்பெயர் குருவித் துறை (பக். 96).
6. பழைய செயங்கொண்ட சோழபுரம் > பழைய சங்கடம் (பக். 113) ஆயிற்று.
7. சீத்தலைச் சாத்தனார் சீத்தலை என்ற ஊரிற் பிறந்தவர் (பக். 139),
8. சிலம்பில் குறிப்பிடப்படும் வெண்குன்று கொங்கு நாட்டுத் தவள கிரியாதல் வேண்டும் (பக். 271)
9. சத்தி முற்றம் > சத்தி முத்தம் என மருவியது.

அதனடியாக ஒரு கதை எழுந்தது. பராசக்தியாகிய பார்வதியம்மை பரமசிவனை முத்தமிடக் கண்ட பெருமை அவ்வூருக்குரிய தென்று புனைந்துரைத்தனர் புராணமுடையார். அதற்கேற்ப அங்குள்ள திருக்கோயிலில், சக்தி, சிவனுக்கு முத்தமிடும் கோலத்தில் ஒரு திருவுருவமும் பிற்காலத்தில் அமைவதாயிற்று (பக். 286).

டாக்டர் இரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தம் ஆராய்ச்சிக்குக் கல்வெட்டுக்கள், பழைய இலக்கியங்கள், செவிவழிச் செய்திகள், புராணங்கள் ஆகியவற்றிற் காணப்படும் செய்திகளையும், பெயர் வடிவங்களையும் திரட்டி அதன்வழி தம் முடிவுகள் சிலவற்றை —

எடுத்துரைக்கிருர். சான்று இன்றி சில இடங்களில் யூக அளவிலும் நிறுத்திக் கொள்கிருர்.

இவர் தன் பெயராய்வு முறைபற்றித் தெளிவாக எடுத்துரைக்கவில்லே. எனினும் அவர் ஆய்வின் முறைகளாகிய 1. செய்தி சேகரித்தல். 2. பாகுபடுத்தல். 3 விளக்குதல் ஆகியவற்றின் அடிப்படையிலேயே தன் ஆய்வை மேற்கொண்டிருக்கின்ருர் என்று தோன்றுகிறது.

**செய்தி சேகரித்தல் :**

இரா. பி. சே. தமிழகத்தின் பழைய ஊர்ப்பெயர்களேயும், தற்காலத்தில் வழங்கும் ஊர்ப்பெயர்களேயும், ஆய்விற்கு எடுத்துக் கொண்டிருக்கிருர். பழைய ஊர்ப் பெயர்களிலும் தேவாரப் பாடல் தலங்களேப் பற்றித் தான் அதிகம் எழுதியிருக்கிருர். காரணம் அக்காலப் பெயர்களேத் தொகுத்து வகைப்படுத்தி சிவஸ்தல மஞ்சரி போன்றவற்றில் கொடுக்கப் பட்டதாக இருக்கலாம். கல்வெட்டு, இலக்கியங்களில் காணப்படும் பிறவகைப் பெயர்களே முழுதும் திரட்டி வகைப்படுத்த அவர் அதிகம் முயலவில்லே என்று தோன்றுகிறது.

தற்கால ஊர்ப் பெயர்களின் கூறுகளேயும் – பாகுபடுத்திக் கொடுத்திருக்கிருர். அதற்கு அவர் அரசாங்க வெளியீடுகளாய கிராமங்களின் பட்டியல்களே அடிப்படையாகக் கொண்டிருக்கிருர் என்று தெரிகின்றது.

**பாகுபடுத்தல் :**

ஊர்ப் பெயர்களே – பகுதி, விகுதி என்ற அடிப்படையில் இவர் பாகுபடுத்துவது, ஊர்ப் பெயராய்வு முறையியலே அடியொற்றியே செல்வதைப் பார்க்கலாம். இவருடைய ஊரும் பேரும் என்ற நூலில் சுமார் 1300 ஊர்ப் பெயர்களே ஆய்ந்து அவற்றின் 100 விகுதிகளேயும், சில பகுதிகளேயும் விளக்கி உள்ளார்.

**விளக்குதல் :**

செய்திசேகரிப்பு, பாகுபடுத்துவதற்கு அடுத்த நிலேயில் விளக்குதல் அமைகிறது. இரா. பி. சே. ஊர்ப் பெயர் ஆய்வின் அடிப்படை முறையியலே அறிந்திருந்தார் என்பதற்கு அவர் விளக்க முறை சான்று காட்டுகிறது. பெயரமைப்புகளே விளக்கப் பழைய கல்வெட்டு, இலக்கியங்கள் ஆகியவற்றிலுள்ள பெயர் வடிவங்கள்,

தற்கால வழக்கு வடிவங்கள், இனமொழி வடிவங்கள் ஆகியவற்றை இவர் பயன்படுத்துவது – இவரின் சரியான ஆய்வு முறையை விளக்குகிறது. ஆனல் ஊர்ப் பெயர்களை எண்ணி புள்ளிவிவர முறையில் சில அரிய வரலாற்று, சமூகவியல் செய்திகளை அறிய இவர் முயலவில்லை. மேலும் இத்துறையில் தொடர்ந்து ஆழமாக ஈடுபட்டு ஊர்ப் பெயர் அகராதிகள் ஆகியவற்றை வெளியிட இவர் முயலவில்லை. ஒலிமாற்றங்களை இவர் விதிப்படுத்தி அமைத்துக் காட்டவில்லை. சில இடங்களில் யூகத்தை அளவுக்கு மீறிப் பயன் படுத்துவதாகவும் தோன்றுகிறது. இது ஓரளவு பௌராணிகப் போக்காகத் தோன்றும்.

இந்நூல் பற்றி குறைந்தது இரண்டு மதிப்பீடுகளாவது காணப்படுகின்றன :

1 பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை அவர்கள் 'திராவிட மொழிகளில் ஆராய்ச்சி' என்ற தலைப்பில் 1946-ல் நாகபுரியில் நடை பெற்ற அகில இந்தியக் கீழைநாட்டுக் கலைஞரின் மாநாட்டில் திராவிட மொழிப் பகுதித் தலைமைப் பேருரையில் இந்நூலைப் பற்றி விமரி சித்த பகுதி.

2. சென்னைப் பல்கலைக் கழகத்தில் நடந்து, நூல் வடிவில் வெளியாகியிருக்கும் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்பொன்றில் இடம் பெற்றிருக்கும் இந்நூல் பற்றிய மதிப்பீட்டுக் கட்டுரை.

இவ்விரண்டில் பின்னதை நான் இன்னும் படிக்கவில்லை. ஆதலால் முன்னதைப் பற்றி மட்டும் குறிப்பிடுகிறேன்.

பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் இந்நூல் பௌராணிக நெறியைப் பின்பற்றுகிறது. பல பிழைகள் செறிந்த தாகவும் உள்ளது என்று மதிப்பீடு செய்கிருர். மேலும் இதுபற்றி கீழ்க்கண்டவாறு எழுதுகிருர்: ''சொல் வரலாற்ருேடு நெருங்கிய சம்பந்தமுடையது பெயர் வரலாற்று ஆராய்ச்சியாகும். இதில் இடப் பெயர்கள், மக்கட் பெயர்கள் முதலிய பலவகை ஆராய்ச்சிகள் அடங் கும். இடப்பெயர் வரலாற்றை எடுத்துக் கொள்வோம். தமிழில் தலபுராணங்கள் என்று பேர் படைத்த காவிய நூல்கள் பல இருக் கின்றன. அவற்றில் இடப்பெயர் வரலாறுகளும் உள்ளன. ஆனல், அவற்றின் ஆசிரியர்கள் பெயர் வரலாற்றினைச் சரித்திரக்கண் கொண்டு நோக்காது, மனோபாவனை ஒன்றையே துணையாகக் கொண்டு, உண்மை யான இடப்பெயர் வரலாற்றைத் தமது புராணக் கதைகளால் மறைத்து

மூடிவிட்டனர். இப் புராணக் கற்பனைக் கதைகளைக் கொண்டே வெகு காலமாகத் திருப்தியடைந்து வந்தோம். மிகச் சமீபத்தில் தான் உண்மை வரலாற்றை விளக்கும் முயற்சியை மேற்கொண்டு ஒரு நூல் தோன்றியுள்ளது. ஆனால், இதுவும் பௌராணிக நெறியையே பின் பற்றுகிறது; பல பிழைகள் செறிந்ததாகவும் உள்ளது. உதாரணமாக, திருநெல்வேலி என்ற ஊர்ப் பெயரிலே வேலி என்பது நில அளவைக் குறிப்பதென ஆசிரியர் எழுதியுள்ளார். தஞ்சை முதலிய பிரதேசங்களில் இந் நில அளவு வழங்கப்பட்ட போதிலும் திருநெல்வேலிப் பிர தேசத்தில் இவ்வழக்கு எப்பொழுதும் இருந்ததில்லை. இங்கே வேலி என்ற சொல் காவலிடம் என்ற பொருளில் தான் பொதுவாய் வழங்குகிறது. இவ் ஊர்ப் பெயரிலும் இதுவே பொருள். நெல்லைப் புராணமும் இப் பொருளையே விளக்கிக் கதை கூறிச் செல்கிறது. 'திருப்பைஞ்ஞீலி' என்ற தலப்பெயரில் 'ஞீலி என்பது 'வாழை' எனப் பொருள்படுமென்று ஆசிரியர் எழுதினர். இவர் ஆதாரங் காட்டாமற் போயினும், இப்பொருள் சிவஸ்தல மஞ்சரியில் கொடுக்கப்பட்டுள்ள தென்பது உண்மையே. ஆனால் தமிழில் 'ஞீ' என்ற எழுத்தில் தொடங்கும் சொல் கிடையாது. தொல்காப்பியத்தாலும் நன்னூலாலும் இது விளங்கும். எனவே ஞீலி என்பது நீலி என்பதன் போலி என்றே கொள்ளவேண்டும். இவ்விரு சொற்களுக்கும் வாழை என்ற பொருள் தமிழ் இலக்கியத்துள் ஓரிடத்திலும் வழங்கப் பெறவில்லை. நிகண்டு களிலும் காணப்பெறவில்லை. பைஞ்ஞீலம் என்பது வாழை எனப் பொருள்படும் என்று தமிழ் லெக்ஸிகன் குறிப்பிடுகிறது. ஆனால் இதற்கும் ஆதாரமில்லை. சிவஸ்தல மஞ்சரியையே ஆதாரமாகக் கொண்டிருக்கலாம். பிராதேசிக வழக்கு (Local) என்று லெக்ஸிகனில் காணப்படுவது இச்சொல்லின் வடிவங் கொண்டே மறுக்கற் பாலதாம். சிவஸ்தல மஞ்சரியில் 'வாழை'ஸ்தலவிருக்ஷமாகக் காட்டப்பட்டுள்ளது. இத்தலம் பற்றியதேவாரப்பதிகங்களில்ஓரிடத்தும்வாழைஎன்பதுகாணப் பெருமையால், மிகப்பிற்பட்ட காலத்தில், நீலி (ஞீலி) என்பதன்உண்மை வரலாறு மறைந்துவிட்டபொழுது புதுவதாக ஒரு வரலாறு கற்பிக்கப் பட்டதாதல் வேண்டும். இதன் பயனாக இவ்வாழை தோன்றியுள்ளதென எண்ணுதல் தகும். எனவே, இத்தலப்பெயர் பற்றிக் கல்வெட்டு முதலிய பிற கருவிகளின் உதவியைக் கொண்டு ஆராய்ச்சி நிரம்பச் செய்தா லன்றி உண்மை வரலாறு அறிதற்கில்லை 'ஞீலி' வாழை எனப் பொருள்படும் என்று கூறுவதெல்லாம் புராணக்கதையைப் பற்றிய புராணமேயாகும். முத்துப்பேட்டை என்பதற்கு முத்துக்குளித்த இடம்

எனப் பூர்வ வரலாறு உரைக்கப்பட்டுள்ளது. இவ்வூர் கடற்கரையிலுள்ளதன்று; கடலுக்கும் இவ்வூர்க்கும் சுமார் 6 மைல் தூரம் உள்ளதாம். பண்டைக்காலத்தில் இங்கே முத்துக்குளித்தனர் என்பதற்கு யாதோர் ஆதாரமும் கிடையாது. தஞ்சை மான்யுவல் (Tanjore Manual) என்ற நூலை நோக்கினால் இங்குக் கூறியதன் உண்மை அறியலாம். முத்து என்ற பெயரை நோக்கிய அளவில், இங்ஙனம் வரலாறு கூறுதல் பௌராணிக நெறியேயாகும். முத்து அல்லது முத்தையா என்பது தமிழ்மக்களுக்குரிய பெயர்களில் ஒன்றும். இப் பெயருடையோன் ஒருவன் நினைவுக்குறியாக இப்பேட்டை அமைந்திருத்தலும் சாலும். அல்லது அவன் நிறுவிய பேட்டையாகவும் இருத்தல் கூடும். உண்மை எதுவென்று அறுதியாக ஆராய்ச்சி செய்யப்பட்டாலன்றி இப்பெயர் வரலாற்றினை அறிதல் கூடாதாம். வெள்ளை என்ற சொற்குப் பலதேவன் என்ற பொருளும் தமிழில் உண்டு ஆனால் வெள்ளையென்று தொடங்கும் பெயரையுடைய ஊர்களிலெல்லாம் பலதேவன் வணக்கம் இருந்தது எனக் கருதும்படி வரலாறு கூறுதல் பலதேவ புராணம் எழுதப்புகுந்தார் செயலேயாகும். தக்க ஆராய்ச்சியின்றி, நக்க நெறியைப் பின்பற்றுது எழுதிய நூல்கள் தலுக்கு நடையினால் உண்மை பொதிந்தன ஆகமாட்டா. மேலெழுந்தவாரியாகவுள்ள கல்வியினால் பிழைகள் பரம்பரை பரம்பரையாகப் பெருகிக் கொண்டே போக இடமுண்டு; உண்மையாராய்ச்சி பெருக மாட்டாது. மேல் நாட்டறிஞர்கள் ஊர்ப்பெயர் முதலியன குறித்துச் செய்துள்ள ஆராய்ச்சி முறையை நாம் நன்கு அறிந்து கொள்ளுதல் வேண்டும். இங்கிலாந்தில் ஊர்ப்பெயர்க் கழகம் (place name Society) வெளியிட்டுள்ள நூல்கள் மிகுதியும் பயன்படுவன. இவற்றைப் பின்பற்றித் தக்கபடியான ஆராய்ச்சிகள் நன்கு நிகழ்தல் வேண்டும். இவை பெரிதும் நிகழ்ந்த பின்பு, ஊர்ப்பெயர் அகராதி ஒன்று தொகுத்து வெளியிடுதல் மிகவும் பயன் தருவதாகும்.

இச்சிறு நூலைக்குறித்து இத்தனை நுட்பமாகத் துருவிப் பார்க்க வேண்டும் அவசியமில்லை. ஆனால் இது போன்றவற்றால் விளைந்துள்ள தீமையின் அளவை நோக்கி இவ்வாறு செய்ய நேர்ந்தது. இதற்கு வருந்துகிறேன்."

சுமார் 30 ஆண்டுகட்கு முன் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் கூறிச் சென்றுள்ள கருத்துக்கள் எண்ணத்தக்கன. இவ் விமரிசனத்தின் உள்நோக்கம் எதுவாயினும் பொதுநல நோக்கில் இக் கருத்துக்கள் ஆராய்ச்சி செம்மையடைய உதவும் என்பதில் ஐயமில்லை.

சேதுபிள்ளையவர்களின் நூலில் பௌராணிகப் போக்கு சில இடங்களில் இருக்கவே செய்கிறது.

"வட ஆர்க்காட்டு வேலூர் வட்டத்திலுள்ள ஆம்பூர் என்பது சாசனங்களில் ஆண்மையூர் என்று பெயர் பெற்றுள்ளது32. அங்குள்ள நடுகல்லில், வில்லும் வாளும் தாங்கிய வீரன் ஒருவன், மாற்றார் அம்புகள் உடலிற் பாய்ந்தும் முனைந்து நிற்கும் நிலை காட்டப்படுகின்றது. பகைவர்க்குப் புறங் கொடாது விழுப்புண்பட்டு வீழ்ந்த அவ்வீரனது பெருமைக்கு அறிகுறியாக ஆண்மையூர் என்று அதற்குப் பெயரிட்டனர் போலும்" (32. ARE 7 of 1896) — பக்: 78.

இதே போலச் சென்னி எனத் தொடங்கும் பெயர்கள் எல்லாம் சோழரைக் குறிப்பதுபோல எழுதிச் செல்கிறார். பக் : 92.

ஆங்காங்கே விளக்கமில்லாத பகுதிகள் சிலவும் காணப்படுகின்றன.

பாடல் பெற்ற கடம்பூரில் அமைந்துள்ள கோயில் கரக் கோயிலாகும்.

'நன் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்'

என்று தேவாரம் இக்கோயிலைப் போற்றுகின்றது (பக்: 218). இதில் கரக்கோயில் என்பது சக்கரக் கோயில் என்பதன் சுருக்கம் என்ற கருத்து விளக்கப்படவில்லை. அவை சான்றுகளின்றி, யூகமாய் எதுவும் கூறக்கூடாது எனத் தெளிவின்றி விட்டுச் சென்றிருக்கலாம். விளக்கம் வேண்டும். என்று யூகத்தில் ஈடுபட்டுப் புராணப்படுத்தலைக் காட்டிலும் அவ்வாறு விட்டுச் செல்வது பொருத்தமானதே.

இந்நூலைப் பற்றி வையாபுரிப் பிள்ளை அவர்களின் கருத்துக்களை நோக்கும்போது நாம் சில கருத்துக்களை விளக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இன்றைக்கு முப்பது ஆண்டுகட்கு முன் தமிழ் ஆராய்ச்சி இருந்த நிலையை இந்நூல் வெளியிடுவதாகக் கொள்ளலாம். தமிழ் ஆராய்ச்சியின் தொடக்கநிலை இருந்த நிலையில் மிகப் புதிய துறையாகிய பெயராராய்ச்சியும் அப்பொதுக் குறைபாடுகளைக் கொண்டு விளங்கியிருப்பது இயற்கைதான். மேல் நாடுகளில் கூடப் பெயராராய்ச்சியை

முதலில் தொடங்கி வைத்த நூல்கள் இவ்வாறுதான் அமைந்திருக்கின்றன. டைலர், ஸ்டூவர்ட் போன்ருேர் நூல்களில் பெயர்பற்றிய விஷயங்கள் இவ்வாறுதான் விளக்கப்பட்டிருக்கின்றன. அந்நிலேயில் தமிழில் முதலில் எழுந்த இந்நூல் அவைகளேப் போல அமைந்திருப்பதில் வியப்பில்லே. ஆனல் தமிழில் இந்நூல் எழுந்த காலத்தில் பெயராராய்ச்சி முறையியலோடு மேல்நாட்டில் வளர்ந்திருந்ததால், வளர்ந்திருந்த செம்மையான முறையியலேப் பார்த்து அவற்றை நமதாக்கி நாம் இன்னும் செவ்வையாகச் செய்திருக்கலாம் என்பது தான் பேராசிரியர் ச.வையாபுரிப் பிள்ளேயின் விமரிசனத்தின் நோக்கம். நாமும் முதல் கீறலிலிருந்துதான் தொடங்கவேண்டிய அவசியம் இல்லேயல்லவா? இது இக்கால ஆராய்ச்சிகளுக்கும் பொருந்தும். பிறர் அனுபவங்கள் நமக்கு நல்வழியையும், சிக்கனத்தையும், செவ்வையையும், எச்சரிக்கைகளேயும் கொடுக்கமுடியும்போது, நாம் ஏன் வீணே அதே தவறுகளேத் திரும்பச் செய்யவேண்டும்? அன்றைய தமிழாராய்ச்சி இருந்த நிலேயில் பேரா. ச. வையாபுரிப்பிள்ளே தன் காலத்திற்கு எவ்வளவு முன்னதாகவே அரிய இக்கருத்தைச் சிந்தித்திருக்கிருர் என்பதைக் காட்டுகிறது.

இன்னெரு விஷயமும் இங்கு கவனிக்கத்தக்கது. அது பேராசிரியர் இரா. பி. சேதுப்பிள்ளே அவர்கள் நூற் பொருளாகிய ஊர்ப் பெயராராய்ச்சியின் தன்மை. இப்பொருள் பற்றிய ஆராய்ச்சி, வடிவச் சான்றுகளின் அடிப்படையில் புள்ளிவிவர முறையில் செய்யப் படுவது. அதைத் தொடர்ந்து அமர்ந்து வாசிக்கக் கூடிய வசனக் கோவையாய் அமைப்பது சிரமமானது. இந்நிலேயில் அதையும் மீறி வசனக்கோவை அமைக்கும்போது கதைவிடும் குற்றச்சாட்டுக்கும் உள்ளாக வேண்டியிருக்கும். இந்நூலே இவ்விரு நிலேகளேயும் இணேத்து எழுத முயன்றதனல் இக்குறைபாடுகள் தவிர்க்க முடியாதனவே.

மேலும் நூல்களே நாம் (1) உயரிய ஆய்வு நூல்கள் (2) சாதாரண வாசகனுக்கு ஏற்ற பொதுவகை நூல்கள் – என்று இரு வகைப் படுத்தினல், பின் வகை நூல்களே - முன்வகை ஆய்வு நூல்கள் இன்றி எழுத முடியாது. சரியான ஆய்வின் வழிப்பட்டு - எழுதப்பட்ட நூல்கள், பின்வகை நூல்களேப் படிப்போர்க்குப் பயன்பட. இவ்வேறுபாடுகளே உணராது, நூல் கேட்போர் யார் என்ற தெளிந்த ஞானமும் நோக்கும் இன்றி நூல் எழுதும் போது சிக்கல் தோன்று

கிறது. ஆய்வுவழி எழுதப்பட்டுள்ள நூல்கள் சிரத்தையுடன் தம் தரத்தைக் காப்பாற்றுதல் வேண்டும். அதே போல சாதாரண வாசகனுக்கு எழுதப்படும் நூல்கள் முன்வகை நூல்களின் எளிய வடிவமாக அமையலாமேயன்றித் திரிபுகளாக அமைதல் கூடாது. முன்வகை நூல்களை எழுதும் ஆசிரியன் பின்வகை நூல்களையும் நோக்கத் தெளிவோடு, இரண்டின் அம்சங்களையும் அதத‌ற்கு உரிய வகையில் பேணி எழுதுதல் விரும்பத்தக்கது.

டாக்டர் இரா.பி. சேதுப்பிள்ளை அவர்களின் நூல், இவ்வகையில் எழுந்த முதல் முயற்சியாதலால் இதில் சில குறைகள் எதிர்பார்க்கக் கூடியனவே. பேராசிரியர் அவர்கள் தொடர்ந்து இத்துறையில் முறையாக ஈடுபட்டிருந்தால் நூலில் காணப்படும் குறைகளை அவரே நீக்கியிருப்பார். விடுதலைக்குப் பின் தமிழில் வந்த சிறந்த ஆய்வு நூல் என்பதற்காகப் பரிசு பெற்ற இந்நூல், இன்றைக்குச் சுமார் நாற்பது ஆண்டுகட்கு முன் தமிழாராய்ச்சி இருந்த நிலையை வெளியிடுவதாகக் கருதலாம்.

## நூலடைவு


1. இரா. பி. சேதுப்பிள்ளை, **தமிழகம் — ஊரும் பேரும்**, முதற்பதிப்பு, 1946, இரண்டாம் பதிப்பு– 1950, மூன்றும் பதிப்பு –1956, பழநியப்பா பிரதர்ஸ், திருச்சி, பக். VI + 395.

2. ந. நஞ்சீவி, 'பேராசிரியர் சேதுப்பிள்ளையவர்களின் பெருந்தமிழ்த் தொண்டு' **பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா மலர்**, 1961, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, பக். 41–70.

3. அ. க. நவநீத கிருட்டிணன், **டாக்டர் சேதுப்பிள்ளை**, 1961, கழக வெளியீடு, சென்னை, பக். 7 + 212 (படங்களுடன்).

4. அ. க. நவநீவ கிருட்டிணன், **சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை**, முதற்பதிப்பு– 1961, மறுபதிப்பு –1963, கழக வெளியீடு, சென்னை, பக். 6+111.

5. ச. வையாபுரிப் பிள்ளை, **திராவிட மொழிகளில் ஆராய்ச்சி**, தமிழ்ப் புத்தகாலயம், இரண்டாம் பதிப்பு, 1956.

## 12. ஊர்கள் உருவெடுத்த முறைகள்

வீடுகள் பெருகிக் குடியிருப்புகளாகி, குடியிருப்புகள் பெருகி ஊர்களாக மாறுவதென்பது பல்லாண்டுகளில் மெல்ல மெல்ல நடப்பது. மனிதன் பயிர்த் தொழிலைக் கண்டு பிடித்து நிலையாக வாழத் தொடங்கிய காலத்திலிருந்து இன்றுவரை ஊர்கள் தோன்றிக் கொண்டும் அழிந்து கொண்டும் இருக்கின்றன. அவைகளின் தோற்றமும் வளர்ச்சியும் மனிதனின் நாகரிகம், வரலாறு, அரசியல், பொருளாதாரம், கலை ஆகிய துறைகளால் பல்வேறு நிலைகளில் பாதிக்கப்படுகின்றன. எனவே ஊர்கள் உருவெடுத்த முறைகள் மிகவும் சிக்கலானதாகவும், பரந்து பட்டதாகவும் காணப்படுகின்றன. ஊர்கள் உருவெடுத்த முறைகளை – அவற்றின் முழுப் பரிமாணங்களையும் ஆய்ந்து கூறாமல், ஊர்ப் பெயர்களின் அடிப்படையில் பிற செய்திகளின் துணையோடு சில செய்திகளை விளக்க முயல்கிறது இக்கட்டுரை.

மனித வாழ்வுக்குத் தேவையான வசதிகளைத் தரக் கூடிய பொருளாதார வளமுள்ள இடங்களில் நிறைய ஊர்கள் தோன்று கின்றன. எனவே தான் பழைய காலத்தில் நீர்ப்பாசன வசதியுள்ள ஆற்றுப்பகுதிகளில் நிறைய ஊர்கள் தோன்றின.

மக்கள் குடியேறிய பகுதிகளில்' மக்கள் தொகைப் பெருக்கத் தின் காரணமாக மேலும் பல ஊர்கள் தோன்றுகின்றன.

மக்கள் குடிப் பெயர்ச்சியின் காரணமாகவும் ஊர்கள் தோன்ற லுண்டு. அடிப்படை வாழ்க்கை வசதிகள் குறைவதாலோ இயற்கை அழிவுகளின் காரணமாகவோ, மக்கள் ஊர்களை விட்டுச் செல்லலின் காரணமாகப் பழைய ஊர்கள் அழிதலும் புதிய ஊர்கள் தோன்ற லும் உண்டு.

இன்னும் அணைகட்டுதல் போன்ற சில அரிய செயல்களால், ஊர்கள் நீரில் மூழ்கப் புதிய ஊர்கள் தோன்றல் உண்டு. கோவை மாவட்டத்தில் பவானிசாகர் அணைகட்டப்பட்டபோது ஏழு (எட்டு) கிராமங்கள் நீரில் மூழ்கின. அதற்காக வேறு ஊர்கள் அமைக்கப் பட்டன.

ஊர்களின் வளர்ச்சி, இயல்பான போக்கில் நிகழ்தல் போலவே திட்டமிட்ட முறையில் சில பகுதிகளில் மக்களை அரசர்கள் குடியேற்றி ஊர்கள் அமைத்தலும் உண்டு. கரிகாலனின் தொண்டை நாட்டுக் குடியேற்றம் இதற்குச் சிறந்த காட்டு. கொங்கு நாட்டிலும் அங்ஙனம் ஒரு குடியேற்றம் இடைக்காலத்தில் நிகழ்ந்ததாகச் சோழன் பூர்வ பட்டயம் என்ற நூல் தெரிவிக்கிறது.

கோவை மாவட்டத்தில் சங்ககாலத்தில் சில ஊர்களே இருந்தன. தேவார காலத்தில் ஏழு ஊர்களே சிறப்புற்றிருந்தன. பிறகு சோழர் காலத்திலும், நாயக்கர் காலத்திலும் தான், மக்கள் தொகைப் பெருக்கம், குடியேற்றம் இவைகள் காரணமாகப் பல ஊர்கள் தோன்றின. இதை ஊர்ப்பெயர்களும் தெரிவிக்கின்றன.

சுமார் 18–ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த கொங்கு மண்டல ஊர்த் தொகை என்ற பாட்டு நூல் கோவை மாவட்டத்தில் மொத்தம் 671 ஊர்களையே கூறுகிறது. இவ்வூர்களே அன்றிருந்தன என்பதை விட இவ்வூர்களையே அது பழையதாகக் கருதியிருக்கிறது என்பதே பொருந்தும். வேறு சில புது ஊர்களும் அன்றிருந்திருக்கலாம். என்றாலும் இதை அடிப்படையாகக் கொண்டு ஊர்களின் எண்ணிக்கை வளர்ச்சிகளை ஊகிப்பதில் தவறில்லை.

கோவை மாவட்டத்தில் இன்று 6934 ஊர்கள் காணப்படு கின்றன. கொங்கு மண்டல ஊர்த் தொகை (18–ஆம் நூற்றுண்டு) கூறுவதை விட இது சுமார் 10 மடங்கு ஆகும். இதிலிருந்து புது ஊர்களின் வளர்ச்சி வேகம் தெளிவாகும்.

பழைய காலத்தில் இருந்த சில ஊர்களை மையமாகக் கொண்டு காலப் போக்கில் பல ஊர்களை அவற்றைச் சுற்றிலும் தோன்றியிருக் கின்றன.

தாராபுரம் வட்டத்தில் பாப்பினி என்ற ஊரைச் சுற்றி சுமார் 37 சிற்றூர்களும், பரன்சேர்பள்ளி (பரஞ்சேர்வழி) என்ற ஊரைச் சுற்றி 39 சிற்றூர்களும் காலப் போக்கில் தோன்றியிருக்கின்றன.

பிற்காலத்தில் தோன்றின ஊர்கள் எவை என்பதைக் கண்டு பிடிக்க ஒரு வழி உண்டு. ஒரு குறிப்பிட்ட வட்டாரத்திலுள்ள பல சிற்றூர்கள் ஒரு ஊரைத் தாய் ஊராக அழைக்கின்றன. அதாவது அந்தக்குறிப்பிட்ட ஊரை மையமாகக் கொண்டு மற்ற சிற்றூர்கள் தோன்றின என்பதே கருத்து. தாய் ஊர் எது என்பதைக் கண்டு பிடித்தலும் எளிதே. எந்த ஊரில் சிவன் கோவில் (அல்லது திருமால் கோவிலும் சேர்ந்து) காணப்படுகிறதோ – அவ்வூரே சுற்று வட்டாரத் திலுள்ள பல ஊர்களுக்கும் தாய் ஊராகும். சுற்று வட்டாரத்திலுள்ள பல ஊர்களும் தாயூரில் உள்ள சிவன் கோயிலோடு தொடர்பு கொண்டி ருக்கும். இது கோயில் எவ்வாறு ஓர் ஊருக்கு மட்டுமின்றி வட்டாரத் திற்கே உயிர் நாடியாய் விளங்கினதென்பதை விளக்கும்.

உதாரணமாக பல்லடம் வட்டத்திலுள்ள கொடுவாய் என்ற ஊரிலுள்ள சிவன் கோயிலொடு, சுற்று வட்டாரங்களிலுள்ள 40 ஊர்கள் உரிமை கொண்டாடுகின்றன. அதாவது 40 ஊராரும் கொடுவாயை மூலமாகக் கொண்டு அங்கிருந்து வெளியே சென்று ஊரமைத்தவரின் சந்ததியினராவர். பழமை மறந்தாலும் வட்டாரங்களில் சென்று குடியேறி ஊர்களை அமைத்துக் கொண்டாலும் பழைய தொடர்பை அவர்கள் காட்டிக்கொள்கிருர்கள். இதை அலகுமலைக் குறவஞ்சி என்ற நூலும் உறுதி செய்கிறது. அவ்வூரில் வாழ்ந்த குறுநிலத் தலைவனின் சந்ததியரும் குலத்தவரும் சுற்று வட்டாரங்களில் சென்று ஊரமைத்துக் கொண்டார்கள் என அந்நூல் கூறுகிறது. கொடுவாயி லிருந்து 6 கல் சுற்றளவிலேயே தாயூர்களாக விளங்கிய பெரிய கோவில்களை உடைய பிற ஊர்களும் காணப்படுகின்றன.

கோவை மாவட்டத்தில் மொத்தம் 872 (959) கோவில்கள் உள்ளன.[1] அவற்றில் 228 கோவில்களே கி. பி. 1750க்கு முன்பு – அதாவது ஆங்கிலேயர் ஆட்சிக்கு முன்பு கட்டப்பட்டவை. அதில் 170 சிவன் கோவில்கள் இருக்கின்றன. எனவே கோவை மாவட்டத் தில் சிவன் கோவில்கள் இருக்கும் 170 ஊர்களுமே பழமையுடைய தாய் ஊர்களாக இருந்திருக்கும் என யூகிக்கலாம். சோழன் பூர்வ பட்டயம் – சிவன் கோவிலை மையமாக வைத்து எவ்வாறு கோவை மாவட்டத்தில் 56 ஊர்கள் தோன்றின என்பதை விளக்கிக் கூறுவது இங்கு குறிக்கத்தக்கது.

---

1. Census of India – 1961, **District Census Hand Book - Coimbatore,** 1964, pp. 74-76.

மேற்காணும் செய்திகளை, ஊர்ப்பெயர்களது மொழியாய்வும் உறுதிப்படுத்துகிறது.

தமிழ் இடப் பெயர் விகுதிகளில் — ஊர், நல்லூர், மங்கலம், புத்தூர் என்பவை காலத்தால் மிகப் பழமையானவை ஆகும். ஊர் (12.6%), நல்லூர் (0.4%), மங்கலம் (0.4%), புத்தூர் (0.2%) என்ற நான்கு விகுதிகளும் மாவட்டத்திலுள்ள மொத்த இடப் பெயர்களில் மிகப் பழங்காழத்தில் மிகக் குறைந்த ஊர்களும், மக்கள் தொகையும் இருந்ததை உறுதி செய்கிறது. (பார்க்க : பட்டியல் 1)

கோவை மாவட்ட இடப் பெயர்களில் 2888 அதாவது 42.9% பாளையம் விகுதியுடனும், 816 அதாவது 11.7% புதூர் விகுதியுடனும், 504 அதாவது 7.2% வலசு விகுதியுடனும், 399 அதாவது 4.8% பட்டி விகுதியுடனும், 230 அதாவது 3.3% புரம் விகுதியுடனும் முடிகின்றன. இதில் பாளையம் விகுதி சுமார் கி. பி. 14–16 நூற்றுண்டு அளவிலும், புதூர், வலசு போன்றவை 16-ம் நூற்றுண்டிற்குப் பின்னரும் கோவை மாவட்ட இடப்பெயர்களில் மிகுதியான இடம் பெற்றன. பட்டி என்ற விகுதியும் கோவை மாவட்ட இடப்பெயர் களில் பிற்காலத்தில் தோன்றியது. புரம் விகுதியும் பெருவழக்குப் பெற்றது பிற்காலத்தில் தான். எனவே கோவை மாவட்டத்தில் சுமார் 4837 அதாவது 69. 9% ஊர்கள் சுமார் கி. பி. 15க்குப் பிறகு தோன்றியவையே. (பார்க்க : பட்டியல் 1).

இனி, கோவை மாவட்டத்தில் ஊர்கள் எவ்வெப்பகுதியில். எங்ஙனம், யாரால் தோற்றுவிக்கப்பட்டன என்பதைக் காணலாம்.

பழைய கோவை மாவட்டத்தின் மொத்தப்பரப்பு 6026.6 சதுர மைல்களாகும். இது தமிழகத்தின் பரப்பளவில் 12 சதவீதமாகும். இதுவே அன்று தமிகத்தில் மிகப் பெரிய மாவட்டமாக இருந்தது. 1961–ஆம் ஆண்டுக் கணக்குப்படி மக்கள் தொகை 3,557,471 ஆக இருந்தது. (1971-கணக்குப்படி 4, 373, 178 ஆகும். இது தமிழ் நாட்டின் மக்கள் தொகையில் 10.6% ஆக இருந்தது. கிராமப் புறங்களில் மட்டும் வாழ்வோர் 2, 525,302 பேராவர்.

---

2. Ibid

**பட்டியல் எண் : 1 கோவைமாவட்டத்திலுள்ள முக்கிய இடப்பெயர் விகுதிகள் வட்டந்தோறும் காணப்படும் விதம் (Distribution) பற்றிய புள்ளி விவரங்கள்**

| வட்டத்தின் பெயர் (மொத்த இடப் பெயர்கள்) | விகுதிகளின் பெயர்கள் (வட்டத்திலுள்ள இடப்பெயர்களில் — இவற்றின் விழுக்காடு மொத்த விகுதிகளில் ஒவ்வொரு வட்டத்திலுள்ள விகுதிகளின் விழுக்காடு) | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஊர் (%) (%) | கரை (%) (%) | காடு (%) (%) | குட்டை (%) (%) | நல்லூர் (%) (%) | பட்டி (%) (%) | பதி (%) (%) | பாளையம் (%) (%) | புத்தூர் (%) (%) | புதூர் (%) (%) | புரம் (%) (%) | மங்கலம் (%) (%) | வலசு (%) (%) |
| அவினசி (650) | 109 (16.7) (12.38) | 6 (0.9) (11.11) | 3 (0.4) (3.19) | 11 (1.8) (23.91) | 2 (0.3) (5.88) | 17 (2.6) (5.01) | 3(0.4) (4.0) | 283 (43.5) (9.79) | 2 (0.3) (11.76) | 96 (14.7) (11.76) | 24 (3.6) (10.43) | — | — |
| பவானி (690) | 213 (30.8) (24.20) | 5 (0.7) (9.09) | 14 (2.0) (14.89) | 12 (1.7) (26.08) | 2 (0.2) (5.88) | 21 (3.0) (6.19) | 1 (0.1) (1.33) | 194 (28.1) (6.71) | — | 59 (8.5) (6.86) | 9 (1.3) (3.91) | 3 (0.4) (10.34) | 10 (1.4) (1.98) |
| கோவை (322) | 45 (13.9) (5.11) | 10 (3.0) (18.51) | 2 (0.6) (2.12) | — | 2 (0.6) (5.88) | 16 (6.5) (4.71) | 7 (2.1) (9.33) | 137 (42.2) (4.74) | 1 (0.3) (5.88) | 28 (8.6) (3.43) | 24 (7.7) (10.43) | 2 (0.6) (6.89) | — |
| தாராபுரம் (1317) | 41 (3.1) (4.65) | 8. (0.6) (14.81) | 33(2.5) (35.10) | 2 (0.1) (4.34) | 13 (0.9) (38.23) | 118 (8.9) (34.80) | 33 (2.5) (44.00) | 446 (33.8) (15.44) | 5.(0.3) (29.41) | 181 (13.6) (22.18) | 44 (3.4) (19.19) | 3 (0.2) (10.34) | 224 (17.0) (44.44) |
| ஈரோடு (1703) | 139 (0.81) (15.79) | 3 (0.1) (5.55) | 29 (1.7) (30.85) | 11 (0.6) (23.91) | 2 (0.1) (5.88) | 31 (1.8) (9.14) | 17 (0.9) (22.66) | 851 (49.9) (29. 46) | — | 170 (9.9) (20.83) | 28 (1.5) (12.17) | 12 (0.7) (41.37) | 241 (14.6) (47.81) |
| கோபி (876) | 168 (19.1). (19.09) | 17 (1.9) (31.48) | 8 (0.9) (8.51) | 8 (0.9) (17.39) | 1 (0.1) (2.94) | 15 (1.7) (4.42) | 4 (0.4) (5.33) | 337 (38.4) (11.66) | 4 (0.4) (23.52) | 115 (13.1) (14.09) | 9 (1.1) (3.91) | 4 (0.4) (13.79) | 18 (2.0) (3.57) |
| பல்லடம் (657) | 38 (5.7) (4.31) | 2 (0.3) (3.7) | 3 (0.4) (3.19) | — | 4 (0.6)) (11.76) | 21 (3.2) (6.10) | 4 (0.6) (5.33) | 407 (61.9) (14.09) | 4 (0.6) (23.52) | 67 (10.2) (8.21) | 36 (5.4) (15.65) | 1 (0.1) (3.44) | 6 (0.9). (1.19) |
| பொள்ளாச்சி (430) | 63 (14.6) (7.15) | 3 (0.6) (5.5) | — | — | 6 (1.3) (17.64) | 33 (7.6) (9.73) | 4 (0.9) (5.33) | 134 (31.1) (4.63) | — | 67 (15.5) (8.21) | 30 (6.9) (13.04) | 1 (0.2) (3.44) | 3 (0.6) (0.59) |
| உடுமலை (289) | 42 (14.5) (4.77) | — | 2(0.6) (2.12) | 2(0.6) (4.34) | 2(0.7) (5.88) | 65(22.4) (19.17) | 1 (0.3) (1.33) | 64 (22.1) (2.21) | 1 (0.3) (5.88) | 37 (12.8) (4.53) | 21 (72) (13.04) | 3 (1 ) (10.34) | 2 (0.1) (0.39) |
| மொத்தம் (6934) | 880 (12.6) | 54 (0.7) | 94 (1.3) | 46 (0.6) | 34 (0.4) | 339 (4.8) | 75 (1.0) | 2888 (42.9) | 17 (0.2) | 816(11.7) | 230 (3.3) | 29(0.4) | 504(7.2) |

பட்டியல்—2. கோவை மாவட்டத்திலுள்ள வட்டங்களின் பரப்பு, கிராமங்கள், மக்கள்தொகை முதலியவற்றிற்கிடையே உள்ள உறவுகளைக் காட்டும் பட்டியல்

| வட்டத்தின் பெயர் | பரப்பளவு சதுரமைலில் | மாவட்டப் பரப்பளவின் விழுக்காடு | மொத்த கிராமங்களின் எண்ணிக்கை | மாவட்ட மொத்த கிராமங்களுக்கு விழுக்காடு | சதுர மைலுக்கு ஊர் அடர்த்தி | ஊரின் சராசரிப்பரப்பு சதுரமைலில் | கிராமப்புற மக்கள் தொகை சதுரமைலுக்கு | கிராமப்புற மொத்த மக்கள் தொகை (1961-படி) | கிராமந் தோறும் மக்கள் தொகை | மொத்த வருவாய்க் கிராமங்கள் | ஒரு வருவாய் கிராமத்திலுள் சராசரி சிறு கிராமங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அவிஞசி | 493.2 | 8.18 | 650 | 9.37 | 1.3 | 0.75 | 488 | 2,28,876 | 411 | 73 | 8.9 |
| புவானி | 572.4 | 9.49 | 690 | 9.95 | 1.2 | 0.82 | 407 | 2,29,787 | 449 | 57 | 12.1 |
| கோவை | 528.4 | 8.76 | 322 | 4.64 | 0.6 | 1.64 | 616 | 2,86,676 | 746 | 72 | 4.47 |
| தாராபுரம் | 855.7 | 14.19 | 1317 | 18.99 | 1.5 | 0.64 | 352 | 2,99,856 | 231 | 86 | 15.31 |
| ஈரோடு | 599.4 | 9.94 | 1703 | 24.56 | 2.8 | 0.35 | 705 | 4,08,268 | 278 | 211 | 8.07 |
| கோபி | 1128.6 | 18.72 | 876 | 12.63 | 0.7 | 1.28 | 316 | 3,49,086 | 451 | 156 | 5.61 |
| பல்லடம் | 585.2 | 9.71 | 657 | 9.47 | 1.1 | 0.89 | 507 | 2,83,176 | 447 | 106 | 6.19 |
| பொள்ளாச்சி | 708.8 | 11.76 | 430 | 6.20 | 0.6 | 1.64 | 470 | 2,47,243 | 720 | 107 | 4.01 |
| உடுமலைப்பேட்டை | 554.9 | 9.20 | 289 | 4.03 | 0.5 | 1.92 | 348 | 1,92,334 | 829 | 93 | 3.10 |
|  | 6026.6 |  | 6934 |  | 1.1 | 0.86 | 442 | 25,25,302 | 406 | 961 | 7.20 |

பழைய கோவை மாவட்டத்தில் 9 வட்டங்களும், 20 ஊராட்சி ஒன்றியங்களும், 926 ஊராட்சி மன்றங்களும் இருந்தன. மாவட்டத் திலிருந்த மொத்த ஊர்கள் 6934 ஆகும்.

மொத்தம் இருந்த 9 வட்டங்களில் கோபிச்செட்டிப்பாளையம் மிகப்பெரியது(1128.6 ச.மை.), தாராபுரமும்(855.7ச.மை.) பொள்ளாச்சி யும் (708.8 ச.மை.) ஈரோடும் (599.4 ச.மை.) அடுத்துப் பெரிய வட்டங்களாகும். (பார்க்க ; பட்டியல் 2)

**ஊரடர்த்தி (பார்க்க ; பட்டியல் 2)**

மாவட்டத்தில் சராசரி ஒரு சதுரமைலுக்கு ஒரு ஊர் வீதம் (1.1) அமைகிறது. ஆனால் ஈரோடு வட்டத்தில் சராசரி ஒரு மைலுக்கு இரண்டுக்கும் (2.8) மேற்பட்ட ஊர்கள் காணப்படுகின்றன. தாராபுரம் (1.5), பவானி (1.2), அவிஞசி (1.3) ஆகியவைகளிலும் மாவட்டச் சராசரியை விட ஊர்கள் அடர்ந்து காணப்படுகின்றன. பல்லடம் வட்டத்தில் மாவட்டச் சராசரியைப் போன்றே (1.1) காணப்படுகிறது. கோபிவட்டத்தில் நிறைய ஊர்கள் இருந்தாலும் பெரும்பகுதி காடாயிருப்பதால் பொதுவில் ஊரடர்த்தி அங்கு குறை வாகவே உள்ளது (0.7). ஆனாலும் பொள்ளாச்சி (0.6), கோவை (0.6), உடுமலைப்பேட்டை (0.5) ஆகிய மூன்று வட்டங்களிலும் சதுர மைலுக்கு ஒன்றுக்கும் குறைவான கிராமங்களே உள்ளன. இங்கு கிராமங்கள் மிக நெருக்கமின்றியே காணப்படுகின்றன.

**ஊரின் பரப்பு (பார்க்க : பட்டியல் 2)**

ஒவ்வொரு ஊரின் சராசரிப் பரப்புப் பற்றிய கணக்கு ஊரடர்த்தி கணக்கை ஒட்டியே எதிர் விகிதத்தில் காணப்படுகிறது. மிகக் குறைந்த ஊரடர்த்தி உள்ள உடுமலைப் பேட்டை வட்டத்தில் ஊரின் பரப்பு (1.92) அதிகமாகவும், பொள்ளாச்சி (1.64), கோவை (1.64) யில் அதற்கடுத்த நிலையிலும், கோபி (1.28) யில் அதற்கு அடுத்தும் காணப்படுகின்றது. பல்லடம் (0.89), பவானி (0.82), அவிஞசி (0.75), தாராபுரம் (0.64), ஈரோடு (0.35) ஆகியவற்றில் கிராமங்களின் பரப்பு முறையே குறைந்து வருவதைப் பார்க்கிறோம்.

**மக்களடர்த்தி (பார்க்க : பட்டியல் 2)**

கோவை மாவட்ட நாட்டுப்புற மக்களடர்த்தி சதுர மைலுக்கு 442 ஆகும். ஆனால் வட்ட வாரியாகப் பார்க்கும்பொழுது ஈரோட்டில்

நாட்டுப் புற மக்கள் அடர்த்தி அதிகம் (705). இரண்டவதாகக் கோவையில் நாட்டுப் புற மக்களடர்த்தி அதிகம் (616) என்றாலும், அது தொழில் வளர்ச்சியால் அண்மையில் ஏற்பட்ட குடியேற்றங் களின் விளைவே. அடுத்த நிலையில் பல்லடம் (507), அவினாசி (488), பவானி (407) வட்டங்களில் கிராமப்புற மக்களடர்த்தி அதிகம். மிகக் குறைந்த மக்களடர்த்தி கோபியிலும் (316), தாராபுரத்திலும் (352), உடுமலைப்பேட்டையிலும் (348) காணப்படுகிறது.

**ஊர்வாரி மக்கள் தொகை** (பார்க்க : பட்டியல் 2)

கிராம வாரியான சராசரி மக்கள் தொகையைக் கணக்கிடும் பொழுது தாராபுரம் (231), ஈரோடு (278), அவினாசி (411), பல்லடம் (447) வட்டங்களிலுள்ள ஊர்களில் மக்கள் தொகை மிகக் குறைவு. ஆனால் உடுமலை (809), கோவை (746), பொள்ளாச்சி (720) ஊர்கள் மக்கள் தொகை மிகுந்தன.

இவைகளிலிருந்து ஈரோடு, தாராபுரம், அவினாசி, பல்லடம் ஆகிய வட்டங்களில் மிகுதியான கிராமங்கள் இருக்கின்றன; ஆனால் அவற்றில் மக்கள் தொகை குறைவு; உடுமலை, கோவை, பொள்ளாச்சி யில் குறைவான ஆனால் மக்களடர்த்தி மிகுந்த கிராமங்கள் இருக் கின்றன எனத் தெரிகின்றது.

மேலே கண்ட செய்திகளைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம். ஈரோடு வட்டத்தில் மிகப் பழங்காலத்திலேயே குடியேற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. அதை ஒட்டிய காலத்தில் தாராபுரம், பல்லடம், அவினாசியிலும், பவானி, கோபி, கோவையில் சில பகுதிகளிலும் குடியேற்றம் நிகழ்ந்திருக்கிறது. இவைகளைப் பழைய கொங்கு நாட்டின் இதயப் பகுதிகள் எனலாம். உடுமலை, பொள்ளாச்சி வட்டங் களில் மிகப் பிற்காலத்தின் தான் மக்கள் குடியேறியிருக்கிறார்கள். இப்பகுதியில் ஆறுகள் போன்ற நீர் நிலை வசதிகள் ஏதும் இல்லாததே காரணமாகலாம். தாராபுரம் பகுதியிலும் நீர் நிலை வசதிகள் அதிகமின்மையால் விகிதாச்சார அளவு கிராமங்களில் மக்களடர்த்தி பெருகவில்லை. கோபியில் காட்டுப்பகுதி மிகுதியாதலால் பல பகுதிகளில் கிராமங்கள் தோன்றவில்லை.

**விகுதிகள் காணப்படும் விதமும் அவை தரும் செய்திகளும்**

(பார்க்க: பட்டியல் 1)

மேலே கண்ட செய்திகளை விகுதிகள் காணப்படும் விதமும் உறுதி செய்கின்றன. எடுத்துக்காட்டாக கோவை மாவட்டத்தில் ஆறு (நொய்யல், அமராவதி, காவிரி) அல்லது குளம் முதலிய நீர்வளம் மிக்க பகுதிகளிலுள்ள ஊர்களில் ஆதியில் மக்கள் குடியேறினர் என்பதை இடப்பெயர் விகுதிகள் காணப்படும் விதத்தை வைத்து விளக்கலாம். காலத்தால் பழமையான ஊர், நல்லூர், புத்தூர், புரம், மங்கலம் போன்ற விகுதிகள் காணப்படும் விதம் இதையே எடுத்துரைக்கிறது. மிகவும் பழமையான — ஊர் விகுதி பெற்ற ஊர்கள் அதிகம் பவானி வட்டத்திலும் (24. 20%), கோபி (19.09%), ஈரோடு (15 79%), அவிநாசி (12.38%) ஆகியவட்டங்களில் அதற்கடுத்தும் காணப்படுகின்றன. பல்லடம் (4.31%), தாராபுரம் (4.65%) உடுமலை (4.77%), கோவை (5.11%), பொள்ளாச்சி (7.15%) ஆகிய வட்டங்களில் — ஊர் விகுதி பெற்ற கிராமங்கள் குறைவே.

இடைக்காலத்ததாகிய — புத்தூர் தாராபுரம் வட்டத்திலும் (29.41%) பல்லடம் வட்டத்திலும் (23.52%) மிகுதியாக உள்ளதும் பவானி, ஈரோடு, பொள்ளாச்சி வட்டங்களில் அது அறவே இல்லாததும் சில பகுதிகளில் மட்டும் நடந்த குடியேற்றங்களை உணர்த்துகிறது.

பிராமணர்களோடு தொடர்புடைய — நல்லூர் — மங்கலம் விகுதிகள் பெரும்பாலும் எல்லா இடங்களிலும் காணப்பட்டாலும் தாராபுரம் (நல்லூர் : 38.23%), ஈரோடு (மங்கலம் 41 37%) ஆகியவற்றில் தான் அதிகம். இது பிராமணர் மாவட்டத்தின் பல இடங்களிலும் சென்று குடியேறியதை உணர்த்துகிறது. பிற்காலத்து — புரம் விகுதி எல்லா இடங்களிலும் பரவலாகக் காணப்படுவதிலிருந்து ஒரே சீராகப் பரவலாகக் குடியேற்றங்கள் பிற்காலத்தில் நிகழ்ந்ததை உணரலாம்.

பதி என்ற விகுதி இருளர்களோடு தொடர்புடையது. அது மாவட்டம் முழுதும் காணப்படுகிறது. சோழன் பூர்வ பட்டயம் கோவை மாவட்டத்தின் பலபாகங்களிலும் முன்பு இருளர்கள் வாழ்ந்திருந்தார்கள் என்று கூறுவதை இது உறுதி செய்கிறது. பதி —

விகுதி தாராபுரம் (44%), ஈரோடு (22.66%) ஆகிய வட்டங்களில் அதிகம் காணப்படுவதிலிருந்து இருளர் முற்காலத்தில் மாவட்டத்தின் கிழக்குத் தெற்குக் கோடி எல்லை வரை வாழ்ந்திருந்தனர் என்பதை அறியலாம். இன்று அவர்கள் மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதியில் சென்று ஒதுங்கியது பிற்காலத்தில் கொங்கு நாட்டில் குடியேறிய மக்கள் அவர்களைத் துரத்தியது காரணமாயிருக்கலாம்.

*பாளையம்* என்ற ஊர்ப்பெயர் விகுதி, தெலுங்கு அல்லது கன்னடத் தொடர்புகளால் 13-ஆம் நூற்றாண்டில் அறிமுகப்படுத்தப் பட்டது. அதன் பின்னர் நாயக்கர் ஆட்சியின் போது, கோவை மாவட்டத்தில் மட்டும் 72 பாளையப்பட்டுக்கள் இருந்தன.

பாளையம் விகுதியின் அடர்த்தியை நோக்கும் பொழுது சில செய்திகள் புலனாகின்றன. பல்லடம் வட்டத்தில் தான் மிக அதிகம் பாளையங்கள் — அதாவது மொத்த ஊர்ப்பெயர்களில் 61.9% பாளையங்களாக இருக்கின்றன. அதை அடுத்து ஈரோடு வட்டமும் (49. 9%) அவிஞசியும் (43.5%) வருகின்றன. இம் மூன்று மாவட்டங்களையும் சுற்றியுள்ள கோபி (38. 4%), கோவை (42. 2%), தாராபுரம் (33.8%) வட்டங்களில் தொடர்ச்சியாகப் பல பாளையங்கள் காணப் படுகின்றன. ஆனால் பொள்ளாச்சி (31.1%), பவானி (28.1%), உடுமலைப்பேட்டை (22. 1%) ஆகியவற்றில் குறைந்த பாளையங்களே உள்ளன.

கோவை மாவட்டத்திலுள்ள பாளையம் ஊர்ப்பெயர்களில் மிக அதிகம் ஈரோட்டிலும் (29.46%), அடுத்து தாராபுரத்திலும் (15.44%), பல்லடத்திலும் (14.09%), கோபியிலும் (11.6%) காணப்படுகின்றன, அவிஞசி (9.79%) பவானி (6. 71%), கோவை (4. 74%) பொள் ளாச்சி (4.6%), ஆகிய இடங்களிலுள்ள பெயர்களில் மிகக் குறைந்த வையே பாளையம் விகுதி பெற்றவை. உடுமலையில் (2.21%) சதவீதம் ஊர்களே பாளையம் விகுதி பெற்றவை – பட்டி விகுதி பெற்றவையே (19.17%) உடுமலையில் அதிகம்.

மேலே கண்ட செய்திகளிலிருந்து ஈரோடு, தாராபுரம், பல்லடம் அவிஞசியை மையமாகக் கொண்ட பகுதிகளில் தான் பாளையம், ஊர்ப்பெயர் விகுதியாகச் செல்வாக்குப் பெற்ற காலத்தில் பல ஊர்கள் தோன்றியிருக்கின்றன எனத் தெரிகிறது.

அடுத்து வலசு என்ற ஊர்ப்பெயர் விகுதியை எடுத்துக் கொள்ள லாம். இவ்விகுதி தாராபுரம் (17.0%), ஈரோடு (14.6%) ஆகியவற்றின்

கிழக்குப் பகுதியில் தோன்றி மேற்கே செல்லச்செல்லக் குறைந்து கொண்டே வருகிறது (பார்க்க : பட்டியல்-1). மேலும் ஈரோடு (47.81%). தாராபுரம் (44.44%) வட்டங்களிலேயே சுமார் 90 சத வீதம் வலசுகள் காணப்படுகின்றன. கோவை, அவிநாசி வட்டங்களில் இவ்விகுதியே இல்லை. மற்றைய வட்டங்களிலும், தாராபுரம், ஈரோடு ஆகியவற்றை ஒட்டிய பகுதிகளில் ஒன்றிரண்டே காணப்படுகின்றன. இதன் தொடர்ச்சியாக கிழக்கே திருச்சி மாவட்டத்திலும் தெற்கே மதுரை மாவட்டத்திலும் வலசுகள் காணப்படுகின்றன. எனவே இவ்விகுதிகளின் பரப்பிலிருந்து, இவை கிழக்கேயிருந்து மேற்கு நோக்கி வந்த குடியேற்றத்தைத் தெரிவிக்கிறது எனலாம்.

கொங்கு வேளாளர்களோடு தொடர்புடைய இன்னொரு விகுதி – காடு இவ்விகுதி பொள்ளாச்சியில் இல்லை. கொங்கு வேளாளர் மிகுதியாக வாழும் தாராபுரம் (35.10%), ஈரோடு(30.85%) ஆகியவற்றில் இது அதிகம். கொங்கு வேளாளர் தமக்குச் சொந்தமான பண்ணை நிலத்தில் வீடு கட்டி வாழும் தன்மையினர். அவ்வாறு தோன்றிய வீடுகளைச் சுற்றி சந்ததிப் பெருக்கத்தால் புதிய வீடுகள் தோன்றி அதுவே புதிய ஊராக உருவெடுக்கும். அத்தகைய ஊர்கள் பலவும் ஆதியில் இருந்த பண்ணையின் பெயரால் காடு அல்லது தோட்டம் எனவே அழைக்கப்படும். இதைக் கோவை மாவட்ட இடப்பெயர் விகுதிகள் காட்டுகின்றன.

பாளையம் விகுதியைப் போன்று பெருவழக்குப் பெற்ற பிற்கால விகுதி - புதூர். இவ்விகுதி பெற்ற ஊர்கள் எல்லா வட்டங்களிலும் ஏகதேசம் ஒத்த அளவிலேயே பரவலாகத் தோன்றியிருக்கிறது. மாவட்டம் முழுவதும் பழைய ஊர்களை ஒட்டிப் பரவலாகப் புதுக் குடியேற்றங்கள் உருவானதை இது காட்டுகிறது (பார்க்க : பட்டியல் 1).

பட்டி என்ற ஊர்ப் பெயர் விகுதி உடுமலை (2.4%), வட்டத்தில் மிக அதிகமாகக் காணப்படுகின்றது. இவைகளின் சுற்றுப்புறத்திலுள்ள தாராபுரம்(8.9%), பொள்ளாச்சி (7.6%), கோவை (6.5%), பல்லடம் (3 2%) வட்டங்களிலும் இது குறைந்த அளவில் காணப்படுகிறது. மொத்தப் பட்டிகளில் அதிகம் தாராபுரத்திலும் (34.80%). உடுமலையிலும் (19.17%) தான் காணப்படுகின்றன

என்பதும் கவனிக்கத் தக்கது. உடுமலை, தாராபுரம் வட்டங்களின் தெற்கே மதுரை மாவட்டத்தில் பட்டி மிக அதிகமாகக் காணப்படு கிறது. இதன் பரப்பைக் கவனித்தால் மதுரைப் பகுதிகளிலிருந்து வடமேற்காக நகர்ந்து வந்த குடியிருப்பை இது தெளிவாக்குகிறது. பவானி (3.0%) வட்டத்தில் காணப்படும் பட்டிகள் - சேலம், தர்மபுரி யில் காணப்படும் பட்டிகளின் தொடர்ச்சியாகக் காணப்படுகின்றன3.

மாவட்டத்தில் காணப்படும் மொழிவாரி மக்கள் தொகையை இதோடு பொருத்திப் பார்த்தால் புதிய செய்திகள் தெரிய வருகின் றன. (பார்க்க : பட்டியல் .3)

கோவை மாவட்டத்தில் தெலுங்கு, கன்னடம், மலையாளம் பேசுவோர் மிகுதியாகக் காணப்படுகின்றனர்.

கோவை மாவட்டத்தில் தமிழ் பேசுவோர் 67.612 சத வீதமும், தெலுங்கு பேசுவோர் 20.028 சதவீதமும், கன்னடம் பேசுவோர் 8.524% சதவீதமும் வாழ்கின்றனர். மலையாளத்தை தாய் மொழியாகக் கொண்டவர்கள் 2.303 சதவீதம் பேர் வாழ்கின்றனர்.

இனி இம் மொழி பேசுவோர் வாழும் பரப்புகளைப் பார்ப் போம்.

ஈரோடு வட்டத்தில் தான் தமிழ் பேசுவோர் அதிகம். அதா வது 84.762%. அடுத்ததாக தாராபுரத்தில் 83 554%. தமிழ் பேசு வோர் விழுக்காடு மிகவும் குறைந்தது கோவை,அவினசி,பொள்ளாச்சி, உடுமலை ஆகியவைகளாகும்.

தெலுங்கு பேசுவோர் உடுமலைப்பேட்டையில் தான் மிக அதி கமாக 34.147% காணப்படுகின்றனர். அடுத்ததாகப் பொள்ளாச்சி யிலும் கோவையிலும் இவர்கள் தொகை அதிகம்.

தாராபுரத்தில் தான் தெலுங்கு பேசுவோர் மிகக்குறைவு 11.73%).

---

3. *மேற்கண்ட விகுதிகளின் பரப்புகளை விளக்கும் நிலப்படங்களை ஆசிரியரின்* Place names of Coimbatore District *என்ற அச்சிடப்படாத ஆய்வு நூலில்* (1973) *காண்க.*

**பட்டியல் — 3. கோவை மாவட்டத்தில் முக்கிய மொழி பேசும் மக்களின் தொகை**

| வட்டத்தின் பெயர் | மொழிவாரி மக்கள் தொகை | | |
|---|---|---|---|
| | தெலுங்கு% | தமிழ்% | கன்னடம்% |
| அவிநாசி | 19.383 | 57.899 | 21.805 |
| பவானி | 12.726 | 80.788 | 5.560 |
| கோயம்பத்தூர் | 26.404 | 55 575 | 15.925 |
| தாராபுரம் | 11.736 | 83.554 | 4.344 |
| ஈரோடு | 13.249 | 84.762 | 1.498 |
| கோபி | 20.109 | 63.117 | 14.796 |
| பல்லடம் | 19.928 | 74.533 | 5.039 |
| பொள்ளாச்சி | 29.869 | 57.359 | 10.120 |
| உடுமலைப்பேட்டை | 34.147 | 61.031 | 4.060 |

கன்னட மொழியினர் அவிநாசி வட்டத்தில் தான் மிக அதிகமாக 21.805 சதமும் அடுத்ததாகக் கோவை, கோபியிலும் வாழ்கின்றனர். உடுமலைப் பேட்டையில் இவர்கள் தொகை மிகக்குறைவு.

இவைகளை வைத்து நோக்கும் போது, தமிழ்பேசுவோர் வாழும் பகுதியிலும், கன்னட மொழியினர் மிகுதியாக வாழும் பகுதியிலும் பாளையங்கள் மிகுதியாகத் தோன்றியிருக்கின்றன எனத் தெரிகிறது.

வலசு — என்ற குடியிருப்புக்கள் முற்றிலும் தமிழ் பேசும் வட்டங்களான ஈரோடு, தாராபுரம் பகுதியிலேயே தோன்றியிருக்கின்றன. இதை உறுதிப்படுத்துவது போலவே, இப்பகுதியில் வாழும் தமிழ்பேசும் கொங்கு வேளாளர் திருச்சிப் பகுதியிலிருந்து

வந்து புகுந்து குடியேறி மெல்ல மெல்ல மேற்கு நோக்கிச் சென்றதாகக் கூறிக் கொள்கின்றனர்.

பட்டி என்ற விகுதி தெலுங்கு மொழியினர் பெரும்பான்மையாக இருக்கும் உடுமலை, பொள்ளாச்சி வட்டங்களில் காணப்படுவதால் இவர்கள் குடியேறிய காலத்தில் இவை தோன்றியிருக்கும் என்பதில் ஐயமில்லை. இவர்கள் மதுரைப்பகுதியிலிருந்து நாயக்கராட்சியின் போது வடமேற்காகத் தங்கள் குடியேற்றத்தைத் தொடங்கியிருக்கலாம்.

மிகப் பழங்காலத்தில் கோவை மாவட்டத்தில் மழவர், கொங்கர், கோசர், ஆயர், இருளர் போன்ற மக்கள் வாழ்ந்தனர். வரலாற்றுக் காலத்தில் சேரர் ஆட்சியின் போது மலைநாட்டு மக்களும், பிறகு சமணத்தின் செல்வாக்கோடு தெற்கே வந்த கர்நாடக மக்களும், இப்பகுதியில் குடியேறினர். சோழர் காலத்தில் சோழ பாண்டிய மக்களும், நாயக்கர் காலத்தில் கன்னட ஆந்திர மக்களும் வந்தேறினர். இவர்களால் பல ஊர்கள் தோன்றின.

கோவை மாவட்டத்தின் பழைய ஊர்கள் காஞ்சி (நொய்யல்) அமராவதி, பவானி, காவிரி — ஆகிய ஆறுகளின் கரைகளிலும் மற்றும் நீர்ப்பாசனம் மிக்க சில நீர்நிலைகளை ஒட்டியுமே தோன்றியிருக்கின்றன என்பது நன்குகத் தெரிகிறது. பிற்காலத்தில் தோன்றிய ஊர்கள் நீர் வசதியற்ற பகுதிகளில் மிகுதியாக அமைந்திருக்கின்றன. நீர் வசதியுள்ள பழைய இடங்களிலும் நெருக்கமாகப் புதிய ஊர்கள் தோன்றின.

<u>நூலடைவு</u>

1. Census of India — 1961, Volume IX — Madras, Part X—i, Volume I, District Census Hand Book - Coimbatore, 1964.

2. Nachimuthu, K., Place Names of Coimbatore District, unpublished Ph. D., thesis, Kerala university, 1973.

## 13. கொங்குமண்டல ஊர்த்தொகை
## – ஒரு சிறு குறிப்பு

தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு முறையான வரலாற்றுணர்வு இல்லை என்று குறை சொல்லப்படுவதுண்டு. அது ஒரு வேளை சரியாக இருக்கலாம். இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு மிகப் பெரிய அரசர்களாக விளங்கிய இராஜராஜ சோழன், இராஜேந்திர சோழன் ஆகியோர் வரலாறுகளோ, வெற்றிகளோ பிற்காலத் தமிழனுக்கு – ஆங்கிலேய முறைப்படி எழுதப்பட்ட வரலாற்று நூல்கள் வரும்வரை தெரியாது. ஆனால் தமிழ்நாட்டில் வரலாற்றுச் சான்றுகளுக்குக் குறைவில்லை. இங்குள்ள ஆயிரக்கணக்கான கோயில்களும், சிலைகளும், கல்வெட்டுக்களும் அரிய வரலாற்றுச் சான்றுகள் அல்லவா? எனவே நமக்கு இல்லாத குறை நாட்டு வரலாற்றை அவ்வப்போது விஞ்ஞான பூர்வமாகப் பார்த்துத் தொடர்ச்சியாக எழுதி வரும் முயற்சியின்மையே. இந்தக் குறையை இலக்கியப் புலவர்கள்தான் ஓரளவு தீர்த்தனர் என்று சொல்ல வேண்டும்.

தனி அரசர்களின் வரலாற்றை, இலக்கியப் பாங்கோடு பல புலவர்கள் உண்மையும் கற்பனையும் கலந்து உலா, பரணி, கோவை, பிள்ளைத் தமிழ் போன்ற நூல்களாக இயற்றினர்; தனி ஊர்களின் வரலாற்றைத் தலபுராணமாகப் பாடினர் சிலர்; சாதி, சமூகங்களின் வரலாற்றைச் செய்யுளில் எழுதிவைத்தனர் சிலர். நாட்டுப் பிரிவு களின் வரலாருக ஒவ்வொரு மண்டலங்களின் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துச் சதக வடிவில் செய்யுளில் பாடினர் சில புலவர்கள். இவ்வாறு வரலாற்றுப் பிரிவுகள் ஒவ்வொன்றுக்கும் எடுத்துக்காட்டாக அமையத் தக்கவிதத்தில் தமிழ் நூல்கள் காணப்பட்டாலும் அவை

எல்லாம் அடிப்படையில் பல குறைபாடுகளை உடையனவாய் முறையான வரலாற்று நூல்கள் என்று சொல்லத்தகும் தகுதியை அடையவில்லை. இதற்கு முழுமையான வரலாற்றுப் பார்வை, நடுநிலை மதிப்பீட்டுணர்வு முதலியவற்றின் குறைவையே காரணமாகச் சொல்லலாம். சமயப்பாங்கான பௌராணிக நெறியும், இலக்கியப் பாங்கான கற்பனை நெறியும், அக்காலத்தில் அறிவின் எல்லாத்துறைகளிலும் ஆட்சி செலுத்தியதே இதற்கெல்லாம் மூலகாரணங்கள் ஆகலாம்.

**கொங்கு மண்டல சதகம்:**

தமிழ் நாட்டின் நாட்டுப் பிரிவுகளின் வரலாற்றைத் தொகுத்து நோக்கவேண்டும் என்ற எண்ணம் படிக்காசுப்புலவர் கி. பி. 17 அல்லது 18—ஆம் நூற்றாண்டில் தொண்டை மண்டல சதகம் எழுதிய போது தொடங்கியது எனலாம். அவரைத் தொடர்ந்து ஒவ்வொரு மண்டலத்திற்கும் சதகம் பாடும் பழக்கம் ஏற்பட்டது. அந்த வகையில் எழுந்ததுதான் கொங்குமண்டல சதகம் என்னும் நூல்.

கொங்குமண்டல சதகத்தைக் கொங்குநாட்டில் குறுப்பு நாடு என்ற உள் நாட்டில் சமணத் திருப்பதியாக விளங்கிய விஜயமங்கலத்தில் சமண அந்தணர் குலத்தில் உதித்த ஜினேந்திரர் என்ற கார்மேகக் கவிஞர் எழுதினார். இவர் தம் நூலுள் தளவாய் ராமப்பையர், படிக்காசுப்புலவர் முதலியோரைப் பாடுகிறார். இவர்கள் முறையே கி. பி 1672, 1699–அளவில் வாழ்ந்தவர்கள். எனவே கார்மேகக் கவிஞர் காலமும் அதற்குப் பிற்பட்டதாகலாம்; ஒருவேளை 18–ஆம் நூற்றாண்டின் இடை அல்லது கடைக்காலத்தைச் சார்ந்ததாகலாம். இந்நூலை முதன்முதலில் திருச்செங்கோடு ‘விவேக திவாகரன்’ ஆசிரியர் தி. அ. முத்துசாமிக் கோனார் அவர்கள் 1923–இல் தான் எழுதிய உரையோடு சேர்த்துப் பதிப்பித்திருக்கிறார்.

**கொங்குமண்டல ஊர்த் தொகை:**

கொங்குமண்டல சதகத்தின் பிற்சேர்க்கையாகக் ‘கொங்கு மண்டல ஊர்த்தொகை’ என்ற தலைப்பில் பல பாடல்களைப் பதிப்பித்திருக்கிறார் கோனார். ஆனால் கொங்குமண்டல ஊர்த்தொகை யார் பாடியது என்ற விவரத்தை அவர் தரவில்லை. அதைப் பற்றி அவர் எழுதும் பகுதி வருமாறு:

“கொங்குமண்டல சதகத்துள் காணப்படும் கதைகள் நிகழ்ந்த ஊர்கள், இந்நாட்டினுட்பட்டது என்பது எளிதிற்கண்டு கொள்ளும்

பொருட்டாக இவ்வூர்த்தொகை இதன் அனுபந்தமாகச் சேர்த்தது. இவற்றை அறிதற்காக ஒவ்வொரு நாட்டிலும் புகுந்து **அந்த அந்த நாட்டைச் சார்ந்த ஊர்களைக் காட்டும் பாடல்களைக் கண்டும், பாட்டு அகப்படாத நாட்டின் ஊர்களை ஆதாரத்துடன் தேடிப்புதிய பாட்டுகளியற்றி * இவ்விந அடையாளக் குறிப்பிட்டும் இத்துடன் சேர்த்துள்ளேன்** (தடித்த எழுத்துக்கள் கட்டுரை ஆசிரியர் கொடுத்தவை.) இதில் நாட்டின் எல்லைகளிலுள்ள ஊர்கள் சிலவற்றை இரு நாட்டினுஞ் சேர்த்திருக்கிறார்கள். பல பழைய நூல்களிற் கூறும் ஊர்கள் மறைந்து போயின. சில பழம் பெயர் மாறியும் பிற்காலத்து விடுபட்டுமிருக்கின்றன. புதிய ஊர்களைச் சேர்த்தும் எண்ணுவோருமுண்டு. இதிற் பல தவறுகளிருக்கவுங்கூடும். இப்படி நேர்வது இயல்பு என்று பொறுமை கொண்டு ஆன்றோர் தெரிவிப்பின் வந்தனத்துடன் ஏற்றுக் கொண்டு மறுபதிப்பில் திருத்தமாக வெளியிடுகின்றேன்'' (கொங்குமண்டல சதகம் பிற்சேர்க்கை ப.2)

கோனார் கூறுவதிலிருந்து கொங்குமண்டல ஊர்த்தொகை கொங்குமண்டல சதகத்தின் ஒருபகுதி அன்று என்பதும், நாட்டு வழக்கிலுள்ள பல பாடல்களைத் தொகுத்தும், தான் சிலவற்றை எழுதிச் சேர்த்தும் கொங்குமண்டல ஊர்த்தொகை என்ற பெயரில் வெளியிட்டிருக்கிறார் என்றும் தெரிகின்றன. கொங்குமண்டல ஊர்த் தொகையில்,

> தண்டமிழாய் பவர்பதிக டரிசிப்போர் தொன்மைச்
> சரிதமுறை விவகரிப்போர் தடுமாற்று றுது
> மண்டலத்து ளிருபத்து நான்குநா டவற்றை
> மருவுபநா டொவ்வொன்றின் மன்னியபே ரூரைப்
> பண்டரசர் செப்பேடு கல்லெழுத்துத் தமிழ்நூல்
> பலவாய்ந்து பிழைபோக்கு பழங்கவியு மதுகொள்
> வண்டெனயா னிசைகவியுந் தொகுத்ததனைக் கொங்கு
> மண்டலவூர்த் தொகையெனப் பேர்வழங்க விளக்கினனே.

என்ற பாடல் (2) நூன் முறையினை விளக்குகிறது. இது பழம்பாடலா அல்லது கோனார் எழுதிய பாடலா என்பதும் தெளிவாகத் தெரியவில்லை. என்னினும், ''பிழைபோக்கு பழங்கவியுமதுகொள் வண்டெனயானிசை கவியுந் தொகுத்ததனைக் கொங்குமண்டல வூர்த்தொகையெனப் பேர் வழங்க விளக்கினனே'' என்ற பகுதி கோனார் அவர்கள் உரைநடை முகவுரையிற் சொன்ன செய்தியைச் செய்யுளிற் கூறுதலால், இது

கோனர் அவர்கள் பாடிய பாட்டு, தொகுத்த நூல் என்பதை உறுதி செய்கின்றன.

காப்பு (1), நூல்முறை (1) என்ற இரண்டு பாடல் தவிர நூலுள் 36 பாடல்கள் காணப்படுகின்றன. காப்பும், நூன்முறையும் கோனர் இயற்றியவை. ஏனைய 36 பாடல்களுள், 16 கோனர் அவர்களால் பாடப்பட்டவை (உடுக்குறியிட்டவை); 20 பாடல்கள் ஆங்காங்கே நாட்டு வழக்கில் முன்பே வழங்கி வந்தவை ஆகும்.

பிற்காலத்தில் இவ்வூர்த் தொகையைத் தனியே எடுத்துப் பதிப்பித்தவர்கள், அது கார்மேகக் கவிஞர் பாடியதென்று எழுதியிருப்பதோடு அமையாது, தொகுப்பாசிரியர் கோனர் பாடிய (உடுக்குறியிட்ட) பாடல்களையும் வேறுபாடின்றி பழைய நூலினவை போல அமைத்துள்ளமை வரலாற்றுப் பிறழ்வுணர்ச்சியால் ஏற்பட்டதே.

ஊர்களைத் தொகுத்துப் பாடும் மரபு பழமையானதாகத் தெரிகிறது. திருமுருகாற்றுப்படையில் முருகனது ஆறுபடை வீடுகள் தொகுத்துப் பாடப்படுகின்றன. பக்தி இயக்கக் காலத்தில் சைவத் திருப்பதிகளைத் தொகுத்துச் சம்பந்தர் திருப்பதிக் கோவை எனவும், அப்பர் சேத்திரக் கோவை, திருப்பதிக் கோவை எனவும், சுந்தரர் ஊர்த்தொகை, திருநாட்டுத்தொகை எனவும், ஐயடிகள் காடவர்கோன் சேத்திர வெண்பா எனவும், உமாபதி சிவாச்சாரியார் திருப்பதிக் கோவை எனவும், வைணவத் திருப்பதிகளைத் தொகுத்து 108 திருப்பதியந்தாதி எனத் திருவேங்கடநாதரும் பாடுவது இங்கு குறிப்பிடத்தக்கது. இதே பாணியில்தான் கொங்குமண்டல ஊர்த்தொகைப் பாடலும் தொகுக்கப்பட்டது அல்லது பாடப்பட்டது என்பதை அதைப் பாடியவர் பாட்டாலே அறியலாம். (பாடல் மேலே கொடுக்கப்பட்டுள்ளது.)

இந்நூல் தொகுக்கப்பட்ட முறையை தொகுத்தோர் கூற்றிலிருந்து பின்வருமாறு உரைக்கலாம்.

**நூலின் நோக்கம் :**

1. தமிழாராய்ச்சி செய்வோர் 2. பதிகள் தரிசிப்போர் 3. பழைய சரித்திரங்களை விரித்துரைப்போர் ஆகியோர்க்கு உதவும் நோக்கத்தோடு இந்நூல் தொகுக்கப்பட்டது.

**நூலில் இடம்பெற்ற பாடல்கள்** 1. வழிவழியாக நாடுகளில் வழங்கிவந்தவை. 2. அரசர்களின் செப்பேடு, கல்வெட்டு, தமிழ் நூல்கள், நாட்டுவழக்கு ஆகியவற்றை ஆராய்ந்து தொகுப்பாசிசியர் கள் தொகுத்தவை, ஆகியவைகளாகும்.

**நூலமைப்பு**

இந்த ஊர்த்தொகை கொங்குமண்டலத்தில் 24 நாடுகள், அவற்றின் துணை, இணைநாடுகள் இவற்றின் பெயர்களைக் கூறி ஒவ்வொரு நாட்டிலும் அமைந்துள்ள புகழ்பெற்ற பெரிய ஊர்களின் பெயர்களைப் பல பாடல்களாகப் பாடுகிறது.

கொங்கு இருபத்து நான்கு நாடுகளைக் குறிக்கும் பாடலாக கொங்குமண்டல ஊர்த்தொகையில் கோனூர் சேர்த்துள்ள பாடல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

சொல்லவரி தானபூந் துறைசை தென்கரை நாடு தோன்றுகாங்கேய
தோலாத பொன்கலூர் நாடுதிக மூறையளி தோய்ந்தவா ரக்கநாடு
வல்லமை செறிந்ததிரு வாவினன் குடிநாடு மணநாடு தலையனூடு
வரதட்டை பூவாணி யரையனூ டொடுவங்க வடகரை கிழங்குநாடு
நல்லுருக் கன்னூடு வாழவந் தியுமண்ட நாடுவெங் காலநாடு
நாவலர்கள் சொல்கா வடிக்கநா டானைமலை ராசிபுர நாடுநிதமும்
இல்லறம் வளர்த்துதவி மல்குகாஞ் சிக்கோயி லியல்செறி குறிப்புநாடு
மினியபுகழ் சேர்கொங்கு மண்டலந் தனிலான இருபத்துநான்கு
நாடே.

ஆனால் வாலசுந்தரக் கவிஞரின் கொங்குமண்டல சதகம் பதிப்பித்த (1971), வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் கீழ்வரும் பாடல் ஒன்றைக் (மேலேகண்ட நூல் ப. II) காட்டுவார்:

திருமருவு புகழ்கொங்கு மூவாறு கோட்டமும்
தென்கரை நாலாறு நாடு
தென்கரைசை பூந்துறைசை யாறுதன் தலைசையும்
செயகாங்கை வேங்கை தட்டை
மருவுலவு அண்டையும் திருவாவினன் குடி
வாரக்க மானை மலையும்
மதுசொக்க நல்லூரும் பொங்கலூர் தறையனூர்
வடகரை யொடுவங் கழும்
அருள்பரவு காவடி குறிப்பைபூ வாணியும்
அன்று புகழ்ராசி புரமும்

அரையமண நாடு கிழங்குவாழ் வந்தியும்
ஆகநா லாறு நாடு
குருவருள் முந்நூற்று எண்பது சிவாலயங்
கொங்கேழு தேவர் சபையும்
கொல்லிமலை வெள்ளிமலை தலைமலை வராககிரி
கொழித்துலவு கொங்கு நாடே.

இதிலுள்ள 380 என்பது சிவாலயம் என்ற குறிப்பு நோக்கத்தக்கது.

இதே போன்று கொங்கு மண்டல ஊர்த்தொகையில் இடம் பெற்ற பழைய 20 பாடல்களுக்கும் மாற்றுவடிவங்களும், மாற்றுப் பாடல்களும் காணப்படலாம். கோனாரும் அங்ஙனம் சிலவற்றைக் காட்டுவார் (ஆறைநாடு, வடபரிசார நாட்டுப் பாடல்கள்) இவைகளை எல்லாம் தொகுத்து வைத்து ஆராய வேண்டும்.

கொங்குமண்டல ஊர்த்தொகையில் சுமார் 671 ஊர்களின் பெயர்கள் பாடப்பட்டுள்ளன. இவற்றில் நாடுகளின் எல்லைகளிலுள்ள ஊர்கள் சிலவற்றை இருநாட்டிலும் சேர்த்திருக்கிறார்கள். இதில் கூறப் பட்ட பல ஊர்கள் மறைந்து போயின. சில பழம் பெயர் மாறி இருக்கின்றன. இதில் உள்ள பெயர்களும் இடங்களுமே கொங்கு மண்டலத்தின் ஒரு பகுதியாகிய பழைய கோவை மாவட்டத்தில் மட்டும் இன்று சுமார் ஏழாயிரம் கிராமங்கள் உள்ளன. எனவே பிற்காலத்தில் எவ்வளவு ஊர்கள் வளர்ச்சியுற்றுள்ளன என்பதை இதிலிருந்து அறியலாம். கொங்குமண்ட ஊர்த் தொகை பற்றி இன்னும் விரிவாக வேறொரு சந்தர்ப்பத்தில் ஆராயலாம்.

---

### நூலடைவு


முத்துசாமிக் கோனார், தி. அ., (பதிப்பு) கார்மேகக்கவிஞர் இயற்றிய **கொங்கு மண்டல சதகம்**—மூலமும் உரையும் — கொங்கு மண் டல ஊர்த்தொகையும் உரையும் சேர்ந்தது — சென்னை, 1923.

தெய்வ சிகாமணிக்கவுண்டர், வே. ரா., வித்துவான், (உரையா சிரியர்). வாலசுந்தரக் கவிஞர் இயற்றிய **கொங்கு மண்டல சதகம்**, தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி வெளியீடு, பேரூர், 1971.

## 14. தமிழிலக்கியமும் இடப்பெயர்களும் -ஒரு சிறுகுறிப்பு.

ஊர்ப் பெயர்களைப் பற்றிய உணர்வு தமிழகத்தில் பண்டு தொட்டே இருந்து வந்திருக்கிறது. தமிழ் மக்கள் நிலத்தை ஐவகையாகப் பகுத்துப் பெயரிட்டதைப் போன்றே, அங்கு வாழும் மக்களின் பெயர்கள் அவர்கள் வாழும் ஊரின் பெயர்கள் – ஆகியவைகளையும் வகைப்படுத்தினர். குறிஞ்சி நிலத்து ஊர்கள் குறிச்சி, சிறுகுடி என்றும், முல்லை நிலத்து ஊர்கள் பாடி, சேரி என்றும், பாலை நிலத்து ஊர்கள் குறும்பு, பறந்தலை என்றும், நெய்தல் நிலத்து ஊர்கள் பாக்கம், பட்டினம் எனவும் முன்பு பெயரிடப்பட்டன. ஆனால் பிற்காலத்தில் திணைமயக்கம் ஏற்பட்ட காலத்தில் இவ்வரையறை மயங்கியது. சான்று: குறவர் பாக்கம் (குறுந். 339)

தொல்காப்பியம், தலைவனுடைய ஊரைச் சார்த்திப்பாடும் மரபை

> "ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
> யாரும் சார்த்தி அவையவை பெறுமே"
>
> (தொல். பொருள்.மரபியல்: 619)

என்ற நூற்பாவில் சுட்டுகிறது. சங்க இலக்கியங்களில் தலைவி தமிழ் வேந்தர்களுடைய நகரங்களோடு உவமிக்கப்படுகிறாள்.(ஐங் மருதம்,56: ஆமூர்; அகம். 10:13- தொண்டி). ஆற்றுப்படை நூல்களில் (சிறுபாண்., பெரும்பாண்., பொருநர் – ஆற்றுப்படை) தமிழ் வேந்தர்களுடைய நகரங்களைப் பற்றிய செய்திகளைப் பார்க்கிறோம். திருமுருகாற்றுப்படையில் முருகனுடைய ஆறுபடை வீடுகளைப் பற்றிய செய்திகள் பாடப்படுகின்றன. பட்டினப்பாலையும், மதுரைக் காஞ்சியும் - இரு பெருந் தலைநகரங்களைப் பாடுவன. பரிபாடலில், மதுரை, திருப்பரங்

குன்று ஆகிய ஊர்களைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன 1. சங்க இலக்கியத்தில் (பத்துப்பாட்டு, எட்டுத்தொகை) நூற்றைம் பதுக்கும் மேற்பட்ட ஊர்கள் காணப்படுகின்றன 2.

சிலம்பின் காண்டங்கள் முப்பெருநகர்களின் பெயர்கொண்டு விளங்குகின்றன. கானல் வரியில் பாட்டுடைத் தலைவன் பெயரும் ஊரும் சார்த்திப் பாடும் சார்த்துவரி என்ற வரிப்பாடல் காணப்படு கின்றது 3.

பக்தி இலக்கியக் காலத்தில் இறைவன் அமர்ந்துள்ள ஒவ்வொரு ஊர்களும் போற்றப் பெற்றன. ஒவ்வொரு ஊரிலும் உள்ள இறைவனைப் பாடும் பத்துப்பாடல்கள் பதிகங்கள் எனப்பட்டன. பத்துப் பாடல்களை உடையதால் பதிகம் எனப்பட்டதா? அல்லது பதிகளைப் பாடியதால் பதிகம் என அழைக்கப்பட்டதா? (சதம் – சதகம் போல பதி + அகம் – பதியகம் – பதிகம் என வந்திருத்தல் கூடும்).

ஊரில் வாழும் இறைவன், அவனோடு தொடர்புடைய பொதுக் கதைகள், அவ்வூரும் இறைவனும் தொடர்பு கொண்டுள்ள சிறப்புக் கதைகள், அவ்வூரின் இயற்கை வளம் ஆகிய இந்தப் பாகுபாடுகளின் படி பதிகங்கள் அமைக்கப்பட்டன. இதனால் அவ்வூர்களின் தனிவர லாறு ஓரளவு போற்றப் பெற்றது என்றே கூறவேண்டும். இவையே யன்றி ஊர்ப்பெயர்களைத் தொகுத்தும் பாடல்கள் அமைக்கப்பட்டன. திருப்பதிக் கோவை (சம்பந்தர்), சேத்திரக்கோவை, திருப்பதிக் கோவை (அப்பர்). ஊர்த்தொகை, திருநாட்டுத்தொகை (சுந்தரர்), சேத்திர வெண்பா (ஐயடிகள் காடவர்கோன்), திருப்பதிக் கோவை (உமாபதி சிவம்), நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி (திருவேங்கட நாதர்) ஆகியவைகளை இதற்குச் சான்றாகக் காட்டலாம். பிறகு காப்பி யத்தில் 'வளநகர்' என்ற பகுப்பில் ஊர்களைப் பற்றிய செய்திகள் விரிவாகப் பாடப்பட்டன. இவ்வாறு ஊர்களைப் பாடும் இலக்கியமரபு பிற்காலத்தில் தலபுராணம் என்ற ஒரு இலக்கிய வகைக்கே வித் திட்டதெனலாம். தலபுராணங்களில் அவ்வூரைப் பற்றிய வரலாறுகள், பழங்கதைகள் யாவும், திரட்டப்பட்டுக் கோவையாகத் தரப்பட்டன. அவ்வூரின் இயற்கை அழகுகள் அழகான முறையில் வருணிக்கப்

1. *பரிபாடல் திரட்டு: 6–11.*
2. *வையாபுரிப் பிள்ளை, எஸ்., சங்க இலக்கியம், இரண்டாம் பதிப்பு (1967).*
3. *சிலம்பு. 8: 2–4; 28–30.*

பட்டன. இவைகளுக்கிடையில் அவ்வூர் இறைவனோடு தொடர்புடைய கதைகள் செருகப்பட்டன. தமிழகத்தில் பெரும்பாலான ஊர்களும் தலபுராணம் பெற்று விளங்குகின்றன. மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் 16 தலபுராணங்களைப் பாடியுள்ளார். இதுவே அன்றிக் கோவை (தஞ்சை வாணன் கோவை), உலா (திருவாரூர் உலா), கலம்பகம் (மதுரைக் கலம்பகம்), பிள்ளைத்தமிழ் (மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்), பள்ளு (முக்கூடற் பள்ளு), குறவஞ்சி (குற்றாலக் குறவஞ்சி) ஆகிய பிற இலக்கிய வகைகளும் ஊரோடு தொடர்பு படுத்திப் பாடப் பயன்படுத்தப்பட்டன. இலக்கியத்தில் மட்டுமின்றி நாட்டு வழக்காகிய பழமொழிகளிலும் ஊர்கள் இடம் பெறுகின்றன. "கடம்பூருக்கு வழி எது என்றால் இடம் பூண்நாகு (நன்னூல் விருத்தி உதாரணம்), வட்டுக் கோட்டைக்கு வழி எது என்றால் கொட்டைப்பாக்கு துட்டுக்கு இரண்டு" போன்ற பழமொழி களில் ஊர்ப்பெயர்கள் அமைவதைக் காணலாம். ஊர்ப்பெயர்களை வைத்துத் திறமை தோன்றச் செய்யுள் பாடுவதும் உண்டு. கீழ்க் காணும் பாடல் ஈழப் புலவர் ஒருவர் பாடியது 4:

"முடிவிலா துறை சுன்னாகத்தான் வழி
  முந்தித்தாவடி கொக்குவில் மீதுவந்
தடையஓர் பெண்கொடி காமத்தால் அசைத்து
  ஆனைக்கோட்டை வெளிகட்டுடை விட்டாள்
உடுவிலான் வரப் பன்னாலையான் மிக
  உருத்தனன் கடம்புற்ற மல்லாகத்தில்
தடைவிடாது அணை என்று பலாலி கண்
  சாரவந்தனள் ஓர் இளவாலையே"

இதில் (1) சுன்னாகம் (2) தாவடி (3) கொக்குவில் (4) கொடி காமம் (5) ஆனைக்கோட்டை (6) கட்டுடை (7) உடுவில் (8) பன்னாலை (9) மல்லாகம் (10) பலாலி (11) இளவாலை — ஆகியன ஈழத்திலுள்ள ஊர்களின் பெயர்களாகும்.

---

4. *இக்கருத்தை எனக்குத் தெரிவித்தவர் என் ஈழத்து நண்பர் டாக்டர் சி. சத்தியமூர்த்தி அவர்கள். மேலே கண்ட செய்யுளைப் பாடியவர் யாழ்ப்பாணம் முத்துக்குமார கவிராயர் (கி. பி. 18-ம் நூற்றாண்டு).*

இடப்பெயர்களை வைத்து நாடோடிக் கதைகளை உருவாக்குவது எல்லா நாட்டு மக்களுக்கும் பொதுப் பண்பாக இருக்கிறது. தமிழிலுள்ள ஒவ்வொரு இடப்பெயருக்கும் ஒன்றுக்கும் மேற்பட்ட கதைகள் வழங்கி வருவதை நாம் அறிவோம். அவைகளைப் பற்றித் தனிப் புத்தகம் எழுதலாம். ஐரிஷ் மொழியிலும் இத்தகைய கதைகள் தனி இலக்கிய வகையாக **Dinnsenchas** என்ற பெயரில் வழங்கி வருகின்றன. சீனமொழியிலும் இத்தகைய இலக்கிய வகைகள் உண்டு. இவைகளையெல்லாம், இன்னும் ஆழமாக ஆராயவேண்டியுள்ளது.

## தெரிவு நூலடைவு

### தமிழ் நூல்கள்

அருணசல சுவாமிகள், *காவேரி தீர்த்த மான்மியம்*, சென்டிரல் பிரஸ், ஈரோடு, 1910.

இராகவ ஐயங்கார், மு., *ஆராய்ச்சித் தொகுதி*, 1964.

இராசமாணிக்கனர், மா., பொருநை.

கனகசபை ஐயர்., *பினகி என்னும் பெண்ணை மாநதிப் புராணம்*, சென்ட்ரல் பிரஸ், சென்னை.

கிருஷ்ணசாமி, எஸ்., *தமிழில் தல புராணங்கள்*, நாகர்கோவில். 1974.

கிருஷ்ண பாரதிகள், திருநயம்., *திருவையாற்றுக் கப்பல்* (காவேரித் திருநதிச் சிறப்பு), விவேக சிந்தாமணி, 1902.

கோபாலய்யர்., *காவேரி ரகஸ்யம்*, திருவான்மியூர், சென்னை.

சங்கரலிங்கம் பிள்ளை., *தாமிரபரணி புராணம்*, 1868.

சஞ்சீவி, ந., 'பேராசிரியர் சேதுப்பிள்ளையவர்களின் பெருந்தமிழ்த் தொண்டு', *பேராசிரியர் டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா மலர்*, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1961.

சடகோபாசாரியார்., *துலாகாவேரிப் புராணம்*, சிப்பன் பிரஸ், திருச்சி, 1889.

சதாசிவபண்டாரத்தார், தி. வை., *இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும்*, 1961.

சரஸ்வதி ராம்நாத்., *காவேரியின் கதை*, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1967.

சிட்டி & ஜானகிராமன், தி., *நடந்தாய் வாழி காவேரி*, வாசகர் வட்டம், சென்னை, 1967.

சேதுப்பிள்ளை, ரா. பி., *தமிழகம் ஊரும் பேரும்*, 1956.

——— *ஆற்றங்கரையினிலே*, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1961.

சொக்கலிங்கம், ராய. சொ., *காவேரி*, அழகுப் பதிப்பகம், காரைக்குடி, 1960.

சோமலெ., *கன்னியாகுமரி மாவட்டம்* (1961), *கோயம்புத்தூர் மாவட்டம்.* (1961), *செங்கல்பட்டு மாவட்டம்* (1963), *சேலம்மாவட்டம்* (1961), *தஞ்சாவூர் மாவட்டம்* (1961), *திருநெல்வேலி மாவட்டம்* (1963), *வடார்க்காடு மாவட்டம்* (1961), பாரிநிலையம், சென்னை.

திருச்சிற்றம்பல முனிவர், *காவேரிப் புராணம்*, விவேகசந்திரோதய அச்சுக்கூடம், தக்கோலம், 1871.

துரைச்சாமி ஐயர், எஸ்., *துலாகாவேரி மகாத்மியம்*, வெ.நா. ஜுபிலி பிரஸ், சென்னை, 1910.

தெய்வசிகாமணிக் கவுண்டர், வே. ரா., வித்வான், (உரையாசிரியர்), வாலசுந்தரக் கவிஞர் இயற்றிய *கொங்குமண்டல சதகம்* தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ் கல்லூரி, பேரூர், 1971.

நவநீத கிருட்டினன், *டாக்டர் சேதுப்பிள்ளை*, கழக வெளியீடு, சென்னை, 1961.

——— *சொல்லின்செல்வர் சேதுப்பிள்ளை*, கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு-1961, மறுபதிப்பு-1963.

பொன்னழகன், உதகை., *ஆடிவரும் காவேரி*, நன்செய் பதிப்பகம், சென்னை, 1969.

முத்துசாமிக்கோனார், தி. அ., (பதிப்.) கார்மேகக்கவிஞர் இயற்றிய *கொங்கு மண்டல சதகம் - மூலமும் உரையும்*-கொங்கு மண்டல ஊர்த் தொகையும் உரையும் சேர்ந்தது, சென்னை, 1923.

வைத்தியலிங்கம், எஸ்., *உலகமும் நமது நாடும்* (புவியியல்), என். சி. பி. எச்., 1968.

வையாபுரிப் பிள்ளை, எஸ்., *திராவிட மொழிகளில் ஆராய்ச்சி*, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1956.

——— *சங்க இலக்கியம்*, பாரிநிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1967.

*ஆய்வு மலர்*, (கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைப் பழைய மாணவர் மன்ற ஆண்டு வெளியீடு) தொகுதி I, 1972.

*காவேரியாற்றுக் கல்லணை* (Mss.,). A Triennial Catalouge of Mss., (Tamil) Vol. III Pl 2R. No. 4336 - (1922) Madras Govt. oriential Mss. Library, Madras.

*சுரபிநதி வரலாறு* (Mss.), A Descriptive catalogue of Tamil Mss., Vol. XI. D. No. 3250 & 3863, Madras Govt. Oriental Mss. Library, Madras.

தாமிரபரணி மகாத்மியம் (Mss.,) A Descriptive Catalogue of Tamil Mss., Vol. VII. D. No. 2821, Madras Govt. Oriental Mss. Library, Madras.

பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை மணிவிழா மலர், 1961.

பொருநை மாதாவின் ஸ்தலபுராணம் - தாமிரபரணி ஸ்தல புராணம், விசயலட்சுமி விலாச அச்சியந்திர சாலை; பாளையங்கோட்டை, 1895.

## English Books

Allchins, F. R., **Neolithic Cattle - keepers of South India - A study of Deccan Ash mounds, 1963.**

Burrow, T., **Collected Papers on Dravidian Linguistics,** Annamalai Nagar, 1968.

Chinmulgund, P. J. and Mirashi, V. V., (Ed.,) **Review of Indological Studies in the Last Seventyfive years,** Poona, 1967.

Director of Military Survey (India)., **Gazetteer of India and Pakistan,** 12 Vols. Vol 1, 1950. Vol. 2 (not yet available)

Gnanamuthu, S., **Place names of Kerala - Trivandrum District,** M. Litt., Dissertation, Kerala University, 1965. (unpublished)

**Place names of Kanyakumari District,** Ph.D., Dissertation, Kerala University, 1973 (unpublished).

Haubrichs, W., **Untersuchung der Flurnamen der Saarlandischen Gemeinden,** Fachrichtung, 8.1. Germanistit, Universitae des Saarlandes.

Kurl, Shree Prakash., **A Socio - Economic Study of Place Names of Shaharanpur District,** Ph.D., Dissertation, Agra University, 1965.

Lahovary, N., **Dravidian origins and the West.**

Law, B. C., **Rivers of India,** Calcutta, 1944.

——— **Historical Geography of Ancient India,** Societe Antique de Paris, 1954.

Lele, Kasinath Lakshman., **Studies in the Historical and Cultural Geography and Ethnography of Rajaputana,** Ph. D., Dissertation, University of Poona, 1962 (unpublished).

Mathur, Madhur Mohini., **Studies in the Historical and Cultural Geography and Ethnography of Uttara Pradesh,** Ph. D., Dissertation, University of Poona, 1962 (unpublished)

Molemans Thiry., **Handleiding Bij Het Corpus, Naamkundig Repertorium, Machinale Bewerking Van de Onuit gegeven Toponymische Dokumentatie Vit Nederlands', Talig Belgie** (1925–1975), Instituut Voor Naamkunde, Leuven, 1978.

Mithila Sharan Pandey., **Historial Geography and Topography of Bihar,** Mothilal Banarsidass, Delhi, 1063

Mulay, Sumathi., **Studies in the Historical and Cultural Geography and Ethnography of the Deccan,** Ph. D., Dissertation, university of Poona, 1954. (unpublished).

Nachimuthu, K., **Place Names of Coimbatore District,** ph. D., Dissertation, Kerala university, 1973 (unpublished)

Nampoothiry, N. M., 'Indian Toponomy', **Onoma** 23, 1079, Pp. 114–149.

Philimore, R. H., Col., **Historical Records of the Survey of India,** Vol. I. (1945) 18th century A. D. Vol. II (1950) 1800—1815 A. D,

Ramge, Hans., **Wege und Aufgaben der Flurnamen for Chung in Hessen,** Mitteilungen des Hessischen Flurnamenarchivs Giessen, Giessen, 1980.

Sankalia, H. D., **Studies in the Historical snd Cultural Geography and Ethnography of Gujarat,** Deccan College, Post Graduate Research Institute, Poona, 1949.

Seshadri, T. K. **Historical and cultural Geography and Ethnography of South India from the Pallava Inscriptions,** Ph.D., Dissertation, University of Poona, 1954 (unpublished).

Severine Silva., **Toponomy of Canara,** Bombay, 1963.

Smith, A. H., **Preparation for the Country Place name Survey,** English Place name Society, 1954.

Subbarayalu, Y., **Political Geography of the Chola Country,** Madras, 1973

Suresh, B., **Historical and Cultural Geography and Ethnography of South India With Special reference to Chola Inscriptions,** Ph. D., Dissertation, University of Poona, 1961 (unpublished).

Viswanatha Reddy., **Village names of Cuddapah District**(Telugu), (year not known)

Waniwright, F. T., **Place Names and Archaeology and History,** London, 1962.

Census of India - 1961, Vol IX, Madras, Part X-1, Volume I, **District Census Hand Book - Coimbatore,** 1964.

**Descriptive Catalogue of Tamil** Mss., **Dr. U. V. Swaminatha Iyer Library,** Vol. II No. 469, 470. (1961)

**District Census Hand books** (1961) All Districts of Tamil Nadu.

**Encylopaedia Britannica,** Vol. 15 (1967).

**Gazetter of Coimbatore District,** 1966.

**Gazetter of Ramanathapuram District,** 1972.

**Gazetter of Salem District,** 1967.

**Report On the Third U. N. Conference On the Standardisation of Geographical Names** Athens, 1977.

**Transactions of the Archaeological Society of India,** 1958-59.

## Journals

**International Journal of Dravidian Linguistics** Vol, .2,No.1,1973,

**Journal of the Department of Tamil,** Kerala University, Kariavattom, Vol.I (1970), Vol.II (1971)

**Onoma,** Vol. XV (1970), Vol, XVII (1972/73), Vol. XVIII, No. 3, (1974).

**Pacific View Point,** Vol. II No. 2, (1970).

**Quarterly Journal of Mythic Society,** Vol. XX

**Research Papers,** Department of Tamil, Kerala University, Kariavattom, Vol. VII–VIII, 1976–77.

**Studia Hibernica,** Vol. I, 1961.

# பிற் சேர்க்கை

**I.** பக். 74 – *முதல் பத்தி இறுதியில் அமைய வேண்டிய அடிக்குறிப்பு:*

மரபிலக்கண ஆசிரியர்கள் இடப்பெயர்களின் தொடரமைப்புப் பற்றி ஆங்காங்கே சிந்தித்துள்ளனர் என்பதைத் தொல்காப்பியச் சொல்லதிகார உரைகளில் பார்க்கலாம். சாத்தன் தோட்டம், முருகன் குறிஞ்சி, யானைக் காடு, நம்பியூர் போன்ற பெயர்களில் 'அது' வென் ஆறும் வேற்றுமைக் கிழமைப் பொருள் விரிக்கலாம். சாத்தன் தோட்டம் என்பது சாத்தனது உடைமை தோட்டம் என்ற உடைமைக் கிழமை, முருகன் குறிஞ்சி என்பது முருகனது உரிமை நிலம் குறிஞ்சி என்ற கிழமைக் கிழமை, யானைக்காடு, நம்பியூர் என்பன யானை வாழும் காடு, நம்பி வாழும் ஊர் என்ற உறைநிலத்துக்கண் வந்த வாழ்ச்சிக் கிழமை. இந்நான்கும் நிலப் பிறிதின் கிழமை (தொல். சொல். 80, 98 சேனாவரையர் முதலியோர் உரை). அதாவது, ஆறும் வேற்றுமைக் கிழமைப் பொருள் விரிக்கத் தக்க இடப் பெயர்களில் பொதுக் கூறுக்கும் சிறப்புக் கூறுக்கும் உள்ள தொடர்பு, உடமை யாலும் (கைத்துள்ளமை), கிழமையாலும் (உரிமை), வாழ்ச்சியாலும் (வாழ்வது) ஏற்படலாம் (தொல். சொல். 94 கல்லாடனார் உரை). எனவே யானைக்காடு என்பதை யானையது காடு, யானை வாழும் காடு, நம்பியூர் என்பதை நம்பியது ஊர், நம்பி வாழும் ஊர் என விரிக்கலாம் என்று தெரிகிறது. மேலும் காட்டு யானை என்பதைக் காட்டது யானை என்றோ காட்டின் கண் யானை என்றோ (தொல். சொல். 98 சேனா, நச்சர், கல்லாடர்), காட்டுள் யானை என்றோ (மேற்படி சூத்திரம். இளம்பூ., தெய்வ., பெயர் தெரியா உரை) ஆறுவதோடு ஏழாவதும் விரிப்பது போல, யானைக்காடு, நம்பியூர் ஆகிய தொகைகளில் ஏழாம் வேற்றுமை உருபு விரிக்க இயலாது. பழமுதிர் சோலை போன்ற வற்றைச் சோலையிலிருந்து பழம் உதிர்ந்தது, உதிருகிறது, உதிரும் என்ற தொடராக எல்லைப் பொருள் விரித்துப்பின் பெயரெச்சமாக்க வேண்டும் என்பது சேனாவரையர் போன்றோர் கருத்து (தொல். சொல். 234).

**II.** 14. *தமிழிலக்கியமும் இடப்பெயர்களும் – ஒரு சிறு குறிப்பு* (183 – 86) *கட்டுரையில் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டியவை:*

அ. தொல்காப்பியம் பொருளதிகாரம் (செய்யுளியல்) 423ஆம் நூற்பா இளம் பூரணர் உரையில் இது பன்னிரண்டடியான் (பெருவல்லத்தைக்

கூற) வந்த இன்னிசைப் பஃறொடை வெண்பா எனவும், யாப்பருங்கல விருத்தி (செய்யுளியல்) 62-ஆம் சூத்திரத்தில் 'இது பன்னீரடியாற் பெருவல்லத்தைச் சொன்ன பஃறொடை வெண்பா' எனவும் கீழ்க்கண்ட பாடல் மேற்கோள் காட்டப்படும்:

"சிற்றாறு பாய்ந்துகளுஞ் சேயரிக் கண்ணினாய்
வற்றா வளவயலும் வாய்மாண்ட ஏரியும்
பற்றார்ப் பிணிக்கு மதிலும் படுகிடங்கும்
ஒப்ப வுடைத்தா ஒலியோவா நீர்ப்புட்கள்
தத்தி இரைதேருந் தையலாய் நின்னூர்ப்பேர்
ஒத்துணரும் வண்ண முரைத்தி யெனக்கூறக்
கட்டலர் தாமரையுள் ஏழுங் கலிமான்றேர்க்
கத்திருவர் ஐவருங் காயா மரமொன்றும்
பெற்றவழி தேர்ந்துண்ணும் பேயின் இருந்தலையும்
வித்தாகா நெல்லின் இறுதியும் பெற்றக்கால்
ஒத்தியைந்த தெம்மூர்ப்பேர் போலென்றாள் வானவன்கை
விற்பொலிந்த வெம்புருவத் தாள்".

(இப்பாடலுக்குப் பல பாடவேறுபாடுகள் உள்ளன எனினும் தொல் காப்பியம் கழகப் பதிப்பு (1967) இல் உள்ளபடி கொடுக்கப்பட்டுள்ளது)

மேற்கண்ட செய்யுள் எழுத்து வருத்தனம் (யாப். விருத்தி. 96.) அல்லது பிரேளிகை (விடுகவி) வகையைச் சார்ந்தது.

பெருவல்லத்திற்குத் தீக்காலிவல்லம் என்பது ஒரு பெயர் (பெரிய திருக். 30). அப்பெயர் சுட்டும் பாடல் இது. ஊர்ப் பெயரின் ஏழாம் எழுத்து — ல. தாமரையுள் =அதாவது கமலம் என்ற சொல்லில் உள்ளது. ஐந்தாம் எழுத்து—வ, கத்திருவர் என்பதில் உள்ளது. காயா மரம் என்பது கருங்காலி; அதிலுள்ள காலி, தீக்காலி வல்லம் என்பதில் உள்ளது. அவிழ் தேர்ந்துண்ணுத பேயின் தலை என்பது தீ. அது அப்பெயரின் முதலெழுத்து. வித்தாத நெல் என்பது வெதிரம் என்னும் மூங்கில் நெல். அதிலுள்ள ம் — அப்பெயரின் இறுதியாய் அமைகிறது. இதனுடன் க், ல் ஆகியவற்றைச் சேர்க்கத் தீக்காலி வல்லம் என்ற பெயர் கிடைக்கும். இத்தகைய விடுகவிகள் தோன்ற இடப்பெயர்கள் காரணமாக இருந்ததை இதன் மூலம் அறியலாம். ஆ. பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்படும்.

"அதுதான்,
மலையே யாறே யூரென் றிவற்றின்
நிலைபெறு மரபி னீங்காதாகும்." — என்றாராகலின்.

–தொல். பொருள். செய். 426. இளம். உரை. மேற்கோள்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 11 | ஆகியவனவற்றை | ஆகியனவற்றை |
| | 20 | (Onomastic Sciences) | Onomastic Sciences |
| | F.N.1 | ... Britanica | Brittanica |
| 3 | 12 | ... Hamenbuch | ... Namenbuch |
| 4 | 21 | பெராய்வு மையம் | பெயராய்வு மையம். |
| 5 | 11 | Naankunde | ... Naamkunde, |
| | F.N. 3 | | |
| | பத்தி 3வரி 6 | அவற்றிலிருத்து | அவற்றிலிருந்து |
| 12 | 13 | சிலபெயர்களும் அடங்கும் | சிறுபெயர்களும் அடங்கும். இவைகள் |
| | 17 | வழக்கில்லாமல் | வழக்கிலில்லாமல் |
| | 26 | Gazettee ... | Gazetteer ... |
| 13 | 10 | இந்நூலில் | இந்நூல் |
| 14 | 1 | யெயர்கள் | பெயர்கள் |
| | 29 | Millitary | Military |
| 15 | 2 | பெயர் ... | பெயர்த் ... |
| | F.N.18 | | |
| | பத்தி 3 | | |
| | வரி 5 | ab origine | ab origine |
| | வரி 7 | toungue | tongue (தொடர்ச்சி 16-ல்) |
| 16 | F.N.18 | | |
| | வரி 7 | Colonel R.H. Philinore | Colonel R.H.Philimore |
| 19 | 15 | கிராமங்களில் ... | கிராமங்களின் ... |
| 22 | 8 | ... வட்டங்களில் | வட்டங்களின் ... |
| 28 | 8 | சின்னக்கரக்கப்பள்ளம் | சின்னக்காக்காப்பள்ளம் |
| 31 | 5 | பைமாஷீ | பையாஷ் |
| 33 | 16 | I (nscription) | I. (nscriptions) |
| 36 | 8 | இளைய லை முறையின ரோடு | இளைய தலை முறையின ரோடு |

| | | | |
|---|---|---|---|
| 40 | 9 | வருணணை... | வருணணை (41- ஆம் பக்கம் – முதலிய என்று தொடர்ந்து படிக்கவும்) |
| 42 | மாதிரி அட்டையில் | | |
| | எண் 7.1 | கோவன் — புத்தூர் | கோவன் + புத்தூர் |
| | எண் 7.3 | — | > |
| | எண் 7.4 | —, —, — | >, >, > |
| 43 | 20–21 | எருமத்துன ஹள்ளி | எருமத்தன ஹள்ளி |
| 44 | 7–8 | செங்கழுநீர் பட்டு | செங்கழுநீர்ப்பட்டு |
| 44 | 17 | எடுத்துக் சுருக்க... | எடுத்துச் சுருக்க... |
| 44 | 26 | மக்கட் தொகை | மக்கள் தொகை |
| 45 | 3 | இன்று | இங்கு |
| 45 | 16 | ...Egymologies | ...Etymologies |
| 46 | 11 | ஒலிப்பெயர்பு | ஒலிப்பெயர்ப்பு |
| 48 | 6 | காணத்தையும் | காரணத்தையும் |
| | 8 | ... காட்டுவது | ... கட்டுவது |
| 49 | 30 | பலவையாகப் ... | பலவகையாகப் ... |
| | 31 | ... Edwall | ... Ekwall |
| | F.N. 35 | Wani wright F.T. | Wainwright F.T. |
| 50 | 15 | தெளிவு | தெரிவு |
| | 24 | ...Country... | ...County... |
| 51 | 14 F.N.38 | F.T. Wani wright | F.T. Wainwright |
| 54 | 1 | பார்பிர்ஸ் ... | பார்பர்ஸ் ... |
| | 17 | பொதுக்கூறுகள், விகுதிகள் (Generics, Suffixs) | பொதுக்கூறுகள் / விகுதிகள் (Generics/Suffixes) |
| 57 | 24 | ... பகுதியிலிருந்து | ... பகுதியில் |
| | 27 | ஆல்சின்ஸ் என்பார் பூதி ... | ஆல்சின்ஸ் என்பார், பூதி எனப் பெயர்தாங்கிய பல ஊர்களின் அருகில் சாம்பல்.... |
| 59 | 3 | திலே அமைப்பை | நில அமைப்பை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| | 22 | மேற்கு நோக்கி 18ம் | மேற்கு நோக்கி 18ம் நூற்ருண்டு வரை பரவியிருத்தலும் 16ஆம் ... |
| 60 | 9 | கிராமங்களில் | கிராமங்களின் |
| 63 | 21 | தமிழ்நாட்டிலுள்ள | தமிழ்நாட்டிலுமுள்ள |
| 64 | 8 | பல மெழிகள் | பலமொழிகள் |
| 65 | 7 | பொருளின்மையும் | பொருளின்மையையும் |
| | 12 | (Questionaire ... | (Questionnaire ... |
| 67 | 29 | மிகைத் திரியால் | மிகைத் திரிபால் |
| | 32 | தொஐ | தொகை |
| 68 | 10 | அஃறிஊை | அஃறிணை |
| | 12 | என்ருல் | என்றல் |
| | 14 | மானும் | மரனும் |
| 69 | 17 | ஆராயப்படுகின்றன | ஆராயப்படுகின்றது. |
| 73 | 23 | எல்லோமே | எல்லாமே |
| 75 | 18 | அண்ணு அத்தேரி | அண்ணுஅத் தேரி |
| 82 | 9 | அரித்துவராமங்கலம் | அரித்துவாரமங்கலம் |
| | 17 | திருச்சோறை | திருச்சேறை |
| 83 | 23 | நில | சில |
| | 32 | முகுந்தலூர் | முகுந்தனூர் |
| 85 | அ.கு.1 வரி 4-5 | அழைக்கப்படுகிறது | அழைக்கப்படுகின்றன. |
| 87 | அ.கு.2 வரி 14 | ...ஸ்தானத்தால் | ...ஸ்நானத்தால் |
| | வரி 17 | ...Triennia... | ...Triennial... |
| 103 | 23 | பசிப்பகம் | பதிப்பகம் |
| | 29-31 | Gazetter | Gazetteer |
| 109 | 1 | இவற்றின் | இவற்றில் |
| | 13 | நம்பிகையை | நம்பிக்கையை |
| | 25 | நூலில் | நூலின் |
| 116 | 2 | ஒக்கில், உட்டர் | ஒக்கிலி, ஒட்டர் |
| | 3 | சங்கிலி | சக்கிலி |
| | 5 | பாம்பான் | பாப்பான் |
| | 11 | நடக்காவேரி | நடுக்காவேரி |
| 117 | 16 | ஊர்விளக்கப்பெயர் | விளக்கப்பெயர் |
| 120 | 5 | முந்நூறூர்த்தே... | முன்னூறூர்த்தே |

| | | | |
|---|---|---|---|
| | 21 | ஊரெனஊராச்... | ஊரென உணராச்... |
| 121 | 16 | ஊர்ப்பெயர்களில் | ஊர்ப்பெயர்களின் |
| | 19 | நன்ணு | நண்ணு |
| 123 | 33 | இலட்சு | இலட்சுமி |
| 123 | 22 | இரசான்னம் | இராசான்னம் |
| 125 | 9 | அந்தண ... | அந்தண் ... |
| 131 } 146 } | 31 } 1 } | பெரும் பாக்கன் | பெரும்பாக்கம் |
| 135 | 4 | பொதுக்கூறுகளை | சிறப்புக்கூறுகளை |
| 136 | 14 | கோணுடு | கோனுடு |
| | 30 | குச்சி | கச்சி |
| 141 | 30 | பெருந்றை | பெருந்துறை |
| | 31 | ஏழல் குன்றம் | ஏழில் குன்றம் |
| 144 | 22 | முள்ளுக் கானாம் | முள்ளூர்க்கானம் |
| 145 | 16 | நெடுங்கோடுட்டனர் | நெடுங்கோட்டனர் |
| | 33 | வண்ணக்கண் | வண்ணக்கன் |
| 148 | 8 | இடப்பெயர்கன் | இடப்பெயர்கள் |
| 149 | 19 | அரசிற்கரைப் புத்தூர் | அரிசிற்கரைப்புத்தூர் |
| 150 | 11,30 | பாத்தியவாம். | பாத்தியதாம். |
| | 16 | புள்ளாலங்காடு | புள்ளாலங்கோடு |
| 154 | 20-21 | சொல்லாராய்ச்சி | பொருளாராய்ச்சி |
| | 21 | ஊர்பெயராய்ச்சி | ஊர்ப்பெயராராய்ச்சி |
| 157 | 4 | உட்தலைப்புகள் | உள்தலைப்புகள் |
| 159 | 6 | ஆகியவற்றை | முதலியவற்றை |
| 162 | 1 | சேதுபிள்ளை | சேதுப்பிள்ளை |
| | 20 | அவை | தக்க |
| | 27 | முப்பது | நாற்பது |
| 164 | 19 | ந. நஞ்சீவி | ந. சஞ்சீவி |
| | 24 | நவநீவகிருட்டிணன் | நவநீதகிருட்டிணன் |
| 166 | 29 | ஊர்களை | ஊர்கள் |
| 168 | 6-7 | ...பெயர்களில் | பெயர்களில்மிகக் குறைந்த விழுக்காடே அமைந்துள்ளன. இதுவும் |
| 173 | 23-4 | தோன்றியிருக் கின்றது. | தோன்றியிருக் கின்றன. |
| 180 | 2 | செய்கின்றன. | செய்கின்றது. |

| | | | |
|---|---|---|---|
| 181 | 18 | குறிப்பு நாடு | குறுப்பு நாடு |
| | 31 | யொடுவங்கழும் | யொடுவங்கமும் |
| 182 | 7 | 380 என்பது | 380 |
| | 17 | இடங்களுமே | இடங்களுமே கொங்கு மண்டலத்தில் மிகப்பழமை யானவை என்று கருதப் பட்டிருக்கின்றன. |
| 188 | 29 | Vol. III Pl 2R | Vol. III, Pt .2 R. |
| 189 | 26 | Germanistt | Germanistik |
| | 27 | Universitae | Universitaet |
| 190 | 15 | 1063 | 1963 |
| | 23 | 1079 | 1979 |
| | 28 | For Chung | Forchung |
| 191 | 6 | Country | County |
| | 16 | Waniwright | Wainwright |
| | 27, 28, 29 | Gazetter | Gazetteer |

# பொருளடைவு

## 1. தமிழ்

## 2. ஆங்கிலம்

# பெயரடைவு

## [ஆசிரியர், நூற்பெயர்கள் மட்டும்]

